99041

ஸ்ரீ ...மே

# ஜோதிடம் விஞ்ஞானமே




கணபதி வெளியீடு

13, ப்ராம்மணத் தெரு

...ாப்பேட்டை, : : சென்னை-15.

# ...ந்தியன் பாங்க் லிட்.

(ஸ்தாபிதம்: 1907)

தலைமை ஆபீஸ்:

**இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்,**
**வடக்கு பீச் ரோடு, சென்னை-1.**

தென்னாடு பூராவும், பம்பாய், புது டில்லி, கொழும்பு, சிங்கப்பூர், எப். எம். எஸ். முதலிய இடங்களிலும், சென்னையில் 22 இடங்களிலும் கிளை ஆபீஸ்கள் உள்ளன.

| | |
|---|---|
| அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் | — ரூ. 1,00,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | — ரூ. 66,15,445 |
| ரிசர்வ் & இதர நிதிகள் | — ரூ. 87,50,360 |
| டெபாஸிட்டுகள் | — ரூ. 35.21 கோடிகள் |

போர்ட் ஆப் டைரக்டர்ஸ்:

செட்டிநாடு குமாரராஜா M. A. M. முத்தையா செட்டியார்
R. K. வெங்கிடாசலம்
R. சுந்தரமய்யர்
O. M. SP. L. M. மெய்யப்ப செட்டியார்
ராவ்பஹதூர் T. S. கச்சாபகேச முதலியார்
செட்டிநாடு ராஜா டாக்டர் சர். M. A. முத்தைய செட்டியார்
ராவ்பஹதூர் டாக்டர் M. R. குருசாமி முதலியார்
L. அழகசுந்தரம் செட்டியார்
P. V. RM. குழந்தையன் செட்டியார்
K. பாலசுப்பிரமண்ய அய்யர்
ராவ்சாஹேப் E. M. முத்தப்ப செட்டியார்
K. அருணாசல முதலியார்

சகலவிதமான பாங்கியின் அலுவல்களும் மற்றும் அயல்நாட்டு ஏற்றுமதி வர்த்தக சம்பந்தமான எல்லா விஷயங்களும் ஏற்று நடத்தப்படுகிறது.

*London Agents:*

**WESTMINSTER BANK LTD.**

*New York Agents:*

**FIRST NATIONAL CITY BANK OF NEW YORK**

டி. பி. பார்த்தசாரதி, காரியதரிசி

# ஜோதிடம் விஞ்ஞானமே



ஆசிரியர்கள் :

K. S. V. S. மணியன், B. A., B. L.

&

K. கணபதி (கணபதி ஜோஸ்யர்)



அச்சிட்டோர் :

ஸ்ரீ ஸுதர்சன் பிரஸ்,

111, மவுண்ட் ரோட், சென்னை-6.



உ



ஏப்ரல் 1958

முதற்பதிப்பு

விலை ரூ. 2/-

# புராணகாலத்து இந்தியா



# முன்னுரை

இவ்வுலகில் யாவரும் இதுவரை பல ஜன்மங்களெடுத்துள்ளோமென்றும், ஒவ்வொரு வாழ்க்கையிலும் நாம் அனுபவிப்பன யாவும் ஊழ்வினைப் பயனே என்றும் நமது முன்னோர்கள் உபதேசித்துள்ளனர். வருங்காலம் எப்படியென அறியவும், ஏதாவது ஓர் விஷயத்தின் பலன்களை தெரிந்து கொள்ளவும், பல மார்க்கங்களை, பல ரிஷிகள் கண்டு பிடித்து, இயற்றி, அனுஷ்டித்து, சிஷ்யர்களுக்கு உபதேசித்து வந்தனர்.

அவைகள் சாமுத்ரிகா லக்ஷணம், ரேகை சாஸ்திரம் சொப்பனம், சகுனம், ஜோதிடம் என பல நூல்களாகும்.

ரேகை சாஸ்திரம் மூலம் பொதுப்பலனைத்தான் அறியலாம். தவிர ரேகையோ மாறிக் கொண்டே வருகிறது. நூதனமாகவும் ஏற்படுகிறது. 12 வயது வரையில் பார்ப்பதுவும் சிறந்ததல்ல.

சொப்பனத்தால் அறிவதோ ஏதாவது ஓர் பலனைப் பற்றியேயாகும்.

சகுனமும் ஏதாவதொரு செய்கையால் நன்மை விளையுமா விளையாதா என்று தான் தெரிவிக்கும்.

ஆனால், ஜோதிடமோ சகல விஷயங்களையும் தெரிவிக்கும். தன் வாழ் நாளில் நடைபெறும் சம்பவங்களை அறியவும், இந் நூலை ஆராய்ச்சி புரியவும், தவிர அதிநுட்பமாக தினசரி பலனைக் கூறவும், சம்பவங்கள் நடைபெறும் தேதி காலத்தைக் குறிக்கவும் உதவும். அவ்வளவு சிறந்த விஞ்ஞானம் ஜோதிடமாகும்.

இதன் நுட்பங்களை அறியவும், உண்மையை உணரவும், விஞ்ஞான ஆராய்ச்சிபுரியவும், நுண்ணறிவும், அதிக அநுபவமும், விடாமுயற்சியும் தேவை.

பல்லாண்டுகளாகப் பல ஆராய்ச்சிகள் புரிந்து வடமொழியிலும், தமிழிலும், ஆங்கிலத்திலும் பாடமாகவும், வசனமாகவும் இயற்றியுள்ள நூல்களைக் கற்று, இத்துறையில் சொந்த அனுபவத்தையும், ஆராய்ச்சியில் அறிந்துகொண்ட உண்மையையும் ஆதாரமாகக் கொண்டு எல்லோருக்கும் இந்த விஞ்ஞானத்தின் பெருமையை உணரச் செய்ய வேண்டும் என்கின்ற ஒரே ஆசை, எங்கள் உள்ளத்தைப்பற்ற, நாங்கள் இந்நூல் இயற்ற முனைந்தோம்.

ஜோதிடம், சாஸ்திரம் அல்ல என்று அபிப்பிராயம் உள்ள வர்கள் நாங்கள் வெளியிடும் புஸ்தகங்கள் யாவற்றையும் படித்து இந்நூலைக் கற்றபின் தத்தம் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்வர். ஜோதிடத்தைக் கற்று உணர்ந்தோர் தாம் அறிந்த விஷயங்களைப் புதுப்பித்துக் கொள்ள உதவும். இதுவரை சிலர் அறியாத சில நூதன விஷயங்களை இதில் காணலாம். அவை களை ஆராய்ந்து உண்மையை அறிந்து பலனை சொல்ல இந்நூல் சந்தர்ப்ப மளிக்கிறது.

ஜோதிடரை நாடிச் செல்வோருக்கு இதில் எடுத்துரைக்கப் பட்ட கருத்து பெருந்துணை புரியும்.

ஜோதிடம் கற்க விரும்பும் மாணுக்கருக்கு இப்புத்தகம் தக்கதோர் ஆரம்ப ஆசானுய் அமையும்.

புத்தம் புதிய கலைகளைத் தமிழில் மொழிப் பெயர்த்து வரும் இந்நாளில் ஜோதிடம் பற்றிய இந்நூல் தொகுதியும் அரியணை ஏறி அழகுத் தமிழை அணி செய்வதாக அமையும். இந்நூல் 9 பாகங்களாக வெளிவர இருக்கின்றன.

இந்நூலை கற்றுணர போதனை செய்து வந்த எமது குரு ஸ்ரீ K.S. கிருஷ்ணமூர்த்தி அய்யர் அவர்களுக்கு எங்கள் முதல் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்புத்தகத்தை வெளியிட உடனிருந்து உதவி புரிந்த நண்பர்கள் அனைவர்களுக்கும், இதைஅச்சிட்டு உதவிய 'மாலா' பத்திரிகையாளருக்கும், முகப்புப் படத்தை அழகுறத்தீட்டித்தந்த 'அரசு'விற்கும் எங்கள் நன்றி உரித்ததாகும்.

ஆண்டவனின் அருளுடனும் அன்பர்களின் ஆதரவுடனும் எங்கள் இம்முயற்சி வெற்றி பெறுமென்று நம்பி நாங்கள் உபாஸித்து வரும் கருணமூர்த்தியாகிய **உச்சிஷ்ட மஹா கணபதியை** மன மொழி மெய்களால் வழிபடுகின்றோம்.

சென்னை
20-4-58

K. S. V. S. **மணியன்**, B. A., B. L.
K. **கணபதி**.

# ஜோதிடம் சாஸ்திரமா?

விடியற்காலே. கடிகாரம் தொடர்ந்து மணி அடிக்கிறது. கல்லூரியில் பரிகைஷ எழுதி முடித்த மணி என்பவர் தூக்கத்தினின்றும் எழுந்திருந்து, தம்பி கணபதியை எழுப்பி, பொழுது புலரும் வரை படிக்கச் செய்தார். சிறிது நேரத்தில் பொழுதும் புலர்ந்தது. காப்பி சாப்பிடலாம் என கீழே இறங்கி வருகின்றனர். தாயோ ஒரு நாளுமில்லாமல் புரண்டு படுத்துக்கொண்டு மேலும் உறங்குகிறார்.

"அம்மா, அம்மா", நீ என்ன இன்றைக்கு இப்படி தூங்குகிருயே" என எழுப்பினன் கணபதி.

அம்மாவோ "வாடா ஞானமூர்த்தி. இப்போதுதான் வருகிருயா? வா, வா" என தூக்கத்திலேயே உறக்கக் கூறி, திடுக்கிட்டு எழுந்தாள்.

"என்னம்மா? என்னது? சொப்பனமா?"

"இல்லேடாக் கண்ணு. இராத்திரி எல்லாம் இனிமே நம்ப வருங்காலம் எப்படி இருக்குமோ என்னமோ என்று யோஜனே செய்துகொண்டே இருந்தேன். விடியற்காலேயில் தான் நானே என்னே அறியாமல் அயர்ந்து தூங்கினேன். அப்போ, நம்ப ஞானமூர்த்தி வேலேக்குப்போய் எத்தனே வருஷமாச்சு. இந்த தடவை ரஜாவிலே வந்திருக்கிருப் போல சொப்பனம் கண்டேன். நீ கூப்பிட்டாய் பாரு. அது அவன் கூப்பிட்டாற்போல சொப்பனத்தில் தோன்றிற்று. அதனுல்தான் வாடா வா அப்படின்னு அவனே நான் தூக்கத்திலேயே கூப்பிட்டிருக்கேன்." என்ருள்.

"ஏம்மா! அப்படி சொப்பனம் பார்க்கலாமா? தப்பு ஒன்றுமில்லையே." "விடியற்காலையில் கண்டால் நல்லது. உடனே பலிக்கும்" எனச் சொல்வது உண்டு. எனக்கு நம்பிக்கை உண்டு. வந்தால் அதிருஷ்டம் எனக்கும் அவனைப் பார்க்க வேண்டும் என விருப்பம் நாளாக ஆக அதிகமாக இருக்கிறது.

(கதவைத் தட்டும் சப்தம் கேட்கிறது...படபடவென மீண்டும் கேட்கிறது)

மணி: "யாரது" என்று கேட்டுக்கொண்டே வந்திருப்பவரைக் காணச் சென்றான். தாளைத் திறந்தான், என்ன ஆச்சரியம்! வாங்கோ அண்ணா, டேய் கணபதி, அண்ணா ஞானமூர்த்தியே வந்திருக்கிறார். டாக்ஸியில் வந்து இறங்கி, திண்ணையில் சாமானை இரக்குகிறார்டா. வா சீக்ரம் உள்ளேயே இருக்கிறாயே" [கணபதி ஒரு குதி குதித்துக் கொண்டு ஓடோடி வருகிறான்.] .

ஞானமூர்த்தி தம்பிகளைப் பார்த்து "என்னடா எல்லோரும் ஸௌக்கியமாயிருக்கேளா? அம்மா எங்கே? காப்பி போட்டுக்கொண்டு இருக்காளா, என்ன? அம்மா ஸௌக்யமா? எனக் கேட்டுக்கொண்டே பெட்டியைத் தூக்கப் போனான். தம்பிகள் இருவரும் "அண்ணா, அண்ணா நாங்கள் கொண்டு வருகிறோம். நீ கீழே வைத்து விடு" என்று கையிலிருந்து பிடுங்கிக்கொண்டு, எல்லா சாமான்களையும் ஒவ்வொன்றாகக் கொண்டு வந்தனர்.

தாயாரும் முகத்தைத் துடைத்துக்கொண்டு, உள்ளே வரும் குழந்தைக்கு எதிராகப் போனால் சகுனப் பிழையாகி விடுமோ என அஞ்சி, ஆசையையும், ஆத்திரத்தையும் அடக்கிக்கொண்டு, தன் கணவன் படத்தை நமஸ்கரித்துக் கொண்டிருப்பதுபோல், ஞானமூர்த்தி உள்ளே வரும் வரை காத்திருந்தாள். உள்ளே ஞானம் வந்ததும் அம்மா எழுந்திருந்து "வாடா, என் கண்மணி" என உறக்கக் கூறி இறுக ஓர்முறை அணைத்துக்கொண்டு "ஏண்டா, நீ வரப் போறேன்னு ஒரு கடிதம் கூடப் போடக்கூடாதா. என் கண்ணே வாடா, வா உட்காரு" என்றாள்.

கணபதி : அம்மா நீ கொஞ்சம் இரு. நான் ஒன்று சொல்லப்போறேன். அண்ணு இங்கே பார். ஒரு சமாசாரம் நீ வந்துட்டாப்போலே இப்போதான் சொப்பனம் கண்டேன் என்று அம்மா சொன்னுள். நான் கூட அப்படி சொப்பனம் பார்க்கலாமான்னு கேட்டேன். அம்மா அது உடனே பலிக்கும்னு ஜோஸ்யர்கள் சொல்வார்கள். என்னமோ பார்க்கலாமென்ருள். பார் அண்ணு பலித்து விட்டது. என்ன ஆச்சரியம்!"

"ஏம்மா, வாஸ்தவமாவா சொப்பனம் கண்டாயா?"

"ஆமாம் அப்பா, நிஜந்தான்."

"பார் அம்மா. நான் வேலேக்குப் போனதிலிருந்து இன்று வரைக்கும் ஜோஸ்யமே, படிச்சுண்டு வந்தேன். பெரிய மஹான் ஒருவர் அங்கே இருக்கிருர். என்னிடம் அவருக்கு ரொம்பப் பிரியம். நன்ருகச் சொல்லியும் கொடுத்தார். உண்மையாக நான் நிறைய கற்றுக்கொண்டு விட்டேன். முதலிலே ஜோஸ்யமாவது, ஹேஸ்யமாவது என்றெல்லாம் இருந்தேன். இப்போ அடியோட அந்த எண்ணம் மாறிப்போச்சு. என்ன ஆச்சரியகரமானது தெரியுமா? எல்லாம் மெதுவாகக் கொஞ்சம் கொஞ்சமாகச் சொல்கிறேன். வா முதலிலே காபி சாப்பிடுவோம்."

"கணபதி, ஹோட்டலிலிருந்து இட்லி, காப்பி வாங்கிண்டு வந்து விடடா."

"அம்மா, உனக்கு முன்னுடியே நான் பக்கத்தாத்து பையனை அனுப்பி விட்டேன். இதோ வந்து விடும."

[காபியும் வர, எல்லோரும் சாப்பிட்டனர்.]

"ஞானம், நீ உடம்பு ஸௌகர்யமாக இருக்கிருயா? ஏன் இளேச்சாப்போல் இருக்கே. வேலை ரொம்பவாப்பா?"

இல்லேயம்மா. புஸ்தகாலயத்திலேயே படிக்க வேண்டியதுதான் எனக்கு வேலை. நான் படிக்க வேண்டும் பழைய நூல்களிலிருந்து விஷயங்களை யெல்லாம் கோர்வையாக எடுத்துப் புத்தகமாக அச்சிடக் கொடுக்க வேண்டும்,

இவ்வளவுதான். இது எனக்கு ரொம்ப பிடித்த வேலே. எனக்கு ஸௌகர்யத்திற்குக் குறைவு ஒன்றுமில்லை.

"இதுவரை நீ எழுதி என்னென்ன புஸ்தகம் தயார் பண்ணியிருக்கிறார்கள்?"

எல்லாம் ஜோதிட நூல். ஜோஸ்யமே.

"அப்படின்ன உனக்கு ஜோஸ்யம் பார்க்க வருமா?"

வாஸ்தவமா, நான் நன்ன பார்ப்பேன்.

ஜோஸ்யம்ன என்ன அண்ண? என குறுக்கிடுகிறன் கணபதி.

சொல்கிறேன். ஊக்கமாய் கேள். காசை இருட்டிலே கீழே போடுகிறேம். எடு என்றல் அதைத் தேடி எடுக்க வெளிச்சம் வேண்டுமில்லையா. அதே போல் "நம்முடைய வருங்காலம் எப்படி" எனக் கேட்டால், யாரால் சொல்ல முடியும். சிலர் 'நாம் ஒன்று நினைக்க, தெய்வம் ஒன்று நினைக்கிறது' என்பார்கள். சிலர் ஏமாந்து விட்டேன் தவறி விட்டது. அல்லது இந்த முறை நடைபெறவில்லை என்பார்கள். ஆனல் ஜோதிடம் தெரிந்தவனே "இவ்விதமாக எதிர்பார்ப்பாய் யத்தனிப்பாய். பலிக்குமா பலிக்காதா" என சொல்லக்கூடும். இது புராதீனமான ஒரு சாஸ்திரம். இதர சாஸ்திரங்களைப்போல் அல்ல. ரஸாயன விஞ்ஞானிகள, சிகப்பு நிறமான ஐயோடின் உடன் கஞ்சி ஒரு சொட்டு சேர்த்தால் நீல நிறமாகும் எனக் காட்டுவார்கள. ஜோதிடத்தை அவ்விதம் காட்ட முடியாது. அனுபவத்தில் அறியலாம். உணரலாம். மகிழலாம். பயன் படுத்திக்கொண்டு நன்மை பெறலாம். இதற்கு முதலாவது நம்பிக்கை வேண்டும்.

"ஏண்ண? நம்பு, நம்பு என்றல் இந்த காலத்திலே நடக்காது. யார் நம்புவார்கள். பிரயத்யக்ஷமாக காணக் கூடுமானல்தான் 'ஆம்' என ஆமோதிப்பார்கள். மெச்சுவார்கள். ஆகவே இதில் பாடுபட்டு கண்டுபிடித்துக் கூறியவைகள் நடைபெற்றன என்றல், அப்பொழுது நம்பலாம்." என கேட்கிறன் மணி. அதற்கு ஞானம் தலே

வலி என்றதும், அனுஸின், ஸாரிடான் என வைத்தியர் கொடுத்தால் நம்பித்தான் சாப்பிடுகிருய். உனக்கும் தலை வலி மறைகிறது. அவ்விதமே உலகம் ஸ்ருஷ்டி ஆனது முதல் பெரிய பெரிய மஹரிஷிகள் அவ்வப்பொழுது கண்டுபிடித்து, உலகத்தார் உய்யும் பொருட்டு, உபதேசித் ததை நம்ப வேண்டும். நம்பித்தான் நானும் படித்து வரு கிறேன். உண்மையாகவே இருக்கிறது. காற்று இருப் பதை நீ பார்க்கிருயா. அது மேலே அடித்தால் உணர் கிருய் அல்லவா? எல்லாம் அனுபவித்துத்தான் சொல்ல வேண்டும். படித்து பாடுபட்டு உண்மையை ஆராய்ந்தால் ஜோதிடம் ஒரு சாஸ்திரம் என யாவரும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

கணபதி: அண்ணு நீ ரஜாவிலோ வந்திருக்கிருய். பரீக்ஷை இன்ருேடு முடிந்துவிடும். எனக்கும் 2 மாதம் ரஜா உண்டு. நீ கற்றுக்கொடு. நானும் எல்லாம் கற்றுக் கொள்கிறேன்.

ஆகட்டும். இவ்வளவு சீக்கிரம் வந்துவிடாது. கூர்மை யான ஆயுதம் கொண்டு எப்படி வெகு ஆழம் தோன்றி, ஸ்ரமத்தை பாராமல் விடாது முயற்சி செய்பவர்தான் தண்ணீரைக் காண்பரோ, அப்படியே தன் நுண்ணறி வாலும், ஆற்றலாலும், ஆராய்ச்சியாலும் தொடர்ந்து படித்து பரிசிலனை செய்வதாலும்தான் அறிய முடியும். நான் முதல் இந்த ரஜாவில் போதிக்கிறேன். அப்பால் பிரசுரித்தால் புத்தகங்களை ஒவ்வொன்ருக அனுப்பு கிறேன். ஒரு சமாசாரம் கவனித்துக்கொள்: அரைகுறை யாகப் படித்தவர்களிடம் போய் கேட்காதே.

"சரி! ஏன் நன்ருகப் படித்தவர்களைக்கொண்டு பள்ளிக் கூடம் நடத்தினல் எல்லோருக்கும் நல்லது அல்லவா ?"

ஜோஸ்யம் தெய்வாதீனமான சாஸ்திரம் இன்ஜி னியரிங், மருந்து இவைகளுக்கு எல்லாம் கல்லூரிகள் கட்டிய வண்ணமாக இருக்கிருர்கள். அவைகள் உண்மை யாகவே அத்யாவசியம். அரசாங்கம் நன்மைதான் செய் கிறது. அதில் ஆக்ஷேபனையில்லை. ஆனல் பல்லாண்டு களாக இந்தியாவிலே, ஜோதிடத்தை ஏதோ சில காரணங்

களாலே அபிவிருத்தி செய்யாமலே விட்டு விட்டனர். மஹ ரிஷிகள் அழியாத இந்த மரத்தை நட்டார்கள். இது ஒரு சிரஞ்சீவியான கல்பக விருக்ஷம் போன்றது. இந்த விருக்ஷத்தை வளர்த்தால், படர்ந்து வளரும். பலனையளிக் கும் இதர சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்கின்றனர். 20 ஆண்டுகளுக்கு முன் உபயோகப்படுத்திய மருந்து இப் பொழுது யிருக்கிறதோ? அது பறந்துபோய் நூதனம், நூதனமாக மேலும் சக்தியுள்ளதாக கண்டுபிடித்து கொடுக்கின்றனர். நற்பலனடைகிறோம். இதன் காரணம் ஆராய்ச்சி செய்வதற்குக் கிடைக்கும். ஆதரவேயாகும். ஜோஸ்யத்திற்கு அவ்வித உதவி கிடையாது. ஆனல் பலர் தூஷிப்பார்கள். கேவலமாயும் சொல்வார்கள். அவ் விதமே சிலர் அதை விடாது அறிந்தும் கொள்வார்கள். அதனல் உள்ள நன்மையைத் தாமும் தம்மை ஆஸ்ரயிப் போரும் அடைவார்கள்.

உலகம் உண்டான காலத்திலேயே இந்த நூலை இயற்றினர்கள். குரு சிஷ்ய பரம்பரையாகவே வந்தது. அப்பொழுது அச்சகம் ஏது? கடிதம் ஏது? ஆகவே சிஷ்யர் களின் திறமையைப் பொறுத்திருந்தது. தலைமுறை தலை முறையாகக் கற்றுவந்த இந்தநூல், பனை ஓலையில் எழுதப் பட்டவைகளோ, ஓரிடத்தில் ஒழுங்காகச் சேர்த்து வைக் கப்படாமல் சில பகுதிகள் அகப்பட்டும், சில பகுதிகள் மறைந்தும் விட்டன. சிலர் ஓலைச்சுவடிகளை தங்கள் ஆஸ்தி எனவும், பொக்கிஷம் எனவும், ரகஸ்யமெனவும், பெருந் தன்மையின்றி மறைத்து வைத்தே மறைந்தனர்.

தவிர, நம்நாடு பல பாஷை பேசிவரும் நாடு. பேசின நாடு. பேசப்போகும் நாடு. அவர்களோ தத்தம் பாஷை களில் எழுதினர்கள். இலக்கியமோ கடினம். பதங்களோ மேலும் கடினம். இதை ஒழுங்காய் அறிந்து கொள்வது கஷ்டம். புரிந்து எடுத்து உரைக்கும் பெருந்தன்மை உள் ளவர்களோ, மிகக் குறைவு.

ஓர் பாஷை பேசுமிடமிருந்து மற்றொரு பாஷை பேசு வோர் நாடு சென்று இந்த சாஸ்திரத்தை கலந்து பேசி அபிவிருத்தி செய்ய தற்காலம்போல் அதிக வசதி கிடை

யாது. தபால் மூலமும், அபிப்ராயங்களை மாற்றிக் கொள்ளவோ, மார்க்கம் இல்லாதிருந்தது. இருந்தாலும், இந்தியா, அரேபியா, எகிப்து முதலான இடங்களில் மஹா வித்வான்கள், மேதாவிகள் இருந்தனர். இப்பொழுது பற் பல சாதனங்களையும் கருவிகளையும் வைத்துக்கொண்டு கணக்கிட்டு கண்டுபிடிக்கின்றனரே, அவைகளை அக்காலத் தில அம் மேதாவிகள் எவ்விதம் கண்டுபிடித்தனர் என் பதை யாராவது சொல்ல முடியுமா? இயலாது. அவர் களுக்குத் தூரதிருஷ்டிக் கண்ணாடி ஏது? கணக்கிட காகித மேது? பென்சில் ஏது? என்ன ஸௌகர்யம்தான் இருந் தது அப்பொழுது? அப்படியிருந்தும் பூமி சுற்றுவதையும், அதன் வேகம் முதலியன கண்டுபிடித்து, அவற்றிற்கும் பூமிக்கும் உள்ள தூரத்தையும் அவற்றின் வடிவம், வேகம், சுற்றிவரும் பாதை முதலியன உபதேசித்ததில் தவறு உண்டா? கிரகணம் எந்த கிழமை, எத்தனை நாழிகை, எத்தனை விநாடிகளில் பிடிக்கும், எவ்வளவு நேரம் நீடிக்கும், எப்பொழுது விடும் என புகட்டியதில் பிசகு உண்டா? அவ்விதம் அவர்கள் பூமி சுழல்கிறது என்றனரே. சுழல் வதை நாம் பார்க்க முடிகிறதா? இல்லையே. உடனே அவர் கள் கூறுவது தவறு எனச் சொல்ல முடியுமோ? என் சொல்லவில்லை. வான சாஸ்திர ஆராய்ச்சி நிபுணர்களும், அதையே கூறுவதால் ஒப்புக் கொள்கிறோம். அக் காலத் தில் அதே மஹரிஷிகள் ஜோதிட நூலும் இயற்றி உள்ள னர். பலா பலன்களைப் புகட்டி உள்ளனர். நாம் தவ றென்று கூறுவதெப்படி? இந்த சாஸ்திரத்தை நல்ல அறிவாளியிடம் கற்றுக்கொண்டு தானும் மேலும் படித்து, அனுபவித்து ஆராய்ச்சி புரிந்து, அப்பால் அபிப்பிரா யத்தை வெளியிட வேண்டும். மலடியிடம் சென்று, கர்ப் பிணி பிரசவ காலத்தில் மிக ஸ்ரமப்பட்டாள் என்றால், அவள் எப்படி ஒப்புக் கொள்வாள். அவளுக்கு அவ் வேதனை எவ்வளவு இருக்கும் என எப்படித் தெரியும். குருடன் முன் மயிலாடியென்ன? செவிடன் அருகில் குயில் பாடியென்ன? எல்லாம் பயனற்றது. ஆகவே, அறிவுடன், ஆர்வத்துடன், ஆராய்ச்சி புரியும் திறனுடன், பல்லாண்டு கள் பாடுபடின் உண்மை விளங்கும். நன்மை விளையும். அப்படியின்றி, குற்றம் கூறுவது, கூறுபவருக்கு இந்த

சாஸ்திர ஞானக் குறைவைத்தான் காட்டுகிறது. அல்லது அரைகுறை போலி ஜோதிடரை நாடி, ஏதோ ஜோதிடர் கூறிய பலனை எதிர்பார்த்தது, தவறி விட்டதால் வந்ததோர் ஆத்திரமோ, வேகமோ, வெறுப்போ ஆகும். அது சகஜம்தான் ஜோதிடம் சாஸ்திரம், சாஸ்திரமே. ஆதரிப்போரின்றி, அபிவிருத்தி செய்வோரின்றி, ஆராய்ச்சியாளரின்றி, உண்மையான போஷிப்பின்றி இருக்கும் அநாதை போன்று இருக்கிறது, வைரம் கரியுடன் கலந்து பூமிக்குள் மறைந்து இருப்பது போன்று ஜோதிடமும் மறைந்திருக்கிறது. அதை எடுத்து சரிபடுத்தின் 'ஜ்யோதி' யாவருடைய மனதையும் கவரும். உபயோகப்படுத்தி பயனடையலாம். காமதேனு போன்ற பசுவை தகப்பன் கொடுத்தாலும், பிள்ளை பாதுகாத்து, போஷித்து வந்தால் அல்லவா பாலை கறக்கும்.

உலகத்தில் எந் நாடுகளிலும், எக்காலத்திலும் அறிஞர்கள் ஜனித்திருக்கிறார்கள். ஜனிப்பார்கள். எல்லா சாஸ்திரத்திலும், முதன் முதலில் ஏதாவது ஒரு உண்மையை ஒருவன் கண்டு பிடித்தால், உடனே அதை அன்புடன் ஆராய்ந்து, ஆதரவு அளித்தது உண்டோ? எக்காலத்திலுமே கிடையாதே. படிப்பாளிகளின் பாபமோ, சாபமோ: இதரர்களின் கோபமோ, பொறாமையோ, மேன்மேலும் ஊக்கத்தை அளிக்காமல் ஏக்கத்தை அளிக்கும். எனினும் அறிஞர் விடாது யத்தனம்செய்து, மேலும் பன்முறை போதிப்பார். ஒவ்வொருவராக ஒப்புக்கொள்ள ஆரம்பிப்பார்கள். பிறகு யாவரும் அங்கீகரிப்பார்கள். அறிஞர் உள்ளளவும் அறிஞர் உழைப்பார். இறந்த பின்பே அவரின் புகழ் ஓங்கும். அவரது உழைப்பின் பலனை மற்றோர் பயன்படுத்திக்கொள்ள முன்வருவார்கள்.

நியூடன் என ஒரு பெரிய விஞ்ஞானி. அவர் கண்டு பிடித்த தத்துவங்கள். நமக்கெல்லாம் இனியதோர் ஞான விளக்கு. ஆனால் அவர் கண்டுபிடித்ததும், அவர்பட்ட பாடும் அவருக்குத்தான் தெரியும். ஆர்க்கமிடிஸ் கண்டு பிடித்ததென்ன? கப்பல் முதலியன தற்காலம் கட்டுவது என்ன? முதலில் அவரை எப்படி மதிக்கவில்லை. ஆகவே எந்த தத்துவம் கண்டு பிடித்தாலும், முதலில் பொது

மக்கள் அதுவரை நம்பி வந்ததற்கு மாறுபாடாக இருப்ப தால், அறிஞர் அளவிடமுடியாதபடி கஷ்டப்பட்டனர்.

ஆனால் பல்லாண்டுகளுக்குமுன் கண்டு பிடிக்கப்பட்ட சாஸ்திரம் "ஜோதிடமாகும்." நூதனமல்ல. நமக்குத் தான் ஜோதிடம் நூதனம். இதைக் கற்று உணர்ந்து பலனளிப்பவரின் திறமையைப் பொறுத்தது அதன் மதிப்பு சுமார் 7000-ஆண்டுகளுக்கு முன்னரே பழக்கத்தில் இருந்ததெ தென சில பெரியோர் கூறியிருக்கிறார்கள். இந்தியர் கள், சால்டியன்ஸ், கிரேக்கர்கள், ஈஜிப்த் மக்கள், சைன ஜப்பான் தேசத்தினர்கள் மிக ஆர்வத்துடனும், உற்சாகத் துடனும் பயின்று வந்தனர். யவனர்கள் என அக்காலத் தில் இருந்தவர்கள் மிக அறிவுள்ளவர்கள். அரேபியா முதலிய நாடுகள் சென்று, திரும்பவும் இந்தியாவில் இந்த சாஸ்திரத்தை உபதேசித்தனர். ஸப்தரிஷிகள் என நாம் கொண்டாடும் விஸ்வாமித்திரர், வசிஷ்டர் என்ன? அகஸ் தியர் முதலானோர் இதைக் கையாண்ட அளவு இக்காலத் தில் முடியுமா? எழுதப் படிக்கத் தெரியாமல் இளமையைக் கழித்த மகாகவி காளிதாஸர், தேவி அருளால் அருளிய ஜோதிட நூல், சாஸ்திரம் பொய்யாகுமா? சுகப்ரம்ம ரிஷி வாக்கியம் வீணாகுமா? இவர்கள் அந்நாட்களில், புராணம் ஏற்பட்ட பண்டைப் காலத்திலேயே இந்நூலை இயற்றி நமக்கு "தகப்பன் பிதுர்ராஜ்யம்"' வைத்து மறைவது போல் அல்லவா, ஜோதிடத்தைப் பொக்கிஷமாகக் கொடுத்துள்ளார். அதை அறிந்து பயன்படுத்திக்கொள்ள வேண்டாமா? ஆகவே நான் சொல்கிறேன் கேள். நாரதர், பராசரர், வராஹ மிஹிரர் முதலிய பெரியோர் உபதேசித் தையும், மற்றும் பல ரிஷிகள் பரவச் செய்ததையும் நான் உனக்கு இனி சொல்லிக் கொடுக்கிறேன்.

"என்ன அண்ணா! நீ சொல்லிக்கொண்டே போகி றாயே? யாராவது, சில கார்யம் நடைபெறும் என இந்த சாஸ்திரம் மூலமாகக் கூறினார்கள். அது அப்படியே நடந் தது எனச் சொன்னால்தானே நம்பலாம் என்றேன். ஒரு உதாரணம்கூட நீங்கள் சொல்லவில்லையே!" என்றான் மணி.

" ஒன்றென்ன ! பல உதாரணம், பலவித பலன், பல நிபுணர்களால் பல தேசங்களில், பல காலங்களில், சொன்னதும், அது அப்படியே நடந்ததும் அத்தாட்சி யுடன் சொல்கிறேன் கேள். கதையல்ல ; உண்மையாக நடைபெற்ற சம்பவங்களே."

நம்முடைய மதமோ, ஹிந்து மதம். இது உலகில் மலை ஏற்பட்டு மலை அழியாமல் இருப்பதுபோல உலகம் ஏற்பட்டது முதல் அழியாமல் இருக்கிறது. அப்பால் கிறிஸ்தவ மதம், மகம்மதிய மதம் எல்லாம் வந்தன. இப்புது மதங்களை ஸ்தாபித்தார்களே. கிறிஸ்து, மகமத் இவர்கள் எப்பொழுது பிறப்பார்கள். என்றைய தினம் என அதற்கு முன் வாழ்ந்திருந்த் பர்ஷியோ தேசத்தில் அரசாங்கத்தாரால் போற்றப்பட்டு வந்த பண்டிதர் "ஞாமாஸ்ப்" பல்லாண்டுகளுக்கு முன்பே விளம்பரப்படுத்தி உள்ளார். அரசாங்கத்தில் ஆதரித்து வந்த பர்ஷியாவின் ராஜா பெயர் என்ன தெரியுமா "டேரியஸ் ஹிஸ்டாஸ்பிஸ்" அந்த பண்டிதருக்கு " ஆல்ஹாகிம் " என மற்றொரு பெயர் வழங்கினர்கள். அதற்கு அர்த்தமே " அறிவாளி " என்பர். இது வேறு நாடுகளில் ஏற்படும் ஜனனத்தைபற்றி பர்ஷிய நாட்டில் கூறியவைகளில் ஒரு உதாரணம். மரணத் தைப் பற்றி ஒன்றிரண்டு சொல்கிறேன்.

ஓர் கல்லூரி உபாத்யாயர், ஜகான்ஸ் டாப்லர், தான் எப்பொழுது இறப்பேன் என்பதைத்தானே கணித்து, தனக்குச் சிறு ஆபத்தால் மரணம் வரும் எனவும் கண்டு பிடித்து தன் நண்பர்களிடம் எல்லாம் சொல்லியிருந்தார். அன்றைய தினம் எல்லா நண்பர்களையும் விருந்திற்கு அழைத்தார். விருந்து முடிந்தது. யாவரும் உட்கார்ந்து வார்த்தையாடிக் கொண்டிருந்தனர். இவர் பேசி வந்த பொழுதுதான், கூறியதில் ஒன்றை நிரூபிக்க, தனது புத்தக அறையிலிருந்து புத்தகம் எடுக்கவேண்டி வந்தது. ஒரு ஏணிபோன்றதில் ஏறி எடுக்க முயன்றார். கீழே அவர் விழ, அடியும்பட மரணமும் அவர் கணித்த காலத்திலேயே ஏற்பட்டது.

கெப்லர் ஒரு நிபுணர். அவர் வாலன்ஸ்டீன் என்ப வரின் வாழ்க்கை முழுவதும் கூறியபடியே நடந்தன.

அப்பால் குறிப்பிட்ட தினத்தன்றே மரணமும் வந்தது.

ஏன்? நானே எவ்வளவோ சொல்லி உள்ளேன்: இரண்டு கவனி. ஒரு தொழிலில் கூட்டாளியாக இருப்பவர். ஜாதகத்தைக்கொண்டு, அவரது கூட்டாளி எந்த கிழமை, எந்த திதியில் மரணமடைவார் எனச் சொன்னேனே, அன்றே அப்படியே நடந்தது. இவ்விதமே குழந்தை பிறக்கவேண்டியதைக் குறித்தேன். கிழமையும், திதியும் பொருந்திற்று. யாதொரு அனுஷ்டானமும், ஒழுங்காகச் செய்ய சூழ்நிலை, வசதி இல்லாத நானே இவ்வளவு சரியாகச் சொன்னேனானால் அவர்கள் பலா பலனை உபதேசிக்க கஷ்டமேது, சொன்னால் தவறுவதேது. சொன்னபடி நடக்க வேண்டியதுதானே.

பைகோ டி மிரான்டோலா, ஜோதிடத்தை வெறுத்து, சதா கண்டித்தவர். தூஷித்தவர். அவர் இறக்கும் தருவாயில் தனக்கு ஏற்கனவேஜோதிடர் கூறிய பலன் பிரகாறம் "கடைசிமணி உண்மையாக நடக்கிறது. ஜோதிடம் உண்மையே" என மரண காலத்தில் வாக்கு அளித்தார்

ஜனனம், மரணம் இரண்டிற்கும் உதாரணம் கொடுத்தேனா? மேலும் வேறு சொல்கிறேன். லண்டன் எவ்வளவு குளிர், குளிரும் நாடு. பனிக்கட்டி மூடி இருக்கும் நகரம். அந்த ஊர்பற்றிக்கொண்டு திகுதிகுவென எரியும் என்று "வில்லியம் லிலி" முன்னதாகவே ஜோஸ்யம் எழுதி வைத்தார். அப்படியே எரிந்தது. லண்டன் எப்பொழுது எரிந்தது தெரியுமா? ஞாபகம் இருக்கா.

"தெரியும் அண்ணா 1666–ம் ஆண்டு."

சரி. இவ்விதமாக எக் காலத்திலும் பல வித்வான்கள் பலருக்குக் கூறிய பலன்கள் பலித்திருக்கிறது. அறை குறை கற்றுக்குட்டிகளே, தன்னைத்தான் மேதாவியாகக் கருதி, பிதற்றுவதால் தவறுகள் வருகின்றன. அதனை ஆதாரமாகக்கொண்டு எதிர் பார்ப்பதால் ஏமாற்றம்.

ஜோதிடமே வேண்டாம் என்றே உதறித் தள்ளுவதாக வைத்துக் கொள்வோம். பின்பு வேறு எந்த சாஸ்தி

ரத்தைக்கொண்டு ஒருவர் ஜாதக பலாபலன்கள் சொல்ல முடியும். இவ்விதம் இருளாக இருக்கும் எதிர்கால இருட்டைப் போக்கி, நிம்மதியளிக்கவே பெரியோர்கள் ஜோதிடம் எழுதி உள்ளனர்.

மேலும் கேள் : நம் நாட்டு ரிஷிகள் தமது பஞ்சேந்தியங்களை அடக்கி, தபோ பலத்தைப் பெற்று, 'நாடி' எனும் ஜோசியம் எழுதி இருக்கின்றனர். அவர்கள் வாழ்ந்த காலம் என்ன! நாம் தற்போது இருக்கும் காலம் என்ன! எவ்வளவு நூறு ஆண்டுகள் ஆய்விட்டன. அப்படியிருந்தும் அவர்கள் நாம் பிறக்கும் காலத்தையும். இடத்தையும் குறித்து, தாய் தகப்பன் பெயரையும் சொல்லி, நம்முடைய வித்தை, விவாஹம், புத்திரபிராப்தி, ஸஹோதர ஸஹோதரிகள் முதலியவற்றையும், தொழிலும் அதிலுள்ள அனுகூல பிரதிகூல காலங்களையும், வியாஜ்ஜியம் தொடரும் காலமும், வெற்றியா அல்லது தோல்வியா என்றும், நாம் என்றைய தினம் சென்று ஜாதகத்தைத் தேடி பலன் கேட்போமென்றும், நம்முடன் யார், யார் துணையாக வருகின்றனர் என்றும், நடந்ததையும், நடக்கப் போவதையும் ஆச்சரியப்படும்படி பனை ஓலைகளில் எழுதி வைத்திருக்கின்றனர். அவ்வோலைகளோ சாஸ்திர ஞானம் சற்றும் இல்லாதவர்கள் வசமிருக்கின்றன. அவர்கள் கேட்பவரின் பிறந்த தினத்தைக் கேட்கவோ அல்லது கை ரேகையை எடுத்தோ அச் சுவடிகளிலிருந்து பொறுக்கி எடுக்கின்றனர். அதைப் பார்த்தால் எதிர்த்து பேச வாய் வருமா? வாய் ஏது? ஜோதிடம் தவறு எனக் கூற நா எழுமா? கேலி செய்ய கூசாதா? ஆகவே இந்தியாவில் இருந்த மஹரிஷிகள் மிகவும் மேதாவிகள் த்ரிகால ஞானத்தால் அபூர்வமான இந்நூலை நமக்கு அருளி இருக்கின்றனர். அதில் அவர்கள் ஏன் ஒருவனுக்கு ஒருபலன் நடைபெறும் என்றும், அவன் அபூர்வ ஜன்மத்தைப் பற்றியும், அதில் செய்த பாப புண்ணியத்தைப் பற்றியும் கூறி, சாந்தி செய்யும் முறையையும் உபதேசித்து இருக்கிறார்கள்.

"இதென்ன அண்ணா, பூர்வஜன்ம புண்யம், பாபம் என்கிறீரே. அது எப்படி இந்த ஜன்மத்தில் பலனளிக்கிறது.

கடவுள் சிருஷ்டியில் உயிருள்ளவைகள், உயிரற்றவை கள் என்றும், சரம் அசரம் என்றும் இரண்டு வகைகள் உண்டு. சரம் என்றால் நடப்பன, பறப்பன, நீந்துவன, ஊர்வன முதலியன. மனிதர், ஆடுமாடு, பக்ஷி, மீன், பாம்பு போன்ற ஜந்துக்கள். அசரம் மலை, மரம் முதலியன. இவைகள் பற்பல தடவை பிறப்பதும், பின் இறப்பதுமே ஆகும். ஓர் பிறவியில் ஒருவர் செய்யும் காரியங்களில் சுபமான நற்செய்கைகளைச் செய்யின் புண்யமென்று சொல்கிறோம். ஒருவன் எவரையும் அல்லது எந்த ஜீவனை யும் ஹிம்சிக்கலாகாது. அஹிம்சையே கையாளவேண்டும். அப்பொழுதே புண்ணியம் அதிகம் சேரும். மறுபிறப்பில் சுகமாயிருக்கலாம். பாபத்தைச் செய்து வந்தால், கஷ்டம் தான் மேலுக்கு மேல் வரும். விரை ஒன்று போடச் சுரை ஒன்று முளைக்குமா? வினைவிதைத்தான் வினையறுப்பான். ஆகவே, எக் காரியம் நாம் செய்தாலும் அது இதர ஜீவன் யாதானாலும் அதற்குத் தீங்கு இழைக்கலாகாது. கேட்ட தில்லையா. முன் காலத்தில் பாரி என்று ஒரு மன்னன் இருந்தான். அவன் வெளியில் செல்லும்பொழுது ஒரு அருமையான தேரில் ஏறிச்செல்வது வழக்கம். ஒருமுறை தான் திரும்பி வந்து தேரை நிறுத்திவிட்டு சில தினங்கள் பொறுத்துச் செல்ல விரும்பினான். தேரடி சென்றதும், தேரின் மேல் முல்லைக்கொடி படர்ந்திருப்பதை நோக்கி னான். தேரை நகர்த்தினால் கொடிக்கு அனர்த்தமேற் படுமே என்று அக் கொடி வளர்வதற்காகத் தேரை அங்கேயே விட்டுவிட்டு, வேறொரு தேர் செய்து கொண் டான் என்பார்கள். "சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய பாரீ" என்று சொல்லுகிறார்கள். தன்னைக் கொன்று சாப்பிடவேண்டுமென துரத்தப்பட்ட ஆபத்தில் சிக்கிய ஓர் புறு "சிபி" சக்ரவர்த்தி மடியில் விழுந்து சரண் புகுந் தது. ராஜா தன் தொடையின் இரத்தத்தையும், சதையும் அளிப்பேன் எனக்கூறி கடைசியாகப் புறுவைக் காப்பாற்றி னார் எனக் கேள்வி பட்டதில்லையா?

பாபம் செய்யின் கஷ்டம் நஷ்டம், துன்பம். புண்ணியம் செய்தால் நற்பலன் உண்டு என்பது விளங்குகிறதா.

ஊழ்வினைப் பயனால்தான் இந்த ஜென்மத்தில் நாம் இன்பமோ, துன்பமோ அனுபவிக்கிறோமென்று சொல்லி இருக்கிறார்களா? யார் சொல்லியிருக்கா?

நாடி கிரந்தங்களைக் கவனி. நன்றாகப் படித்துப் பார். சென்ற ஜன்மத்தில் இவ்வித பாவச் செயல் செய்ததால் இந்த ஜன்மத்தில் நீ, இவ்வித பலனை அடைவாய் என ஒவ்வொரு இடத்திலும் ஜோதிட நூல் எழுதிய மஹரிஷிகளே எழுதியுள்ளனர். தவிர, உனக்கு நம்முடைய அப்பா ஜாதகக் குறிப்பு எழுதி வைத்ததில் முதன் முதலில் என்ன எழுதியிருக்கிறார் பார்த்தாயா?

"ஜனனி ஜென்ம ஸௌக்யானும் வர்த்தனி குலசம்பதாம்
பதவி பூர்வ புண்யானும் லிக்யதே ஜன்ம பத்ரிகா."

இதிலிருந்து நீ என்ன அறிகிறாய். நாம் இந்த ஜென்மத்தில் பெறும் பதவி எல்லாம் பூர்வஜென்ம புண்ய வசத்தால் என புலப்படவில்லையா?

மற்றும் பெரியோர் "செய் தீவினையிருக்க தெய்வத்தை நொந்தக்கால் எய்தவருமோ இது நியம்" எனக் கூறியபடி, அவரவர்கள் ஊழ்வினைப்படி பலாபலன்கள் நடைபெற்று வர, அனுபவித்தே தீரவேண்டும் என புலப்படவில்லையா பூர்வஜனம புண்ய,பாபக்குவியலை நாம்பார்க்க முடியாது. ஆனால் பலனை அனுபவிக்கிறோம். இவற்றை ஊகித்து, சாஸ்திரமூலம் அறிந்து, வருங்கரலம் எப்படி? என்று அறிய ஜோதிடமே நூலாகும். ஊழ்வினையால் தான் எல்லாம் நடைபெற்றது என நடைமுறையில் இருந்து சொல்ல முடியுமா? நம் கையில் ஒன்றுமில்லை. நம்மைமீறி வேறு ஏதோ பலனை அளிக்கிறது என சொல்ல ஏதாவது சம்பவங்கள் உண்டா? என மடக்குகிறான் மணி.

"1950-ல் தமயனுக்குக் கல்யாணம். 1952-ல் தம்பிக்குக் கல்யாணம் எல்லோரும் ஒரே குடுமபமாய் வாழ்கின்றனர். 1953–ல் ஒரு குழந்தையும், 1956-ல் ஓர் குழந்தையும் தம்பிக்குப் பிறக்கிறது. 1956 முடிவுவரை தமையனுக்கு

மகப் பேரின்றி, 1957-ல் தமையனுக்குக் குழந்தை பிறக்கிறது ஏன்? இதற்கென்ன சொல்வது?

ஒரு பள்ளியில் 20 நீதி மாணவர்கள் தேர்ச்சிபெற்று, உத்தியோகத்திற்கு மனுபோட்டனர். சிலருக்குத்தான் உத்தியோகம் கிடைத்தது. மற்றவர்கள் நீதி ஸ்தலத்தில் வழக்காடி தனம் தேடி வருகின்றனர். அதிலும் சிலருக்குச் சில ஆண்டுகள் சென்ற பின் முன்சிப் உத்தியோகம். சிலருக்கு மாதிஸ்டிரேட் உத்தியோகம் ஏற்படுகிறது. மேலும் சில ஆண்டுகளில் ஒருவர் திடீரென உயர்தர நீதிமன்ற நீதிபதி ஆகிருர். எல்லோரும் பி. எல்.தான். ஏன் இவ்வித வேற்றுமை? அவரவர் செய்த பாக்கியம் தானே. ஊழ்வினை பயன்தானே. வேறென்ன காரணம் சொல்ல முடியும்? இதை நாம் இரு பதங்களிலேயே "விதி" எனச் சொல்லி விடுகிருேம்.

"விதியை மதியால் வெல்லலாம் என்கின்றனரே, அப்படியாளுல் நாம் நம்முடைய சாமர்த்தியத்திளுலும், முயற்சியாலும் மாற்ற முடியாதா?" முடியவே முடியாது. அரிசி அன்னமான பின்பு அதை அரிசியாக்க முடியுமா? ஒருவன் கஷ்டம் வருமோ எனும் திகிலில் முயற்சி செய்யலாம். கஷ்டம் வராது நின்றுவிடலாம். தன் முயற்சியால் நின்றது என எண்ணலாம். அது அவன் பிரமைதான். எதுவும் நடைபெறவேண்டியபடிதான் நடைபெறும். என் தோழன் ராமன் 1953-ல் மணம்புரிந்துகொண்டார். உத்தமமான மனைவி. 1954ல் ஒரு பெண் குழந்தை ஜனனம். 1955-ல் மற்ருெரு பெண் குழந்தை ஜனனம். பார்த்தான், நண்பனுக்கோ ஸ்வல்ப சம்பளம். என்ன செய்வது என யோஜித்து, 1955-முதல் 1956-முடிய அவளின் பெற்ருேர் வீட்டிற்கு அனுப்பி "நாம் சில மாதங்கள் பிரிந்திருப்போம். உன் உடம்பைத் தேற்றிக்கொண்டு வா" என்ருன். அவளும் "சரி சீதை 14 வருடங்கள் வனவாசம் செய்தாள். நான என் பெற்ருேர் வீடானுலும், புருஷனை விட்டுப் பிரிந்து இருப்பதால் சில மாதங்கள் வனவாசமிருப்பது போல் இருந்துவிட்டு வருகிறேன்" எனச் சொன்னுள். 14 மாதம் பொறுத்து அப்பால் திரும்ப வந்தாள். ஸௌக்கியமாயிருந்தனர். 1957-ம் ஆண்டு குழந்தை பிறந்தது.

இரட்டைக் குழந்தை. இந்த சம்பவம் விதியா? மதியால் சராசரி வருஷத்திற்கு ஒன்றிருக்கக் கூடாதெென முயன்றது முடிந்ததா? இதை ஜோதிடர் இவ்விதம்தான் நடை பெறும் எனச் சொல்ல முடியும். நாம் நம்முடைய முயற்சி இருப்பினும் ஆண்டவன் அருள் அறியாததாயிருக்கிறது என்கிறோம்.

"அப்படி ஊழ்வினையை அறிந்து பலன் சொல்லக் கூடுமானால் ஏன் சிலர் ஜோதிஷத்தை தூஷிக்கிறார்கள். சிலர் மெச்சி வார்த்தையாடுகின்றனர்."

"லோகோ பின்னருசி" என்றபடி உலகத்தில் ஒவ்வொரு சாஸ்திரத்தையும் புகழ்வாரும் உண்டு. இகழ்வோரும் உண்டு. அதுவும் அவரவர் ஜாதக விசேஷம். உலகம் பலவிதம் அல்லவா?

"இவ்வளவு நல்ல சாஸ்திரத்தை ஆங்காங்கே பெரியோர்கள் சிறியவர்களுக்கு உபதேசிக்கக் கூடாதா. இல்லாவிடில் அது க்ஷீணித்துவிடாதா?"

"ஆம், மஹாகவி காளிதாஸரே சொல்லியிருக்கிறார். "நிராதாரா நசோபந்தே பண்டிதா வநிதலாதா" என்றார். அதாவது வித்வான்களுக்குத் தனவந்தர்களின் ஆதரவு அவசியம். பெண்களுக்குத் தகப்பனார், கணவர், புத்திரர்கள் ஆதரவு அவசியம். கொடிகள் வளர்கின்றனவே அவைகளுக்குக் கொழுக்கொம்பு, அத்யாவசியம். ஆகவே ஜோதிட வித்வானுக்கும் ஆதரவு அவசியம். நம் நாட்டில் ஜோதிடம் மிகக் கேவலமாகக் கருதப்படுகிறது. காலம் மாறி வருவதை உணர்கிறோம்."

"அந்திய நாட்டில் எப்படி கருதுகிறார்கள்?"

"அமெரிக்காவில் ஜோதிடத்திற்கென்றே ஒரு யூனிவர்ஸிடி இருக்கிறதென கேள்விப்பட்டேன் ஆங்காங்கே ஜோதிட கழகங்கள் இருக்கின்றன. மேன்மேல் உண்மையை அறிய ஆராய்ச்சி புரிய ஆதரவு இருக்கிறது. நம் நாட்டில், எவ்விதப் படிப்புப் படித்தால் ஜீவனம் செய்யலாம். தனம்கூடும் என யோஜித்து அவ்வித வித்தை

யையே கற்று உணரும் சூழ்நிலையாயிருக்கிறது. ஜோதிடம் பணத்தை அளிக்காது என அறிந்து கற்பதும் இல்லை. தவிர, தானே கற்று உணருமாறு இலகுவில் எழுதப்பட்ட புஸ்தகங்களும் இல்லை. மொழி பெயர்ப்பும் இல்லை. அவ்வளவு இடையூறுகள் இருந்தாலும் நம் நாட்டில் ஓர் சிலர் ஆஸ்ரயித்து இருக்கிறார்கள். ஆஸ்த்மா நோயாளி போல், ஜோஸ்யமும் உயிரை வைத்துக்கொண்டு இருக்கிறது. சில தேசங்களில் அறவே மறைந்தும் விட்டது. மறந்தும் விட்டனர். "தன் வருங்காலம் எப்படி?" என தனக்குத்தானே அறிந்துகொள்ள சாஸ்திர புஸ்தகம் உண்டு. இலகுவில் விளங்கும் என்றால், அதை வாங்கி நன்றாகக் கற்று உணர்ந்து, அனுபவத்திலும் சரியாய் வருவதைக் கண்டு மனம் மகிழ யார்தான் விரும்பமாட்டார்கள். பெரும்பாலோர் ஆசைப்படுவார்கள் தான். ஆகவே நான் யாவரும் இலகுவில் உண்மையை அறிய இந்த சாஸ்திரத்தை எழுத ஆரம்பித்திருக்கிறேன். அனைவரும் ஆதரிப்பார்கள் என வேண்டிக் கொள்கிறேன். இதனால் இருவருக்கும் நன்மை உண்டாகும்.

## ஆகர்ஷண சக்தியும் அதிசயமும்

"என்ன! எல்லா சம்பவங்களும் ஊழ்வினை பயனென்றும் நடைபெறுவன யாவும் அவரவர் விதி எனவும் உபதேசித்தீர்கள். இவைகளை துல்யமாக அறிய ஜோதிட நூல் ஒன்றேதான். வாஸ்தவம். ஜோதிடம் சொல்லும் மார்க்கத்தைச் சொல்ல வேண்டுகிறேன்."

எந்த விளக்கை ஆதாரமாக வைத்துக்கொண்டு எதிர்காலம் எனும் இருளில் பலா பலன்களை மஹரிஷிகள் பார்க்கின்றனர்.

"சொல்கிறேன், கேள்: நாம் பிறந்து வளர்ந்து வரும் நாடு, செந்தமிழ் நாடு. இது இந்தியா தேசத்தின் ஒரு பாகம். இந்தியாவோ, ஆசியா கண்டத்தில் ஓர் தேசம். ஆசியா இந்த பூமியில் ஒரு கண்டம். பூமியோ கடவுளால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட (Universe) ப்ரபஞ்சங்களில் ஒன்று.

பூமி இந்த ப்ரபஞ்சங்களில் ஒன்று என்று எப்படியாகும்? தமிழ் நாடு இந்தியாவில் ஒன்று. ஆசியாவின் பகுதி என்ருல் அது உண்மை. படர்ந்த உலகத்தில் ஒரு பாகம் எனப் பார்க்கிறோம். ஆனல் பூமி இதர கிரகங்களுடன் சம்பந்தப்பட்டு, பிணைக்கப்பட்டு, அவற்றின் ஓர் பாகமென எப்படியாகும். பகலில் வெளிச்சத்தை அளித்து, உஷ்ணத்தையும் கொடுத்து ஜீவராசிகள் வளர்வதற்கு உதவுவதுமான சூர்யன். இரவில் குளுமையை அளிக்கும் சந்திரன். மற்ற கிரகங்கள் நக்ஷத்திரங்கள் இவைகள் எல்லாம் எப்படி ஒன்ருகும். ஒவ்வொன்றும் பிணைக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லையே.

பூமி தனிப்பட்ட ஒரு உலகம். சூர்யனும் தனிப்பட்டதே. சந்திரனும், மற்றவைகளும் தனிப்பட்டவைகளே. ஆனலும் இவைகள் எல்லாம் ஒரு கிரமத்தில் ஆகர்ஷண சக்தியால் ஒன்றுக்கொன்று இழுக்கப்பட்டு சூர்யனைச் சுற்றி வருகின்றன. ஒரு குத்து விளக்கை நடுவில் வைத்திருக்கிருர்கள். இதுவே சூர்யன். அதைச் சுற்றிக் கொஞ்சம், கொஞ்சமாக விளக்கிற்கு அப்பால் கிரகங்களைப் போல் பெண்மணிகள் இருக்கின்றனர். விளக்கை ஆதாரமாக வைத்துக்கொண்டு பலர் கும்மி அடித்து சுற்றி வருவதாக நினைத்துக்கொள். அவர்களிலேயே ஒருவர், பூமாதேவி என்பாள், தன்னைத்தான் சுற்றிக்கொண்டும் விளக்கையும் சுற்றிக்கொண்டு வந்தால் எவ்விதம் தோன்றுமோ, அவ்விதமே சூர்யனைச் சுற்றி கிரகங்களும் வர, பூமி தன்னைத் தானே தினம் ஒரு முறை சுற்றிக்கொண்டு, ஒரு ஆண்டில் சூர்யனையும் சுற்றிக்கொண்டு வருகிறது.

“அண்ணு, நீ கொஞ்சம் வேகமாய் சொல்கிருய். சற்று விளங்க கூறேன்.”

“சூர்யனின் ஆகர்ஷண சக்தியால் எல்லா கிரகங்களும் சூர்யனிலிருந்து ஒரு தூரத்திலேயே இருக்கிறது. இது இயற்கை.”

“ஆகர்ஷண சக்தி என்ருல் என்ன? கயிறு, கம்பி போட்டு பிணைத்திருக்கிறதா?”

"இல்லை. நாம் ஆகர்ஷண சக்தியைக் காண முடியாது. உதாரணங்களால் உணரலாம். அறியலாம். பூமி உருண்டை என ஒத்துக் கொள்கிருயா ?"

"ஆம் பூமி உருண்டையே."

"தன்னைத்தான் பூமி சுற்றி வருகிறது என அதையும் ஒத்துக்கொள்கிருயா ?"

"ஆமாம். பூமி சுமார் 24,000 மைல் சுற்றளவு உள்ளது. அது உருண்டை. தன்னைத் தானே ஒவ்வொரு தினமும் சுற்றி வருகிறது, என அறிவேன்."

"அப்படியானல் மணிக்கு எவ்வளவு மைல் வேகம் ?"

"ஆயிரத்துக்குச் சற்று அதிகமாக இருக்கும்."

"ஆகாயத்தில் நிமிர்ந்துப் பார். என்னத் தெரிகிறது."

"நீ ஊர் போய் பல வருடங்கள் பொறுத்து எதிர் பாராது வந்தாயல்லவா, அதான். மழை பெய்ய போகிறது, மேகம் இருண்டு வருகிறது."

"சமர்த்தாய் பேசுகிருயே. மேகத்திற்கும், பூமிக்கும் பிணைத்துக் கட்டி இருக்கா. எதனல் கட்டி இருக்கிறது, தெரியுமா ?

"மேகம் தலைக்கு நேராகவே இருக்கிறது. அதெல்லாம் எதனுலும் கட்டப்படவில்லை."

"நீயோ பூமியைத் தொட்டுக்கொண்டு இருக்கிருய். ஆகவே நீ ரயிலில் பிரயாணம் செய்பவன் ரயிலுடனேயே ரயில் எவ்வளவு வேகம் போகிறதோ அதே வேகத்தில் நீயும் செல்வதுபோல, பூமியோடேயே அந்த 1000 மைல் வேகம் நகர வேண்டும். நம்மையறியாமலேயே நகர்கிறோம். ஆனல் மேகமோ ஆகாயத்தில் நமக்கும், அதற்குமுள்ள தூரத்திலேயே இருக்கிறது. நாம் பேச ஆரம்பித்து ஒரு மணி கால தாமதமாகிறது. மேகம், பூமியுடன் பிணைக்கப் படாமலிருந்தால் இந்த ஒரு மணி நேரத்தில் மேகமிருக்கு மிடத்திற்கு அப்பால் 1000 மைல் தூரத்தில் அல்லவா

நாமிருக்க வேண்டும். அதுதான் பூமியுடன் சேர்த்துக் கட்டப்படவில்லையே. அது நகர்ந்து வராமல் அப்பால் அல்லவா இருக்க வேண்டும். அப்படியின்றி நம்முடனேயே, மேகமும் வந்தால்தானே, ஒரு மணிக்கு முன் எப்படி அது தலைக்கு நேர் மேலே இருந்ததோ, அப்படியே இப்பொழுதும் இருக்கலாம். இப்பொழுதும் தலைக்கு நேராக உயரே தான் இருக்கிறது. ஏன், தெரியுமா? மேகத்தை பூமி ஆகர்ஷிக்கிறது. இந்த சக்தியை கண்ணால் காண முடியாது. ஆகர்ஷண சக்தியே காரணம். ஆகர்ஷண சக்தி இல்லா விட்டால், பௌண்டன் பேனாவிலிருந்து 'மை' எப்படி ஊறி வந்து எழுத முடியும். தண்ணீர் குடிக்கப் பஞ்ச பாத்திரத்தை எடுத்து சாய்த்தால், தண்ணீர் எப்படி வாயில் விழும். ஆகர்ஷண சக்தி இல்லை என்றால் அதுவே யுக முடிவு. யாதும் நடைபெறாது. ஆகர்ஷண சக்தியே இன்றியமையாதது. இயற்கையின் அற்புதத்தில் ஒன்று ஆகர்ஷண சக்தியேயாகும். நியூடன் கண்டு பிடித்தார், அதை நாம் உணர்கிறோம்.

## வான மண்டலம்

"ஆகர்ஷண சக்தி உண்டு என்பது தெரியும். ஒவ்வொரு கிரகமும் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது" என்றான மணி.

"சூர்யனிலிருந்துக் கணக்கிட்டால் சூர்யனிலிருந்து புதன் 360 லக்ஷம் மைல்கள்; சுக்கிரன் 670 லக்ஷம், பூமி 93 லட்சம், செவ்வாய் 1420 லக்ஷம், குரு 4830 லக்ஷம், சனி 886 லக்ஷம, யூரேனஸ் 17820 லக்ஷம், நெப்ட்யூன் 27910 லக்ஷம், ப்ளூடோ 38410 லக்ஷம் மைல்கள் அப்பால் உள்ளன. சந்திரன் பூமியிலிருந்து 2,40,000 மைல்களே அப்பால் இருக்கிறது. மிக அண்மையில் இருக்கிறது."

இந்த கிரகங்கள் சூர்யனைச் சுற்றிக்கொண்டே வருகின்றன. இதே தூரத்தில் சஞ்சரிக்கிறது என்றீரே. எல்லா கிரகங்களும், பூமியைப்போலவே ஒரு வருஷத்திற்கு ஒரு முறை சுற்றி வருகிறதா?

பலரை பல வட்டத்தில் பந்தயம் விடுகிருர்கள். ஒவ்வொருவருடைய வேகமும் வித்தியாசம். அப்படியானுல் சுற்றி வரும் காலம் வித்தியாசம் ஆகாதா? அதேபோல் இவைகளும் சூர்யனைச் சுற்றி வரும் காலம் வித்தியாசம் உண்டு. புதன 88 நாட்களில் ஒரு முறையும், சுக்ரன் 225 நாட்களிலும், பூமி 365°2464 தினங்களிலும், செவ்வாய் 1 வருஷம் 322 நாட்களிலும், குரு 11 ஆண்டு 315 நாட்களிலும், சனி 29 வருஷம் 167 தினங்களிலும், யூரேனஸ் 84 ஆண்டு 7 தினங்களிலும், நெப்ட்யூன் 164 ஆண்டு 280 தினங்களிலும், ப்ளூடோ 265 ஆண்டுகளுக்கு ஒரு முறையும், சந்திரன் 27°33 தினங்களில் ஒரு முறையும் சூர்யனைச் சுற்றி வருகின்றன. இவைகள் எல்லாம் வான சாஸ்திரமே ஆனுலும், இவைகள் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் விதம், வேகம், வானத்தில் அதன் ஸ்திதி எல்லாம், ஜோதிட பலன் சொல்ல அத்தியாவசியம். சொல்லிக் கொடுக்கும்பொழுது சிரமமாக இருப்பினும், மெதுவாகக் கற்றுக்கொள்வது, நல்லது.

கார்விடக் கற்றுக்கொண்டால் போதாதா? கார் எப்படி செய்கிருர்கள். என்ன பெயிண்டு கொடுத்தான்? எங்கே உற்பத்தி ஆயிற்று? யார் பூட்டினுர்கள்? என்று இதெல்லாம் எதற்கு அண்ணு. நமக்கோ ஜாதகம் குறித்து வைத்திருக்கிருர்கள்—பலாபலன்களைக் கண்டுபிடிக்கும் வழியைச் சுலபமாய் "டாப்லட், மாத்திரை" கொடுக்கிருர்களே! அவ்விதம் சொல்லிக்கொடு அண்ணு.

மணி படித்தவனுயிற்றே. அவனுக்கு அவனுடைய ஜாதக ரீதியாக நன்ருய் ஜோஸ்யம் வரும் என எனக்குத் தெரியும். அவன் சகலமும் கற்றுக்கொண்டு, எதிலும் தவறின்றி உண்மையை உலகத்திற்கு உபகாரமாக எடுத்து உரைக்கவேண்டும் என்கிற ஆவல். நான் இவ்வளவு காலம், இவைகளை கற்று உணர்ந்து விட்டேன் என்பதை உங்களிடம் சொல்லி ஒரு பெருமை பெற வேண்டும் என்கிற நோக்கம் அல்ல. அதற்காக விவரிக்கவில்லை. நன்ருக விளங்கவேண்டும்.

" கவனியுங்கள். நாம் பூமியில் இருக்கிருேம். சூர்யனும் மற்ற கிரகங்களும் வானத்தில் இருப்பதைக் கவனிக்கி

றோம். அவைகள் எல்லாம் மெதுவாக கிழக்குத் திக்கில் இருந்து, மேற்குத் திக்கு நோக்கி நகர்ந்து ஆகாய மார்க்கமாய்ச் செல்வதைப் பார்க்கிறோம். ஏதாவது, ஒரு நிமிஷத்தில் இவைகள் எங்கெங்கே இருக்கின்றன என்பதைக் கணக்கிட முடியும். அவைகளை இலகுவாய் புரியும்படிச் சொல்லிக்கொண்டு வருகிறேன். ஒவ்வொன்றாகச் சொல்லச் சொல்ல நீயும் அறிந்துகொண்டு வா. பெட்டியில் "சாக்லெட்" இருப்பினும். அதை ஒவ்வொன்றாகத்தானே வாயில் போட்டு கரைத்து, கரைந்ததும் குடிக்கிறாய். அவ்விதமே கொஞ்சம், கொஞ்சமாகக் கவனித்துக் கேட்டு கற்றுக்கொள்.

இந்த கிரகங்கள் கிழக்கில் இருந்து மேற்கே தான் போகின்றனவா? தெற்கு வடக்காக போகாதா?

உன்னை கிழக்கு மேற்காக இருக்கும் பாதையில் செல் என்றால் நீ என்ன செய்கிறாய். கிழக்கிலிருந்து மேற்கே தான் ஒவ்வொரு அடியும் எடுத்து வைக்கிறாய். ஒவ்வொரு அடியும் மேற்கு நோக்கிதான் இருக்கிறது. ஆனால் ஒரே கோடு போட்டதுபோல் போகிறாயோ? இல்லை. கொஞ்சம் கொஞ்சமாக நடுபாதையிலிருந்து வடக்கே சிறிதளவு வருகிறாய். அப்பால் கொஞ்சம், கொஞ்சமாக தெற்கே சிறிதளவு போகிறாய். திரும்ப வடக்கு நோக்கிக் கொஞ்சம் கொஞ்சமாக வருகிறாய். ஆனால் இவ்வளவு நேரமும் மேற்கு திக்கை நோக்கித்தான் நடக்கிறாய். இருப்பினும் நடுபாதையிலிருந்து, சற்று வடக்கும், தெற்குமாக, சிறிது சிறிதாக ஊஞ்சல் ஆடுவதுபோல் நகர, மேற்குத் திக்கையே நோக்கிச் செல்கிறாய் அல்லவா. அதேபோல் பூமத்திய ரேகைக்கு சுமார் $7\frac{1}{2}^{\circ}$ வடக்கும், $7\frac{1}{2}^{\circ}$ தெற்குமாக தினம், தினம் சிறிதளவு நகர, இவைகள் கிழக்கிலிருந்து மேற்கே நிற்காமல் செல்கின்றன. இப்பாதையின் நீளமோ, ஒரு முட்டைவடிவ வட்டம். (Ellipetical) இதை $360^{\circ}$ ஆகச் செய்துகொள்ளலாம். இதே பாதையில்தான் சூர்யனும், இதர கிரகங்களும் சஞ்சரிப்பதாக பூமியில் உள்ளோருக்குத் தென்படும், இதன் பெயர் தான் "வான மண்டலம்". (ZODIAC)

நக்ஷத்திரங்களோ வானம் முழுவதும் இருக்கின்றதே. ஆனால் $15^{\circ}$ தான் பாதை என்கிறீர்களே.

ஆமாம். எலுமிச்சம் பழம் பூருவும், பக்கத்தில் கருப்புப் புள்ளிகள் இருப்பதுபோல் எண்ணிக்கொள். எறும்பு அதைச் சுற்றி வரும்பொழுது அது ஓர் வழியாக வருகிறது. அவ்வழிக்கு அப்பாலும் கருப்புப் புள்ளிகள் உள்ளன. ஆனால் அதன் பாதை எதுவோ அதற்குள் உள்ளதையே ஜோதிடத்திற்கு எடுத்துக்கொண்டு மற்ற வைகளை எடுத்துக்கொள்ளவில்லை. வான மண்டலமும் அதைத் தவிர மற்ற இடங்களிலும் வானத்தில் நக்ஷத்திரங் கள் இருப்பினும், இந்தப் பாதையையே நாம் எடுத்துக் கொண்டால் ஜோதிட விஷயத்திற்குப் போதுமானது. இதுவே 360°

இது ஓர் வட்டமாயிற்றே. ஆரம்பம் எங்கு என்றும், முடிவு எங்கு என்றும் எப்படி கண்டுகொள்ள முடியும். ஒரு கோடு இருந்தால் அதற்கு ஆரம்பம் உண்டு. முடிவு உண்டு. வட்டதிற்கேது?

முதல் பாடமானதால், சுலபமாகக் கண்டு பிடிக்கும் முறையைச் சொல்லிக் கொடுக்கிறேன். இப்பொழுது அது போதுமானது. அடுத்த முறை சொல்லும் பொழுது, இதில் உள்ள முழுக் கணக்கையும் சாயனம், நிராயணம் என்பதையும் சொல்லிக் கொடுக்கிறேன்.

## 12 வீட்டில் 27 நக்ஷத்திரங்கள்.

ஆகாயத்தில் பார். இப் பாதைகளில் சில நக்ஷத்திரங் கள் இருக்கிறன. இப்பாதைக்கு அப்பாலும் உண்டு. அப்பாலுள்ளவற்றை தற்காலிகமாக மறந்துவிடு. சூர்யன் செல்வதுபோல் தோன்றும். சுமார் 15° அகலமும், 360° நீளமுள்ள இந்த வானப்பாதையைக் கவனித்துப் பார். இந்த நக்ஷத்திரங்களில் 27 நக்ஷத்திரங்கள் நன்ருய்ப் புலப் படுகின்றன. மேலும் சில இருந்தாலும், இந்த 27 நக்ஷத்தி ரங்களே பிரதானம் என மஹரிஷிகள் கருதுகின்றனர். 27 நக்ஷத்திரங்களின் பெயரை வரிசைக் கிரமமாக கூறு கிறேன் கேள் :

அசுவதி, பரணி, கிருத்திகை, ரோஹிணி, மிருகசீரிஷம், திருவாதிரை, புனர் பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம், உத்திரம், ஹஸ்தம், சித்திரை, ஸ்வாதி, விசாகம். அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம, அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி.

ஆரம்பம் அசுவதி ஆகும். அசுவதி நக்ஷத்திரம் இம் மண்டலத்தில் எங்கு ஆரம்பம் எனக் கவனி. அதுவே வான மண்டலத்தின் 0° அப்பால் அப்பாதை முழுவதும் வரின் 360°, 0° உடன் முடியும். ரேவதி நக்ஷத்திர முடிவே, அசுவதி நக்ஷத்திரத்தின் ஆரம்பம். பெண்மணிகள் கையில் வளையல்களை அணிகிருர்கள். வளையல்களோ வட்டம். செய்யும்பொழுது கம்பிபோல் நீண்டு இருப்பதை வளைத்து இருமுனையைச் சேர்க்கிருர்கள். பொடி வைத்து ஊது கிருர்கள். பொடி வைத்து ஊதும் இடமே ஆரம்பம். சுற்றி வரின், கடைசியாக பொடி வைத்து ஊதும் இடமே முடிவு எனத் தெரிகிறது அல்லவா! அதேபோல் இவ்வட்டமான 360° அசுவதி ஆரம்பத்தில ஆரம்பித்து ரேவதி முடிவில் முடிகிறது.

பின்பு கவனித்து வா. பங்குனி மாதம் முடிந்து. சித்திரை மாதம் ஆரம்பிக்கும் சமயம், சூர்யன் ரேவதி நக்ஷத்திரத்தைவிட்டு, அசுவதி நக்ஷத்திரம் ஆரம்பிக்கும் இடம் வருவதுபோல் தோன்றும் (நிராயண முறைப்படி.) தமிழ் வருஷம் பிறக்கும் நேரத்தில் சூர்யனிருக்கும் இடமே வான மண்டலம் ஆரம்பித்து, முடியுமிடம் ஆகும்.

12 மாதங்களாகப் பிரித்திருக்கிருர்களே, ஏன்? 27 நக்ஷத்திரங்கள் இப்பாதையில் இருக்க, 27 மாதங்களாகவே பிரித்திருக்கலாமே.

ஏன்? சம்பளம் வருஷத்திற்கு 27 முறை வாங்கலாம் எனக் கேட்கிருயா. உலகிலுள்ள ஜீவராசிகளின் குணம், விசேஷம் முதலியவைகளை 12 விதமாகச் சான்றோர்கள் வகுத்து, ஒவ்வொருவித குணாதிசயமும் வான மண்டலத்தின் ஓர் பாகம் மூலம் அறியக்கூடும் எனக் கண்டுகொண்டு

12 பங்காகவே போட்டார்கள். எல்லாம் சம பங்கே. வான மண்டலம் ஆரம்பம் 0° முதல் 30° "மேஷம்" என்றும், அடுத்த 30° தூரம் உள்ள விஸ்தீரணத்தை "ரிஷபம்" என்றும், மேலுமடுத்த 30°ஐ மிதுனம் என்றும், அப்பால் இவ் விதமே 'கடகம்', 'சிம்மம்', 'கன்னி', 'துலாம்', 'விருச்சிகம்', 'தனுசு', 'மகரம்', 'கும்பம்', 'மீனம்', என வகுத்திருக் கின்றனர்.

உலக விவகாரங்களை 12 விதமாக வகுத்தனர். ஆத லால் வான மண்டலத்தை 12 சம பங்காக போட்டார்கள் என்கிறீர். என்ன அண்ணு அந்த 12 விவகாரங்கள்?

வான மண்டலத்தை 12 பங்கிட்டதும், ஒவ்வொன்றும் 'ஓர் ராசி' என வழங்கப்படுகிறது என்றும் அறிந்தாய். அதன் பெயரும் சொன்னேன். அவற்றின் குண விசேஷம் பின்னுல் சொல்கிறேன்.

"நக்ஷத்திரங்கள் இம் மண்டலத்தில் முக்கியம் என்றீர், 12 ராசியாகவும் மண்டலம் பங்கிடப்பட்டது என்றீர். ஆகவே ஒரு ராசிக்கு 27ஐ 12ல் வகுக்க வரு கிறதே இரண்டேகால், இரண்டேகால் நக்ஷத்திரமா அண்ணு?"

"ஆமாம்."

நக்ஷத்திரம் ஒரு குவியலாகவோ தனித்தனி புள்ளிக ளாகவோ தென்படுகின்றன. ஆனுல் 360°ஐ 27 பங்கிட ஒரு நக்ஷத்திரம் 13-1/3° டிகிரியாகும் அல்லது 60 மினிட் ஒரு டிகிரியானதால் 13 டிகிரி 20 மினிட் ஆகும். ஒவ்வொரு நக்ஷத்திரமும் 13°, 20' சரியாக அதே நீளமாக எப்படி இருக்க முடியும்?

நன்ருகக் கவனி. ஒரு தெருவில் 27 வீடுகள். எல்லாம் ஒரே அகலம். 13 கஜம் 1 அடி என்று எண்ணிக்கொள் ஒவ்வொரு வீட்டின் வாசலிலும், அவ்வீட்டின் பெண்மணி, தெருவில் வரும் கடவுளை வணங்க தெருவில் நிற்கிருள். ஒருவர் வாசற்படி அருகிலும் ஒருவர் சற்று மேற்கிலும், ஒருவர் சற்று கிழக்கிலும் நிற்கிருர்கள். இருந்தாலும்

அவரவர் தத்தம் வீட்டின் எல்லையில் இருக்கின்றனர். அவர்கள் நிற்கும் வீடு அவர்களின் ஆதிக்யத்திலிருக்கிறது. அதுபோன்று 360° ஐ 27-ல் வகுத்துவந்த 13°–20'க்கு ஒரு நக்ஷத்திரபாகமாகப் போட்டு, முதல் பாகமான அந்த 13°–20'ல் கவனித்தால் சில நக்ஷத்திரங்கள் தென்பட்டாலும், அவற்றில் அசுவதியே பிரதானம். 13°–20' முதல் 26°–40' வரைப் போட்ட இரண்டாவது பாகத்தைக் கவனித்தால் அதில் சில நக்ஷத்திரங்கள் தென்படும். அவற்றில் பிரதானம் பரணி. அவ்விதமே 26°–40' முதல் 40° வரை வகுக்கப்பட்டதில் கவனித்தால் அதில் பல நக்ஷத்திரங்கள் புலப்பட்டாலும் அவைகளில் பிரதானம் கார்த்திகை.

இவ்விதமாக 27 பாகங்கள். போட்டுவைத்தால், ஒவ்வொன்றிலும், முதற் கூறிய 27 நக்ஷத்திரங்களும், வரிசையாக ஒவ்வொன்று ஒரு பாகத்தில் தெரிய வரும். பண்டை காலத்தில் பெரியோர்கள், இவ்விதம் பங்கிட்ட 27 பாகங்களை, அந்த பாகங்களில் புலப்படும் நக்ஷத்திரங்களில் பிரதானமான நக்ஷத்திரம் கொண்டு பெயர் இட்டனர்.

இதே வான மண்டலம் 12 ராசிகள் அடங்கியதால் ஒவ்வொரு ராசிக்கும் $2\frac{1}{4}$ நக்ஷத்திரமாகும். ஆகவே ஒவ்வொரு நக்ஷத்திரத்தின் பாகமாகிய 13°–20' ஐ 4 பங்கிட, ஒவ்வொரு நக்ஷத்திரமும் 3°-20' ஆகும். இவ்விதம் 27 நக்ஷத்திரங்களையும் 4 பங்கிட்டு, நான்கில் ஒரு பங்கை, அந்த நக்ஷத்திரத்தின் முதல் பாகம் என்றும், இரண்டாம் பங்கை 2ம் பாதம் என்றும், மூன்றும் பங்கை 3ம் பாதம் என்றும் நான்காம் பங்கை 4ம் பாதம் என்றும், ஒவ்வொன்றிற்கும் 4 பாதமாக வகுக்கிறோம். ஆகவே மண்டலத்தை 108 பாகங்கள் கொண்ட, 27 நக்ஷத்திரங்களாகவும், $2\frac{1}{4}$ நக்ஷத்திரம் அல்லது 9 பாதங்கள் கொண்ட ராசிகள் 12 ஆகவும் பிரித்திருக்கின்றனர். ராசிகளின் பெயரும், ஒவ்வொரு ராசியில் எந்த நக்ஷத்திரம், எவ்வளவு பாதம் இருக்கிறதென்பதையும் புத்தகக் கடைசியில் காண்க.

“அதனால்தான் ஆருடம் கேட்கும்பொழுது 108க்குள் ஒன்று சொல், என்றுச் சொல்லச் சொல்லி, சொல்லும்

எண்ணை வைத்துக்கொண்டு கேட்கும் கேள்விக்கு ஜோஸ்யர் பதில் அளிக்கின்றனரா?"

"ஆமாம். நீ எந்த நம்பர் சொல்கிறாயோ, அதை 4ல் வகுத்து ஒவ்வொரு 4 நம்பருக்கு ஒரு நக்ஷத்திரம் தள்ளி, பாக்கிவருவதை, அத்தனையாவது பாதம் என எடுத்துக் கொண்டு சொல்கின்றனர். அதாவது நீ 22 எனச் சொன்னால், 4ல் வகுக்க 5 முறை போகிறது. அசுவதி, பரணி, கிருத்திகை, ரோஹிணி, மிருகசிரிஷம் என 5 நக்ஷத்திரங்கள் முடிந்து பாக்கி 2 அல்லவா. ஆதலால் மிருக சிரிஷத்திற் கடுத்த திருவாதிரை 2ம் பாதம் என எடுத்துக் கொள்கிறார்கள். நீ குறுக்குக் கேள்வி கேட்டால் சொல்லி வரும் பாடத்தைவிட்டு சற்று விலக நேரும். நானே எல்லாம் சொல்லி வருகிறேன். ரோடில் நடந்துக் கொண்டே இருக்கும்பொழுது நடுப் பாதையில் ஏதாவது திடீரெனக் குறுக்கிட்டால் ஒழுங்காய் செல்லும் பாதை தவறி விலக வேண்டி வருவது போல் ஆகும். நீ புரியாவிட்டால் கேள். மேலும் மேலும் விளக்க மாய்ச் சொல்கிறேன்.

## கிரகங்கள்

இவ்விதமாக வான மண்டலத்தைப் பங்கிட்டு, பெய ரிட்டதை உரைத்தேன். இப்பொழுது பற்பல மஹரிஷி களும், ஜோதிட நிபுணர்களும் கண்டுபிடித்துள்ள கிரகங் களைப்பற்றியும், அப்பபால் சிற்சில உப கிரகங்களைப்பற்றி யும் எடுத்து உரைக்கிறேன். தவிர வான மண்டலத்தில் எந்தெந்த ஸ்திதியை (Imaginary points in Zodiac)யும் பயன்படுத்தினார்கள் என சுருக்கமாக இங்கே கூறி, பின்பு விளக்குகிறேன்.

மஹரிஷிகள் இம்மண்டலத்தில் சஞ்சரிக்கும் கிரகங் கள் ஏழே கண்டுப் பிடித்தனர். அவைகள் சூர்யன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்ரன், சனி எனப்படும் (இவைகளின் பெயரைக் கொண்டே, ஒவ்வொரு வாரமும் உள்ள 7 தினங்களின் பெயரை வைத்துள்ளார்கள்)

ஹெர்ஷல் என்பவர் ' யுரேனஸ் ' எனும் கிரகத்தை 1781-ல் கண்டுப் பிடித்தார். வான சாஸ்திர நிபுணர்கள் 1846-ல் 'நெப்ட்யூனே'க் கண்டுப் பிடித்தனர். அப்பால் அதிகமாக குணவிசேஷங்கள் தெரியாத 'ப்ளூடோ'வைக் கண்டுப் பிடித்தனர். ஆகவே இவைகள் உருவம், வடிவம், குணம் முதலியன உள்ள கிரகங்கள் ஆகும். நம்முடைய மஹரிஷி கள் ராகு, கேது என இருகிரகங்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என உபதேசித்திருக்கிறார்கள். ராகு, கேது இவர்களுக்கு ஒரு உருவம், வடிவம், கணம், பரிமாணம் யாதும் இல்லை. ஆனால் சந்திரனின் துங்க மண்டலம் (Orbit) பூமியின் (Orbit)க்கு 5 டிகிரி வளைந்திருக்கிறது. சந்திரன் மாதம் ஒருமுறை பூமியைச் சுற்றி வருகிறது. அப்பொழுது பூமியின் (Orbit)துங்க மண்டலத்தை இரண் டிடங்களில் குறுக்கிடுகிறது. சந்திரன் கிழக்கிலிருந்து, மேற்கே சென்றாலும், சற்று தெற்கும் வடக்குமாக பாதை யில் நகரும் என்றேன் அல்லவா. அவ்விதமே தெற்கு திக்கிலிருந்து வடக்கு பக்கம் செல்லும் பொழுது. பூமி துங்க மண்டலத்தைத் தாண்டுமிடம் ராகு என்றும், அவ்விதமே வடக்கிலிருந்து தெற்கு நோக்கி வருமிடம் கேது என்றும் வழங்குகின்றனர். ஆகவே ராகுவும், கேதுவும் இரண்டும் சந்திக்கும் இடங்களாகும். இரண்டு வளையல்களை எடுத்து ஒன்றோடு ஒன்று சற்று சாய்ந்திருப் பதுபோல் பிடித்துப் பாருங்கள். அவைகள் இரண்டு இடங்களில் தொட்டுக் கொள்ளும் இதர இடங்கள் தனித் தனியே இருக்கும். இரண்டு வட்டமான சைகிள் சக்கரத்தை மாத்திரம் எடுத்துக்கொள். ஒன்றிற்குள் ஒன்றை நுழைக்க முயற்சித்து, இரண்டும் சற்று சாய்ந்திருப்பது போல் பிடித்துப்பார். இவைகள் இரண்டு இடங்களி லேயே தொட்டுக் கொள்ளும். இவ்விதமாக ஆகாயத்தில் பூமி சுற்றி வருவதுபோல் தோன்றும் பாதையும், சந்திரன் சுற்றி வரும் பாதையும் குறுக்கிடும் காலத்தில் எந்த இரண்டு இடங்கள் தொட்டுக்கொள்கின்றனவோ, அவை களே ராகு, கேது என வழங்கப்படும். அப்பால் குளிகன், மாந்தி என்றெல்லாம் கூறப்பட்டு உள்ளது. முதல் பாடத்தில் அவைகள் தேவை இல்லை. சூர்யன் சந்திரன் முதலான ஏழு கிரகங்கள், ராகு கேது எனப்படும். சாயா

கிரகங்கள், யுரேனஸ், நெப்ட்யூன் எனும் இரண்டு நூதனமாகக் கண்டுப்பிடிக்கப்பட்ட கிரஹங்கள், இவைகளை அறிந்துக் கொண்டால் தற்காலம் போதுமானது.

(அடுத்து வரும் புத்தகங்களில் மேலும் ஜோதிடப் பகுதி உயர்ந்த முறையில் வெளிவரும். மொத்தம் பாடம் 10. இவ்விதமாக அடுத்து அடுத்து வரும் புத்தகங்கள் மேன்மேல் அதிகமாக ஞானத்தை அளிக்க வல்லது. உண்மையாக, விளக்கமாகத தெரிவிக்கக் கூடியது. இனிவரும் ஒவ்வொரு புத்தகமும், 100 பக்கங்கள் கொண்டதாகும்.)

## எனது ஜாதகம்

ஒருவருக்கும் வருங்காலம் எப்படி? என்று அறிய வேண்டுமானல், இந்த ராசிகளின் குணாதிசயங்களை நன்கு அறிந்து, கிரகங்களின் சுபாசுபங்களையும், ஸ்வபாவங்களையும் அறிந்து, அவைகள் ஓர் குழந்தை ஜனிக்கும் காலத்தில், வான மண்டலத்தில் எங்கு இருந்தது என கண்டுப்பிடித்து, குழந்தை பிறக்கும்பொழுது பூமி, கிழக்குப் பக்கத்தில், வான மண்டலத்தில் எப்பகுதியை தொடுகிறுற் போல் தோன்றுகிறது, அதாவது எப்பாகம் உதயம் ஆகிறது என கண்டுப்பிடிக்க வேண்டும். இது மிக துல்லியமாக இருக்கவேண்டும். 4 நிமிஷத்திற்கு 1° வான மண்டலம் நகருவதாலும், அக்ஷாம்சத்திற்கு, அக்ஷாம்சம் வித்யாசம் உண்டு. ஆதலாலும் ஜனன நேரத்தையும், ஜனித்த இடத்தையும் குழந்தை பிறந்ததும் குறித்து வைத்து, புண்யாஹ வசனத்தன்று, ஜாதகக் குறிப்பைக் குறிக்கவேண்டும். 'திருக்' முறைப்படி, மஹாபண்டிதர்களைக்கொண்டு, கணித்துக் குறிக்கப்பட்டதையே உபயோகப்படுத்த வேண்டும். அல்லது ஆங்கில வான சாஸ்திரிகள் வெளியிடும் Ephemeris ஐக்கொண்டு கணிக்க வேண்டும்.

"... என்ன அண்ணு! ஊரார் மூக்குக் கண்ணாடியை நான் போட்டுக்கொண்டு பார்த்தால் அது எப்படி எனக்குப்

பொருந்தும்? அல்லது திருப்தி இருக்கும். என்னுடைய மூக்குக் கண்ணாடிதானே எனக்குப் பொருந்தும். மன நிம்மதியுடன், தைர்யமாய் பலாபலன்களை அறிய நானே ஜாதகம் கணித்தால்தானே நன்று. அவர்கள் ஏதோ ஒரு சிறு தவறினால், தவறிவிட்டால், நான் படித்து அதை பயன்படுத்த முயன்றால், அது வீணாகிவிடுமே. ஸகலமும் தவறிவிடுமே. கணிப்பதில் சிறிதளவு தவறினால், பலா பலன்கள் எல்லாம் உதைக்குமல்லவா?

ஆக்ஷேபனை என்ன? ஜாதகம் மிகவும் கவனமாக, தவறின்றி கணிக்க வேண்டும். அடுத்த பாடம் ஜாதகம் கணிக்கும் மார்க்கம் சொல்கிறேன்.

ஜாதகம் என்றால், ஒரு குழந்தை பிறந்ததும், அந்த சமயத்தில் கிழக்கே, வான மண்டலத்தில் உதயமாகும் பாகத்தை லக்னமாகக் கணித்து அதே நேரத்தில் முன் கூறிய கிரகங்கள் எல்லாம் வான மண்டலத்தில் இருக்கும் ஸ்திதியை துல்லியமாகக் கணிப்பதே ஆகும். ஜாதகம் என்பது இவைகளை எல்லாம் குறிக்கும் ஓர் குறிப்பு.

குழந்தை ஜனன நேரம் என்கிறீர்களே. குழந்தை ஜனனமென்றால் சிரசு உதயமாகும் நேரமா? குழந்தை தாயை விட்டுப் பிரிந்ததும் குறிக்கும் நேரமா? குழந்தை முதன் முதலில் மூச்சு இழுத்துவிடும் நேரமா அல்லது குழந்தை கத்த ஆரம்பிக்கும் நேரமா?

இதைப்பற்றி எல்லாம் பல வித்துவான்கள் பலவித மாக உபதேசித்து உள்ளார்கள். சிலர் சிரசு தெரியும் காலத்தையே எடுத்துக்கொள்ள வேண்டும் எனச் சொல்கிறார்கள். சிலர் தாய் வேறு, சிசு வேறு எனப் பிரிந்ததும் நேரத்தைக் குறிக்கச் சொல்கிறார்கள். சிலர் கத்த ஆரம்பிக்க வேண்டும் என்கிறார்கள். நம் நாட்டிலே பிரசவம் ஆகும் குழந்தை, தாய் வயிற்றைவிட்டு விலகியதும் பூமியில் விழுவதால், "பூ பதனம்" என்று கூறியபடி குழந்தை தாயை விட்டு முழுவதும் பிரிந்து பூமியில் விழும் காலம் என உபதேசிக்கின்றனர். ஒருசிலர் குழந்தை, முதல் தடவை மூச்சு இழுக்கும் நேரம ஜனன நேரம் என்கின்றனர்.

ஒவ்வொருவர் உபதேசிப்பதை அவரவர் காரணங்கள் சொல்லியே, உபதேசிக்கிறுர்கள். ஒவ்வொருவரும் அக் காரணங்களை ஒப்புக்கொள்ளும்படியே உபதேசசிக்கிறுர் கள். ஆனுல் வராஹமிஹிராவோ, கலியுகத்திற்குச் சிரசு உதயம் எடுக்கக் கூடாது என வற்புறுத்துகிறுர். கண்டிக்கிறுர். " பூ.பதனமே உத்தமம் " என உபதேசிக் கிறுர். சில குழந்தைகள் ஜனித்து, சில காலம் கழித்து, சிகிச்சை செய்த பின்பே மூச்சு இழுக்க ஆரம்பிக்கலாம். ஆகவே தாய் வேறு குழந்தை வேறு என தாயின் உடலை விட்டுப் பிரிந்து பூமியில் விழுந்த நேரத்தைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். ஒரு குழந்தை பிறந்ததும், பிறந்த இடத்தையும், சரியான நேரத்தையும் குறித்துக் கொண்டு, பஞ்சாங்கத்தை எடுத்துக் கணிக்க வேண்டும்.

## பஞ்சாங்கம்

பஞ்சாங்கம் என்றுல் என்ன? ஐம்புலன்கள் என்கி றேமே அதுவா?

ஐம்புலன்கள் அல்ல, ஆனுல் ஐம்புலன்களில் மிக பிரதானமானது எது? கண் அல்லவா. ஆகவே சாஸ்திரங்கள் எல்லாவற்றிற்கும் கண்ணைப் போன்றது ஜோதிடம். கண்ணின் உள்ளிருக்கும் Retina போன்றது பஞ்சாங்கம். கண்ணின் இமை போன்று காப்பாற்ற வேண்டியவர்கள், உண்மையை நாடி உழைக்கும் ஜோதிடர் களாகும். " ஸர்வேந்திரியாணும் நயனம் பிரதானம் " என்ற படி, நமக்கு ஜோதிடம் பார்க்க, ஜாதகம் தேவை. ஜாதகம் கணிக்க சரிவர கணக்கிடப்பட்ட பஞ்சாங்கம் தேவை. ஒழுங்காக தவறே இல்லாமல் கணிக்கப்பட்ட பஞ்சாங் கத்தை கண்ணிற்கு ஒப்பிடலாம்.

பஞ்சாங்கம் என்றுல் ஐந்து பாகம் கொண்டது. அவை களை திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம் என்பார்கள்.

திதி: " திதி எனின் வானமண்டலத்தில் சூர்யனிருக் கும் ஸ்திதிக்கும் சந்திரன் இருக்கும் ஸ்திதிக்கும் இடையே

உள்ள தூரம், ஒரு கடிகாரத்தை முன்னால் வைத்துக் கொள். அதே 'டயலை' 12 ஆகவும், 60 ஆகவும் பிரித்து, பெரிய எழுத்தில் 1, 2, 3, 4 முதல் 12 வரை போட்டிருக்கிறார்கள். 12 என்பதே 0 ஆகும். அதில் மணி காட்டும் முள்ளும் இருக்கிறது. நிமிஷம் காட்ட நீள முள்ளும் இருக்கிறது. 60 நிமிஷமாக பங்கிட்டு இருப்பதை நீ "360" ஆக ஜாக்கிரதையாக வகுத்து வைத்துக் கொள். அதாவது ஒரு நிமிஷத்தை 6 ஆக பங்கிடு. அப்பொழுது இந்த டயலை 360 பங்கிடப்பட்டிருக்கிறது. இரண்டு முட்களையும் 12 அல்லது 0–வில் வைத்துக்கொள். நீண்ட நிமிஷ முள்ளை 1, 2 என சுற்றித் தள்ளிக்கொண்டே வா. ஒரு சுற்று, அதாவது பெரிய எழுத்து 12 வந்ததும், நீண்ட முள் 360° சுற்றிவிட்டது. 12 பெரிய எழுத்துக்களைத் தாண்டியது, 12 ராசிகளை தாண்டியதற்கு ஒப்பிடலாம். 0 முதல் 1 முடிய மேஷம். 1 முதல் 2 முடிய ரிஷபம் என எண்ணிக்கொண்டே வந்தால், நீண்ட முள் 12 ராசிகளையும் தாண்ட ஓர் முறை சுற்றி விடுகிறது. அதாவது 27 நக்ஷத்திரங்களையும் தாண்டி விடுகிறது. அதே சமயத்தில் சின்ன முள் என்ன செய்கிறது. மெதுவாக 0 முதல் 1 என்கிற இடத்திற்கு நகருகிறது. அதாவது மேஷம் முடிந்துவிடுகிறது. இவ்விதமாக, சந்திரன் எனும் நீண்ட முள்ளை வர, வர ஒவ்வொரு சுற்றிற்கும் சூர்யன் எனும் சிறிய, பருத்த முள், 30° நகர்கிறது. ஒரு வருடத்தில் 1, 2, 3 என 12 வரை வருகிறது. இது உதாரணமாகக் கொடுத்ததை "ஓரளவே" உபயோகப்படுத்த வேண்டும்.

மணி முள்ளையும், நிமிஷ முள்ளையும் தள்ளிக்கொண்டே வந்தால், ஒரு சமயத்தில் இரண்டு முட்களும், ஒன்றை ஒன்று மறைத்து, ஒன்றாகவே தெரிகிறது. அவ்விதமாக ஒரு முள் மறைபட்டு, இரண்டும் ஒன்றாகத் தென்படுகிறதே அதுதான் அமாவாசை எனப்படும். சற்று நிமிஷ முள்ளைத் தள்ளிக் கொண்டேவரின், இரண்டும் ஒரே கோட்டில் வெவ்வேறு திக்கை நோக்கி இருப்பதைப்போல் தெரிகிறதே. அதுவே பௌர்ணமி, பூர்ண சந்திரன். 6 மணி என்கிறபொழுது பார். இரு முட்களும் ஒரே கோட்டில் இருக்கிறது. ஆனால் பார்க்கும் திக்கு வேறு. நேர் எதிரிடை. இது பௌர்ணமி; 12 மணிக்குப் பார்.

இரண்டும் ஒட்டிக்கொண்டாற்போல் தோன்றுகிறது. அதுவே அமாவாசை. ஆதலால் அமாவாசையன்று சூர்யனுக்கும், சந்திரனுக்கும் இடையே தூரம் 0° பௌர்ணமியன்று அவைகளுக்குள்ள தூரம் வித்தியாசம் 180° இது மாறி மாறி நடந்து வருகிறது.

இந்த 180° ஐ 15 பங்கிட, ஒரு பங்கு 12 டிகிரி ஆகும். சந்திரன் ஒருநாளில் சுமார் 13° நகர்ந்தால், அதே காலத்தில் 1° சூரியன் நகரும். அப்பொழுது அவைகளுக்கு மத்தியில் சுமார் 12° தூர வித்தியாசம் இருக்கும். அப்படி சரியாக 12° தூரம் வித்தியாசம் இருக்கும் சமயமே ஒரு திதி முடிந்து மற்றொரு திதி ஆரம்பிக்கும் காலம் ஆகும். எப்பொழுது எல்லாம் சரியாக 12°, 24°, 36° போன்று 180° வரையும் அப்பால் 180°, 168°, 156° போன்று 0° வரையும் 12°, 12° தூர வித்தியாசத்தில் சூர்யனும், சந்திரனும் சஞ்சரிக்கின்றனரோ, அப்பொழுது எல்லாம் ஓர் திதி முடிந்து மற்றொரு திதி ஆரம்பிக்கும்.

நடப்பது ஹேலம்ப வருஷம். த்ருக் முறைப்படி கணிக்கப்பட்ட ஆனந்த போதினி பஞ்சாங்கத்தை எடுத்துக் கொள்ளுங்கள். 46-ம் பக்கத்தில் பங்குனி மீ என எழுதி இருக்கிறதே அப்பக்கத்தில் கவனியுங்கள். பங்குனி 6-ம் தேதி 'புத' என எழுதியது "புதன்கிழமை." அன்று கறுப்புச் சாந்துப்பொட்டு வைப்பதுபோல் குறித்திருப்பதைக் கவனி. அன்று அமாவாசையைக் குறிக்கிறது. பக்கத்தில் 'ச' என எழுதி இருப்பது சதுர்த்தசி என அர்த்தம் (புத்தகக் கடைசியில் சுறுக்கு எழுத்தும், அதன் முழு வார்த்தையும், பல திதிகளின் பெயரை வரிசையாகவும் கொடுக்கப்பட்டு உள்ளது.) அதாவது 14-ம் திதி முடிவு அன்று அடைந்து அப்பால் அவர்வாசை ஆரம்பம் எனப்பொருள் கொள்ளவேண்டும். 'ச'வின் எதிரில் 16-08 என்றிருப்பது சதுர்தசி 16 நாழிகை 8 வினுடிக்கு முடிகிறது என அர்த்தம். அப்பொழுது சூர்யனுக்கும், சந்திரனுக்கும் 12° தூரம். மேலும் 12° தூர வித்தியாசத்தைக் குறைத்துக் குறைத்து 0° ஆக ஆகும்பொழுது அமாவாசை எனப்படும். பங்குனி 7-ம் தேதி எதிரில் பார். 'அமா'வென எழுதியிருக்கிறது. அதன் எதிரில் 22–37 எனப் போட்டு

இருக்கிறது. அதாவது அமாவாசை சரியாக 22 நாழிகை 37 விநாடி. சூர்ய உதயம் முதல் ஆனதும், சூர்யனும் சந்திரனும் கூடுகிறது எனப் பொருள்படும், அதன் அருகில் 3-20 என்று எழுதி இருப்பது இந்தியா மணிப் படி பிற்பகல் 3 மணி 20 நிமிஷமாகும். 70-ம் பக்கத்தில் அன்று சூர்ய உதயம் இருப்பதைக் கவனித்தால் 6 மணி 17 நிமிஷம் என விளங்கும். ஆகவே 6 மணி 17 நிமிஷத் திற்குச் சூர்யன் உதயமான பின், 22 நாழிகை 37 விநாடி சென்றபின் அதாவது 3 மணி 20 நிமிஷத்திற்குச் சரியாக அமாவாசை என விளங்கும். மறுதினம் 'பிர' என்பது பிரதமையைக் குறிக்கிறது. 29-17 என எழுதி உள்ளது. சூர்யனைத் தாண்டி, சந்திரன் வேகமாய் ஓட, சூர்யன் அதே காலத்தில் மெதுவாக நகர, 29 நாழிமை 17 விநாடிக்கு இரண்டும் சரியாக 12° தூரத்திலிருக்கிறது என புரிந்துகொள்ள வேண்டும். அப்பால் பங்குனி மீ 22-ம் தேதி வெள்ளிக்கிழமை எதிரில் "பௌ" என உள்ளது. பௌர்ணமியைக் குறிக்கிறது. 7-52 என்றுள்ளது. அன்று சூர்ய உதயம் முதல் 7 நாழிகை 52 விநாடி பொறுத்து, சரியாக சூர்யனும் சந்திரனும் 180°க்கு அப்பால் இருக் கிறது எனக் கொள்ளவேண்டும். அன்று (70-ம் பக்கம் பார்த்தால் சூர்ய உதயம் 6 மணி 6 நிமிஷம்) மணி காலை 9-15க்குச் சரியாக பௌர்ணமியாகும். ஆகவே, அமாவாசை முதல் பௌர்ணமிவரை 15 திதிகளாகவும், பௌர்ணமி முதல் அமாவாசை வரை 15 திதிகளாகவும், வகுத்து, பிரதமை, த்விதியை எனப் பெயரிட்டிருக்கின்றனர். சந்திரன் அமாவாசை முதல் பௌர்ணமி வரை வளர் வதை, வளர்பிறை சந்திரன் சுக்லபக்ஷம் என்கிறோம். இது தாயின் பாசம், நாளுக்கு நாள் வளர்வதுபோன்று அமாவாசை முதல் நாளுக்கு நாள், சந்திரன் வளர்கிறது. பௌர்ணமியை பூர்ண சந்திர தினம் என்றும், அப்பால் சந்திரன் தேய்ந்து, தேய்ந்துவர அமாவாசையன்று சந்திரன் இருப்பது தெரியாது போகிறது. இதையும் 15 பங்கிட்டு, தேய்பிறைச் சந்திரன், கிருஷ்ணபக்ஷம் என் கிறோம். இவைகளே திதிகள் எனப்படும். அதை பஞ் சாங்கத்தில் பார்க்கும் விதமும் சொன்னேன். நன்கு விளங் கிற்று? ஏதாவது சந்தேகம் இருக்கிறதா?

எங்கள் கணக்கு வாத்தியாருக்கு மேலே இருக்காய் அண்ணா நீ, இப்படி எனக்கு 'ட்யூஷன்' சொல்லிக்கொடுக்க ஒருவர் இருந்தால் ஹா! என்ன பண்ணுவேன் தெரியுமா? இருக்கட்டும். மேலே நீ சொல்லலாம், அண்ணா! நீ என்ன சொல்கிறாய் மணி.

குழந்தை மாதிரி நினைச்சுண்டு, நீ ரொம்ப விஸ்தாரமாய்ச் சொல்கிறாய் அண்ணா! ஆனால் ஒன்று. நீ சொல்லிக் கொடுப்பதை கேட்கவிட்டு எதிலும் சந்தேகம் இருக்காது.

வயிறு நிரம்ப சாப்பிட்டவனைத் திரும்ப சிநேகிதன் விருந்தில் சாப்பிட உட்காரச் சொன்னால் அவன், எல்லோருடனும் உட்காரவேண்டும். எல்லாம் சாப்பிடாவிட்டாலும் முந்திரிபருப்பு வறுவல் இப்படி தினப்படி உபயோகிக்காததைச் சாப்பிடுகிறது. ஆடுமாதிரி இருக்கக்கூடாது. யானையைப்போல் புத்திசாலித்தனமாக நடக்கவேண்டும். யானையும், ஆடும் தினம் ஒரு நந்தவனம் சென்று இலைகளையும், புல்லையும், நாணலையும் தின்னும் ஆனால் ஒருநாள் கரும்புத் தோட்டத்தில் புகுந்தன. யானை கரும்பை முறித்து, அடியில் ருசி உள்ளதை உறிஞ்சி இனிப்பான பாகத்தை, வேறு எங்கும் கிடைக்காததும், கரும்பில் மாத்திரம் கிடைக்கக்கூடிய இனிப்பை உட்கொள்கிறது. ஆடோ, இங்கேயும் அந்த தோகையையே தின்கிறது. ஆட்டின் புத்தி சதா மந்தம். எந்த வஸ்துவில் எப்பாகம் ருசி என ஆராய்ந்து, அதை உட்கொள்ளாது. அதுபோலன்றி, புல் கிடைத்தால் புல்லில் நல்லதாகப் பொறுக்கி உட்கொள்ளவேண்டும்; கரும்புக் கிடைத்தால், இரும்பைப் போல் கடினமாக இருப்பினும் முறித்து, கசக்கி இனிப்பை யானைப்போல் உட்கொள்ளவெண்டும். ஆகவே நான் கொடுப்பதில் புல், இலை, கரும்பு எல்லாம் இருக்கும். நீங்கள் ருசியானதையும், இதுவரைப் புசிக்காததையும் உட்கொண்டு ஆனந்திக்கவேண்டும். தவிர, திருவள்ளுவனார் உபதேசித்தப்படி.

"கற்க கசடறக் கற்க—கற்றபின் நிற்க அதற்குத்தக"

கற்பதை நன்றாகக் கற்கவேண்டும்.

அண்ணு, திதியைப் பற்றி அறிந்துகொண்டேன். இது பஞ்ச அங்கங்களில் ஒன்று என அறிந்தேன். அடுத்த படியாகச் சொல்லவேண்டும்.

## கிழமை—வாரம்

தாய்க்குப்பின் தாரம், அதேபோல் திதிக்குப் பின் வாரம். அதன்பின்பே நக்ஷத்திரம், ஆகவே, வாரத்தைப் பற்றிச் சொல்கிறேன் கேள். வாரம் என்றுல் 7 கிழமைகள் கொண்ட 168 மணி நேரமுள்ள ஒரு வாரம் எனக் கருதக் கூடாது. இங்கே வாரம் என்றுல் கிழமை எனப் பொருள் கொள்ளவேண்டும். பஞ்சாங்கத்தில் 5-ம் தலைப்பின் கீழ் "வாரம்" எனக் குறிப்பதில், சுருக்கெழுத்து உபயோகப் படுத்தியிருக்கிருர்கள். "ஞா" ஞாயிற்றுக்கிழமையையும், "திங்" திங்கட்கிழமையும், "செவ்" செவ்வாய்க்கிழமையை யும், "புத" புதன்கிழமையையும், "வியா" வியாழக்கிழமை யையும், "வெ" வெள்ளிக்கிழமையையும், "சனி" சனிக்கிழ மையையும் குறிக்கின்றன. 'ஒருவாரம் எனும் ஏழு தினங் கள் ஞாயிறு ஆரம்பித்து சனியில் பூர்த்தி ஆகிறது. ஞாயிற்றுக்கிழமைக்கு அதிபதி சூர்யன். திங்கட்கிழமை அதிபதி சந்திரன். செவ்வாய்க்கிழமையினதிபதி செவ் வாய். இவ்விதமே புதன், குரு, சுக்கிரன், சனி ஒவ்வொரு கிழமையின் அதிபதி ஆவர்.

கிழமை எப்பொழுது ஆரம்பித்து, எப்பொழுது முடி கிறது?

சூர்யன் கிழக்கே உதயமாகும்பொழுது ஓர் தினம் ஆரம்பிக்க, சூர்யன் அஸ்தமனம் ஆகும்வரை "பகல்" சூர் யாஸ்தமனமாகி மறுதினம் சூர்யோதயம் வரை, அன்றைய இரவு ஆகும். ஒவ்வொரு தினமும் சூர்ய உதய நேரமும், அஸ்தமன நேரமும் சற்று வித்தியாசம் ஆகிக்கொண்டே இருக்கும். கடிகாரம் ஒரே வேகத்தில் செல்லும். கடி காரத்தை வைத்து கவனித்தால், இந்த வித்தியாசம் தெரியவரும். சூர்ய உதயம் முதல், மறுதினம் சூர்ய உதயம் ஆகும்வரை ஒரு தினம் ஆகும். உதாரணமாக சூர்ய உதயம் 6 மணி 36 நிமிஷத்திற்கு என்றுல், 6 மணி 35

நிமிஷம் 59 ஸெகண்ட் வரை முன் தினத்தின் பெயரே கொடுக்கவேண்டும். முன் தினத்தின் அதிபதியே, தினுதிபதி ஆவார். ஆனால் 6 மணி 36 நிமிஷம் முதல் அன்றைய தினம் ஆகும். அத்தினத்ததிபதியே மறுதினம் (6 மணி 35 நிமிஷம், 10 வினடிக்கு சூர்ய உதயம் எனில்) 6-35-10 வரை அதிபதி ஆவார். சூர்ய உதயம் ஒருநாள் 5 மணி 40 நிமிஷத்திற்கு என்ருல் அன்றையதினம் 5-40க்கே ஆரம்பம். மறுநாள் 5-41க்குச் சூர்ய உதயமாஞல் மறுநாள் 5–40-59 வரை முன்னுளின் ஆதிக்கியமே ஆகும். இரவு 12 மணிக்கு ஓர் தினம் முடிந்து, மறுதினம் ஆரம்பிப்பதாக நாம் அனுஷ்டிப்பது, மேல்நாட்டார் ஏற்படுத்திய ஒரு முறை. அவ்வழக்கத்தைத் தொழில் முறைக்கும், உலக வியவகாரத்திற்கும் பயன்படுத்துகிரேம். ஜோதிடப் பலாபலன் அறிய, சூர்ய உதயம் முதல், மறுதினம் சூர்யன் உதிக்கும்வரை ஒரு தினமாகும். 24 மணிக்கு, 60 நாழிகை: 1 மணிக்கு 2 நாழிகை. 30 வினடிகள் 1 நிமிஷத்திற்கு 2½ விஞடிகள்.

## நக்ஷத்ரம்

அடுத்தபடியாக நக்ஷத்திரம். இவைகள் மொத்தம் 27. அசுவதி முதல் ரேவதிவரை 27 உள்ளன. ஏற்கனவே சொன்னபடி உபமானம் எடுத்தால் பங்குனி 6-ம் தேதி சதயம் 0—42 எனப் போட்டு இருக்கிறது. மறுதினம் வியாழன்று பூரட்டாதி 8—17 என்பதைக் காண்கிரேம். ஆகவே பங்குனி 6–ம் தேதி சதயம் சூர்ய உதயமாகி 0 நாழிகை 42 விஞடிவரைத்தான் இருக்கிறது என்றும், அப்பால் பூரட்டாதி நக்ஷத்திரம் ஆரம்பம் என்றும் தெரியவருகிறது. அவ்விதமே மறுதினம் பூரட்டாதி நக்ஷத்திரம் 8 நாழிகை 17 விஞடிவரை. ஆகவே பூரட்டாதி நக்ஷத்திரம் மொத்தம் 67 நாழிகை 35 விஞடி. அதாவது சந்திரன் பூரட்டாதி நக்ஷத்திரத்தைத் தாண்ட 67 நாழிகை 35 விஞடி ஆகிறது என விளங்கும். பூரட்டாதி நக்ஷத்திரம் வான மண்டலத்தில் 320°ல் ஆரம்பம் 333° 20'ல் முடிவு அடைகிறது. இந்த 13° 20° சந்திரன் செல்ல 67 நாழிகை 33 விஞடியாயிற்றென அறியவும். ஓர் நக்ஷத்திரத்தின்

பெயரை பஞ்சாங்கத்தில் எழுதி அதன் எதிரில் குறிக்கும் நாழிகையும், விஞடியும் அந்த நக்ஷத்திர முடிவும், நக்ஷத்திர முடிவில் சந்திரன் சஞ்சரிக்கும் நேரமுமாகும். ஒவ்வொரு நக்ஷத்திரமும் சரியாக 60 நாழிகை அல்லது 24 மணிநேரம் தான் என எண்ணலாகாது. அதன் நேரம் வித்தியாசப் படும். ஆனுல் சந்திரன் அசுவதி முதல் பாதம் முதல் ரேவதி முடிய சஞ்சரிக்க 27 நாட்கள், 7 மணி, 43 நிமிஷம், $11\frac{1}{2}$ ஸெகண்டுகள் ஆகின்றன. ஒருமுறை அமாவாசை யின் பொழுது சூர்யனும், சந்திரனும் கூடிய சமயம் முதல், அடுத்தமுறை அமாவாசையின்பொழுது சூர்யனும், சந்திரனும்கூடி இருக்கும் சமயம்வரை 29 தினங்கள், 12 மணி, 44 நிமிஷங்கள் 2-8 ஸெகண்டுகளாகும். (ஓர் வருஷம் என்பது 365. 24244 நாட்கள் கொண்டதாகும். 365 நாட் கள், 5 மணி, 48 நிமிஷம் 49-536 ஸெகண்ட் ஆகும்.) திதிக்கும், வாரத்திற்கும் எவ்விதம் சுருக்கெழுத்து எழுதி உள்ளனரோ, அவ்விதமே நக்ஷத்திரத்திற்கும் எழுதி உள்ள னர். இவைகள் எல்லாம் புத்தக முடிவில் காணலாம்.

## கரணம்

இதுவரை மிகவும் முக்கியமாகப் பஞ்சாங்கத்தில் கவனிக்க வேண்டியதைப்பற்றிக் கூறினேன். மேலும் நான்காவதாக கரணங்களைப் பற்றியும், அப்பால் கடைசி அங்கமான, 5வதான, யோகத்தைப்பற்றியும் சொல்கிறேன். கரணங்கள், யோகங்கள் இவைகளைப் பயன்படுத்தி அதிகம் சொல்ல முடியாததாலும், பலாபலன்கள் எடுத்து உரைக்க இவற்றை இக் காலங்களில் அதிகமாக உபயோகப்படுத்தி சொல்லும் அளவு கிரந்தங்கள் இல்லையாதலால், ஓரளவே இதைத் தெரிந்துகொண்டால் போதுமானது.

கரணங்கள் மொத்தம் 11. இவற்றை இரண்டு பிரி வாக வகுத்து சரகரணங்களென்றும், ஸ்திர கரணங்கள் என்றும் இருவகை உண்டு. அவைகள் பவம், பலவம், கௌலவம், தைதிலம், கரம், வணிஜம், விஷ்டி என்றும் அவைகளுக்கு இந்திரன், பிரம்மன், மித்திரன் ஆர்யமன், பூமி, லெக்ஷ்மி, யமன் அதிபதிகளாகும், இதர நான்கு கரணங்களும் அசரம் அல்லது ஸ்திரம் எனப்படும். அவை

கள் சகுனி சதுஷ்பாதம், நாகம்: கிம்ஸ்துக்னம் என நான்கும் கலி, வ்ருஷ, பானின் (பாம்பு), மாருத (வாயு), அதிபதியாவர். இவைகளைச் சுபமுகூர்த்தக் காலங்கள் கண்டு பிடிக்கும்பொழுது உபயோகிக்கிறோம். அதன் பலன் அப்பால் உரைக்கப்படும். பஞ்சாங்கத்தில் பார்க்கும்பொழுது ஒவ்வொரு திதியின் முன்பாதியில் ஒரு கரணமும், பின் பாதியில் ஒரு கரணமும் ஆக ஒரு திதிக்கு இரண்டு கரணங்கள். இந்த கரணங்களில் 4 மட்டும் கிருஷ்ண பக்ஷம் சதுர்தசியின் பின் பாதியில் ஒன்றும், அமாவாசையில் இரண்டும், சுக்ல பிரதமை முன் பாதியில் ஒன்றும் வருகின்றன. மற்ற ஏழும் சுக்ல பிரதமை பின் பாதி முதல் ஒரு திதிக்கு இரண்டு கரணங்கள் வீதம் திரும்பித் திரும்பி வருகின்றன. அதனால் இந்த ஏழும் சரகரணங்கள் என்றும், கடைசி 4-ம் ஸ்திர கரணங்கள் என்றும் இருவகைகள் ஆகின்றன. இந்த ஸ்திர கரணங்களில் எக்கார்யத்தையும் நடத்தக் கூடாது. சுருக்கெழுத்தும், பெயரும் புத்தக கடைசியில் காண்க.

## யோகம்

அடுத்தபடியாக யோகங்களைப் பற்றிக் கூறுகிறேன்.

ஏண்ணு, சகடயோகம், கேசரி யோகம் என்கிறார்களே அதுதானே?

இல்லை. அது வேறு. இப்பொழுது சொல்லப் போவது வேறு.

ஓ! தெரிந்துவிட்டது. அமிர்தயோகம், சித்த யோகம முதலியன அது.

அதுவும் இல்லையடா. இதுவேறு. இனி உரைக்கப் போகும் யோகம்தான். ஐந்து அங்கங்களில் ஒன்று ஆகும் இந்த யோகம் மொத்தம் 27. இவை ஒரு கிரகத்தின் சலனத்தைக்கொண்டோ, வேறு சாயா கிரகங்களைக் கொண்டோ கணிக்கப்பட்டது அல்ல. சூர்யன், சந்திரன் இருவரும் ஒரே திக்கை நோக்கி நேராக சஞ்சரிக்கின்றன. அப்படி அல்லாமல் அமாவாசை முதல் சூர்யன் ஒரு

திக்கை நோக்கியும், அதற்கு எதிர் திக்காக சந்திரன் போவதாக எடுத்துக்கொள். அப்பொழுது இந்த 360 சுற்றிவர 22-42 நாட்கள் ஆகும். 25-42 நாட்களில் இவ்விதம் நாம் யோசனை செய்யும் சூர்யனும், சந்திரனும் திரும்ப சந்திக்கும். இந்த 25-42 நாட்களை 27 யோகங்களாகப் பிரிக்கின்றனர். எப்படி 27 நக்ஷத்திரங்களை 27-23 நாட்களில் பங்கிடுகிறோமோ, அவ்விதமே 27 யோகங்களும் கணிக்கப்பட்டு இருக்கின்றன. இவைகளின் பெயரை கடைசிப் பக்கத்தில் காண்க.

இவ்வைந்தும் கணக்கிடப்பட்டு பிரசுரிக்கின்றனரே, அதுதான் பஞ்சாங்கம் எனப்படும்.

அமிர்தயோகம் முதலியன எப்படிப் போடுகிறார்கள்.

ஓர் கிழமையன்று ஏதாவது ஒரு நக்ஷத்திரம் நடைபெறுமானால், அப்பொழுது நல்லதா, கெடுதலா என அறிய, இவ்விதம் பெயரிட்டுள்ளனர். உதாரணமாக பங்குனி மீ 6-ம் தேதி புதன்கிழமை அன்று சதயம் சூர்ய உதயம் முதல் 0 நாழிகை 42 வினாடியும் அப்பால் பூரட்டாதியுமாம். அமிர்தாதியோகம் என வேறு தலைப்பின் கீழ் எழுதி உள்ளதைக் கவனி. அப்பொழுது 'சி' எனும் சித்தயோகம் 0-42 அப்பால் 'அ' எனும் அமிர்தயோகம் என விளங்கும். அதாவது புதன்கிழமையன்று சதயம் கூடுமானால் அது சித்தயோகமெனும் மத்திம சுபப்பலன் என்றும், அப்பால் புதன்கிழமையன்று பூரட்டாதி கூடுமானால் உத்தம பலன் என அறிவிக்க அமிர்தயோகம் என்றும் எழுதப்பட்டிருக்கிறது. பங்குனி 23-ந் தேதியைக் கவனித்தால் சனிக்கிழமை சித்திரை 10 நாழிகை 55 விநாடி எனறும், அமிர்தாதியோக தலைப்பின்கீழ் 'ம' எனும் பொல்லாத மரண யோகம் 10 நாழிகை 55 விநாடிவரை இருக்கிறதென அறியவேண்டும். அப்பால் ஸ்வாதி நக்ஷத்திரம், சனிக்கிழமை கூடுவதால் 'சி' எனப்படும் சித்தயோகம் நல்லதெனக் கொள்ளவேண்டும். 20-ந் தேதியன்று புதன்கிழமை. பூரம் 32 நாழிகை 53 விநாடி. அப்பால் உத்திரம் இரண்டு நக்ஷத்திரங்களும் புதன்கிழமை கூடின் நல்லதானதால் 'அ 60.0' என்றுச் சொல்லப்பட்டிருக்

கிறது. அமிர்தயோகம் உத்தமம் எனப்படும். இவ்விதம் பார்ப்பது, இந்த தலைப்பின்கீழ் பார்ப்பது எல்லாம் சுப கார்யம் செய்வதா, கூடாதா என்பதற்கே அன்றி, ஜோதிட பலாபலன் கூற கிஞ்சித்தும் பிரயோஜனமில்லை. உபயோ யோகப்படுத்துவதுமில்லை.

## பஞ்சாங்கத்திலுள்ள வித்தியாசங்கள்

இதென்ன அண்ணு! பஞ்சாங்கத்திலே ஒன்றுக்கொன்று ஒத்துக்கொள்ள மாட்டேன் என்கிறதே. கடிகாரம்தான் ஒரு வீட்டில் நாலு இருந்தால் நாலும் நான்கு தினுசாய் காட்டும். கடிகாரம் கழகம் ஒன்று ஏற்படுத்தி நாம் எப்பொழுதும் மணி காட்டுவதில் ஒத்திருக்கக் கூடாது என எல்லா கடிகாரமும் ஓர் ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொண்டதுபோல், அவைகள் வித்தியாசமான நேரத்தையே காட்டுகின்றன. கணக்குப் போட்டுக் கணிக்கும் பஞ்சாங்கத்தில் கூடவா, இவ்வளவு தாரதம்யம். அப்படின்னு எந்த கடிகாரம் மணியை நம்புகிறது எனச் சந்தேகம் வருகிறதுபோல எந்தப் பஞ்சாங்கத்தை அனுஷ்டிக்கிறது என சந்தேகம் உண்டாகிறது.

இது சரியான கேள்வி. 2 மாதங்கள் முன்தான் நான் ஓர் சம்பந்தத்தைச் சொல்லி எதுதான் சரி. எப் பஞ்சாங்கத்தைத்தான் உபயோகப்படுத்த வேண்டும் என ஓர் சிலருக்குச் சொன்னேன். அதை அப்படியே சொல்கிறேன் கேள். உண்மை தெரியாமல் இருந்திருந்தால் ஒருகல்யாணமே நின்றுவிடும்போல் ஆகிவிட்டது. உண்மையை விளக்கிச் சொன்னேன். இருதரத்தாரும் ஒப்புக்கொண்டு விவாஹம் நடந்தேறியது. நண்பர் என் வீட்டிற்கு வந்தார்.

"ஜோஸ்யர்வாள், சௌக்கியமா".

"சௌக்கியம் தான். நீங்கள் சௌக்கியமா. உங்கள் குழந்தை பத்மா சௌக்கியமாய் இருக்கிருளா. அவள் கல்யாணம் எந்த மட்டும் இருக்கிறது?"

"நான் இன்னும் எத்தனை தடவைகள் தான் நம்ப குழந்தை ஜாதகத்தை எடுத்துக்கொண்டு இங்கும் அங்குமாகச் சுற்றுகிறது. அப்பா! போதும், போதும் என்றாகி விட்டது. என்ன ஆனாலும் சரி. இந்த வருஷம் எப்படியாவது கல்யாணத்தைச் செய்து விடுவது எனத் தீர்மானித்து இருக்கிறேன்."

"ஆண்டவன் அருள் புரிய நானும் வேண்டிக்கொள்கிறேன். சீக்கிரம் நடைபெறும். கவலை வேண்டாம்."

"கடவுள் தான் கண்ணைத் திறக்க வேண்டும். என்ன ஐயா என்ன, என்னவோ செய்ய வேண்டும் என பாடு படுகிறேன். ஏது, ஒன்றும் அசைக்க முடியவில்லையே."

"இப்பொழுது ஏதாவது ஜாதகம் கொண்டு வந்து இருக்கிறீர்களா."

"எனது அந்தரங்க நண்பர் ஒருவருக்கு ஒரு பையன் இருக்கிறான். அந்தப் பையன் என் பெண்ணிற்கு ஏற்ற வரன். அவன் நற்குணமும், நன்னடத்தையும் எனக்கு மிக திருப்தி. என் ஸம்ஸாரத்திற்கு அந்த பையன் பேரில் என்னை விட அதிகமாக, அவன் குணத்தைக் கண்டு, ஓர் பிரமை. அவனுக்கே குழந்தை பத்மாவைக் கொடுக்க வேண்டும் என தினந்தோறும் தலையணை மந்திரம் ஜபிக்கிறாள். போறாத குறைக்கு, அவன் ஐ. ஏ. எஸ்.ஸும் தேர்ச்சிப் பெற்று, நல்ல மதிப்பும், வரும்படியும் உள்ள இலாக்காவில் வேலையில் அமர்ந்து விட்டான். இவ்வளவு இருந்தாலும், நண்பர் குடும்பங்களுக்குள், கொண்டு கொடுத்து, விவாஹம் முதலியனச் செய்யின் நீண்ட காலமாக இருந்துவரும் நட்பிற்கு ஏதாவது பங்கம் வந்து விடுமோ என நான் பயந்து வந்தேன். ஆனால், இன்று என் காதில் பட்டபடி பார்த்தால், அவர்கள் வீட்டில் என் நண்பர், நண்பரின் சம்சாரம், அந்தப் பையன் மூவருமே, என் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ளத் தீர்மானித்தார்களாம். என் பெண் ஜாதகத்தையும், பையனின் ஜாதகத்தையும் அவர்களுடைய ஜோஸ்யரிடம் காட்டி, விவாஹப் பொருத்தம் இருக்கிறதா எனக் கேட்டார்களாம். அவர்கள் ஜாதகங்களைப்பார்த்து, பெண் நக்ஷத்திரம் முதல்

எண்ணிவர 7ம் நக்ஷத்திரம் பையனுடையது எனச் சொன்னதும் அன்றி, ரஜ்ஜுவும் தட்டுகிறது எனச் சொல்லி பொருந்தாது என்றூர்களாம். அவர்கள் மனம் ஒடிந்து இருக்கிறூர்களாம். இருந்தாலும் நீங்கள் புராதன நூல்கள் பல படித்து, அநேக க்ரந்தங்களைக் கற்றுணர்ந்து, தேர்ச்சி அடைந்திருப்பதால் உங்களையும் கேட்டு அறிந்து போகலாம் என வந்து இருக்கிறேன். புறப்படும் பொழுது கருட தரிசனம் கிடைத்தது. நன்மையே விளையும் எனும் தீர்மானத்தில் வந்து இருக்கிறேன். சகுனத்தில் எனக்கு அவ்வளவு நம்பிக்கை."

"ஜாதகங்களை எடுங்கள். பார்க்கலாம்."

"இந்தாருங்கள்".

(தெருவில் சைகிளில் செல்பவன் 'கண, கண'வென மணி அடித்துக்கொண்டு செல்கிறுன்.)

"இப்பொழுதும் பார்த்தீரா, சகுணத்தை."

"சந்தோஷம். நல்லபடியாக முடிந்தால், நல்லது."

(இரண்டு ஜாதகங்களையும் கவனிப்பதற்கு முன்பாக, இந்த ஜாதகங்களைச் சரியாக திருக்கணித முறைப்படி, கணித்திருக்கிறதா எனச் சோதித்தார். பெண் ஜாதகம் த்ருக் முறைப்படி, த்ருக் கணித பஞ்சாங்கத்தின் முறைப் படி கணிக்கப்பட்டு இருப்பதாகவும், பையனின் ஜாத கத்தை வாக்கிய முறைப்படி கணிக்கப்பட்டிருப்பதாகவும் அப்படி வாக்ய முறைப்படி கணிக்கப்பட்டிருப்பதால் நக்ஷத் திர பேதம் ஏற்படுவதையும் கண்டார். மறுமுறையும், தான் சரிதாஞ என்று கவனித்தார். தான் சரி என்றும், கொடுக்கப்பட்ட ஜாதகம் தவறு என்றும் கண்டுகொண் டார்.) "ஐயா, உங்கள் பெண் ஜாதகம் த்ருக் பஞ்சாங்க முறைப்படி கணிக்கப்பட்டுச் சரியாக இருக்கிறது. பெண் ணின் நக்ஷத்திரம் பரணியே. ஆனல் பையனின் ஜாதகம் த்ருக் முறைப்படி கணிக்கப்படாமல் வாக்ய முறைப்படி கணக்கிடப்பட்டு வாக்ய முறைப்படி கணித்திருக்கிறூர்கள். வாக்யப்படி 'பூசம்' என எழுதி இருப்பது தவறு. ஆனல் உண்மையாக அவனது நக்ஷத்திரம் புனர்பூசம் ஆகும்.

த்ருக் முறைப்படி நக்ஷத்திரம் மாறுகிறது. நீங்களே பஞ்சாங்கத்தைப் பாருங்கள்."

"எங்கே, கொடுங்கள் பார்ப்போம்."

"பையனே, பிரஜோத்பதி வருஷம் சித்திரை மாதம் 11-ந் தேதி வெள்ளிக் கிழமை இரவு 54 நாழிகைக்கு ஜனனம். அன்று வாக்ய பஞ்சாங்கத்தில் புனர் பூசம் 49 நாழிகை 10 விநாடிக்கு முடிவடைந்து, பூசம் 49 நாழிகை 10 விநாடிக்கு ஆரம்பித்து விட்டதாயும், பூசம் ஆரம்பித்து 4 நாழிகை 50 விநாடி பொறுத்து, 54 நாழிகையில் ஜனனம் எனக் குறித்திருக்கின்றனர். ஆனால், த்ருக் கணித முறைப்படி புனர் பூசம் 57 நாழிகை 8 விநாடி வரை இருப்பதாலும், ஜனனம் 54 நாழிகைக்கே ஏற்பட்டு விட்டதால் புனர் பூசம் 4-ம் பாகத்தில், ஜனன நேரத்திற்குப் பின்னும் 3 நாழிகை 8 விநாடி புனர் பூசம்: இருக்கும்பொழுதே புனர் பூசத்திலேயே ஜனனம் என ஏற்படுகிறது.

ஆகவே சரியாகக் குறித்தப்பின் இருவர் ஜாதகங்களையும் சோதித்தால் இருவர் ஜாதகங்களும், உத்தப் பொருத்தத்தைக் காட்டுவது எனச் சொல்ல வேண்டும். நக்ஷத்திரங்கள் பொருந்தும். உத்தமம். ரஜ்ஜு தட்டவில்லை. இவர்களுடைய ஆயுள், ஆரோக்யம், மன ஒற்றுமை, தனவசதி, புத்திர பிராப்தி முதலியன கவனித்தாலும், மிக திருப்திகரமாக இருக்கிறது. இருவர்களுக்கும் விவாஹம் நடைபெறுமா, பொருத்தம் இருந்தாலும், ப்ராப்தம் இருக்கிறதா எனப் பரர்த்தாலோ, பரிபூர்ண பிராப்தம் இருக்கிறது என கிரக நிலைகள் தீர்மானமாகத் தெரிவிக்கின்றன. ஆகவே இருவருக்கும் விவாஹம் செய்யலாம். நடைபெறும். சுகமாக இருப்பார்கள்."

"அப்பாடா எனக்கு இப்பொழுது இருக்கும் ஆனந்தம் எவ்வளவு என்று ஊஹிக்க முடியுமா. நான் என்றைக்கும் உங்களை மறக்க மாட்டேன். ஒரு சமாசாரம். என் நண்பர் இதைக் கேட்டதும் என்னைவிட அதிகமாக சந்தோஷம் அடைவார். ஆனால் அங்கே ஒரு பிரம்மஹத்தி போல் ஒருவர் ஒன்று ஏற்கனவே பிதற்றி விட்டார், என்னவோ 7ம் நக்ஷத்திரம், ரஜ்ஜு என்று எல்லாம்

சொல்லி மனதைக் குழப்பி விட்டாரே. இப்பொழுது என்ன செய்கிறது என்று தெரியவில்லை."

"ஏன் நான் ஒன்றுச் சொல்கிறேன். கேட்கிறீர்களா. நான் வருகிறேன். வாரும் இருவரும் போகலாம். நான் அவரிடம் உண்மையை விளக்குகிறேன். நன்மை தானே விளையும்."

"உமக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன் ஐயா. வாரும் போகலாம். வேண்டிய பஞ்சாங்கங்களையும், கிரந்தங்களையும் எடுத்துக் கொள்ளுங்கள். நான் கொண்டு வருகிறேன்."

"நானே எல்லாம் கொண்டு வருகிறேன். நீங்கள் சரிவர நடக்க ஊன்று கோல் கொண்டு வந்தாலும், அதுவும் எங்கே பளுவாக இருக்குமோ என்று, உங்கள் சேவகன் அதைத் தூக்கிக்கொண்டு வருவதை நான் கவனித்தது உண்டு. "பெண்ணின் பேரிலுள்ள பாசம், விவாஹம் நடைபெற வேண்டும் என்கிற ஓர் ஆசைபோல் இருக்கிறது. பஞ்சாங்கத்தைத் தூக்குகிறேன் என்கிறீர், வாரும் போகலாம்."

(இருவர்களும் நண்பர் வீட்டிற்கு வந்து சேருகின்றனர்.)

திண்ணையில் உட்கார்ந்து இருக்கும் நண்பர், இவர்கள் இருவரையும் "வாருங்கள், வாருங்கள்" என வரவேற்கிருர்.

(ஜோதிடரைச் சுட்டிக் காட்டி) இவர் தான் எங்கள் ஜோஸ்யர். இவரிடம் நான் நம் குழந்தைகள் ஜாதகங்களைக் கொடுத்து மணம் புரிய இரு ஜாதகங்களும் பொருந்துகிறதா எனக் கேட்டேன். மேல்கொண்டு நீங்களே சொல்லுங்கள் ஜோஸ்யர்வாள். இவர் மஹா பண்டிதர். பட்டம் வைத்துக் கொள்ளவில்லை. பட்டத்திலும் நம்பிக்கை இல்லாமல் சட்ட திட்டத்தை மனப்பாடமாக, ஒழுங்கான முறையில் படித்திருப்பவர்.

நான் இருவர் ஜாதகங்களை வாங்கியதும், இரண்டும் த்ருக கணித முறைப்படி ஒழுங்காகக் கணிக்கப்பட்டு

இருக்கிறதா என சோதித்தேன். பெண் ஜாதகம் சரி. பையனின் ஜாதகத்தில் நக்ஷத்திர பேதம் இருப்பதைக் கவனித்தேன். பையனுக்குப் பூசம் என எழுதப்பட்டு இருக்கிறது. ஆனால் உண்மையாக அதன் முதல் நக்ஷத்திரமான புனர் பூசம் ஆகும். வாக்யத்தை உபயோகித்ததால் வந்த தவறு இதுவே.

அது எப்படி தவறும். நாங்களும் வாக்கியம்தானே அனுஷ்டிப்பது.

வாக்ய கணிதம் துல்யமாகாது த்ருக் கணிதமே "சரி."

ஏன்? வாக்கியம் எப்படி துல்லியமாகாது.

நான் நிதானமாகவும், லகுவாகவும் சொல்கிறேன். கர்ண கடூரமாக ஓர் சில பகுதிகள் வரினும் ஊக்கமாய் கேட்டீராயின் ஏக்கம் எல்லாம் பறந்துவிடும்.

பூமி, சூர்யன், சந்திரன் யாவும் ஆகர்ஷண சக்தியால் ஒன்றை ஒன்று இழுத்துக் கொண்டு இருக்கிறது. பூமி, தன்னைத்தானே தினம் ஒருமுறை சுற்றுவதுடன் சூர்யனைச் சுற்றி ஓர் ஆண்டிற்கு ஒரு முறை வருகிறது. நாம் பூமியில் வசிப்பதால் பூமி சுற்றுவதை நாம் காண முடியாது. ஆனால் சூர்யன் பூமியை தினம் ஒரு முறை சுற்றி வருவது போல் தோன்றும் வானத்தில் சுற்றி வரும் பாதையைத்தான், வான மண்டலம் என்றும், 12 ராசிகளைக் கொண்ட ராசி மண்டலம் என்றும் சொல்கிறோம்.

தினந்தோறும் சூர்யன் உதயமாக சற்று முன் வானம் பூமியைத் தொடுவதுப்போல் தோன்றும் இடத்தைக் கிழக்கே கவனித்துப் பாருங்கள். சில நக்ஷத்திரங்கள் புலப்படும். சில தினங்களில் இந்த நக்ஷத்திரங்கள் ஆகாயத்தில் கொஞ்சம் மேலே வந்து விடும். அவைகளின் கீழ் சூர்யன் உதயம் ஆகும் முன் வேறு சில நக்ஷத்திரங்கள் தெரிய வரும். இன்னும் சில தினங்களில் இவைகளும் வானத்தின் மேலே வந்து விடும். வேறு சில நக்ஷத்திரங்கள் சூர்ய உதயத்திற்கு முன் புலப்படும். இவ்விதம் பார்த்துக் கொண்டே வந்தால் சரியாக ஒரு வருஷம் சென்றதும் முதன் முதலில் பார்த்த நக்ஷத்திரங்கள்

சூர்யன் உதயமாகும் முன் திரும்பவும் அதே இடத்தில் தென்படும் இவ்விதமே சூர்யாஸ்தனமானதும் கவனித்து வாருங்கள். பார்த்துவரின் சரியாக ஒரு வருஷம் சென்றதும் முதன் முதலில் சூர்யாஸ்தமனம் ஆனதும் மறைந்து வந்த நக்ஷத்திரங்கள் திரும்பவும் அவ்விதமே மறையும். ஆதலின் இந்த நக்ஷத்திரங்கள் இருக்கும் வரிசையிலே தோன்றும் இந்த பாதையே ராசி மண்டலம் ஆகும்.

"சூர்யன் தான் இந்தப் பாதையில் சஞ்சரிக்கிறதா. அல்லது எல்லா கிரகங்களுமே சஞ்சரிக்கின்றனவா ?"

"சூர்யன் முதல் சனி வரை எல்லா கிரகங்களும் இந்தப் பாதையில் சஞ்சரித்தாலும், சந்திரன் மாத்திரம் அதிக வேகமாக இந்த முட்டை வடிவமான பாதைக்குச் சற்று சாய்ந்தாற்போல் வட்டமானப் பாதையில் சஞ்சரிக்கும். சந்திரன் மாத்திம் சுற்றிவரும் வட்டமான பாதை இரண்டு இடங்களில் சந்திப்பதுப்போல் தோன்றும். ஓரிடத்தை ராகு என்றும், தெற்கே சந்திக்கும் இடத்தை கேது என்றும் கூறுகிறோம். சந்திக்கும் இடம் ராகு, கேது எனப்படுவதால், அவைகளும் சூர்ய மண்டலத்திலே நகர்ந்து வரும். எப்பொழுதும் வக்ர கதியில் வரும். அதாவது சூர்யன் வான மண்டலத்தில் நகர்ந்து வரும் திக்கிற்கு எதிராக ராகு, கேது நகரும்.

இந்த மண்டலங்கள் நிலையானதுதானா ?

ஆம். சூர்ய மண்டலம் நிலையானதே. ஆனால் சந்திரனுடைய துங்கன் (Moon's apogee) நிலையை அனுசரித்து சந்திரனின் துங்க மண்டலத்தின் உருவம் (Moon's orbit) அப்போதைக்கப்போது சற்று சற்று வித்தியாசம் ஏற்படுகிறது.

இவைகள் ஒரே வேகத்தில் சுற்றுகின்றனவா?

இல்லை. சூர்யன் மேஷம் முதல் மீனம் வரை ஒரே மாதிரி செல்கிறது. ராகு, கேதுக்கள் எதிராக மீனம் முதல் மேஷம் வரை வருகின்றன. இதர கிரகங்கள் சுற்றும் வேகத்தில் வித்தியாசம் உண்டு.

ஏன் இந்த வித்தியாசம்? சந்திரனுக்கு வித்தியாசம் எப்படி ஏற்படுகிறது.

சந்திரன் துங்கமண்டலத்தின் உருவம் வித்தியாசப் படுவதாலும் இதர கிரகங்களின் ஆகர்ஷண சக்தியால் சந்திரனுக்கு உண்டாகும் அசைவினுலும், சந்திரனுக்குக் கதிபேதம் (Variation of motion) உண்டாகிறது.

இவைகள் எல்லாம் நமது முன்னேர்கள் கண்டு பிடித் திருக்கிருர், பாருங்கள் ஸார்.

முன்னேர்கள் எல்லோரும் கண்டு பிடித்து, எல்லோ ரும் அனுஷ்டிக்கப்படவில்லை. த்ருக் கணித முறையைக் கண்டுப் பிடித்தவர்களே, த்ருக் கணிதத்தில் இந்த பேதத்தை உபயோகப்படுத்தி, அதில் திருத்தம் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து சரியாக கணிக்கிருர்கள், ஆனல் வாக்ய கணிதம் உபதேசித்தவர்கள் இதைக் கவனிக்கவில்லை. கணக்கில் சேர்த்துக் கொள்ளவில்லை, ஆகவே த்ருக் முறையை உபயோகித்து கணித்த த்ருக் பஞ்சாங்கமும், வாக்ய பஞ்சாங்கமும் திதி, நக்ஷத்திரம் முதலியவைகளின் நாழிகைகளில் வித்தியாசம்ஏற்படுகிறது.

இந்த வித்தியாசம் எப்போதும் ஒரே வித்தியாசமா? இல்லையேல் தினமும் மாறுமா?

திதி, நக்ஷத்திரங்கள் ஆரம்பிக்கும் காலம், முடிவடை யும் சமயம் தினந்தோறும் வித்தியாசப்படும். அமாவாசை முதலிய காலங்களில் வித்தியாசம் குறைவாகவும், மற்ற நாட்களில் சுமார் 16, 17 நாழிகை வரையிலும் வித்தியாசம் ஏற்படும்.

அவ்வளவு வித்தியாசமா?

ஆம்.

கணித முறைப்படி வாக்யம் துல்லியமானதல்ல என்று நீர் வான சாஸ்திரம் பிரகாரம் எடுத்துக் கூறிய யாவும் விளங்கிற்று. யாராவது ஒரு ஜோதிடராவது த்ருக் முறைப்படி தான் ஜாதகம் கணிக்க வேண்டும் என்று உபதேசித்து இருக்கிருர்களா?

ஒருவர் என்ன! பலர் கூறியும் இருக்கிறார்கள். வற்புறுத்தியும் இருக்கிறார்கள். 'பலதீபிகை'யில் 'மந்த்ரேஸ்வரர்' முதல் அத்தியாயம் 3வது ஸ்லோகத்தில் "கதி: த்ருக் துல்யத்வம், கணித கர்ணை: என்றும், மஹாகவி காளிதாஸர் 'உத்ர காலாம்ருதத்தில்' முதல் காண்டம் 4-வது சுலோகத்திலும் "த்ருக்கணிதையக்ஜான் வீபுடதரான்' என்றும் ஜாதகங்களை த்ருக்கணித முறைப் படிக் குறிக்க உபதேசித்து இருக்கிறார்கள்.

ஐயா ஜோஸ்யரே! உத்திரகாலம்ருதம் என்றால் போதும், ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். வேறு வார்த்தை யாவரும் பேசுவதற்கில்லை. தேவி, வாக்தேவி, மஹாகாளி அவர்கள் அருளால் அல்லவா ஞானத்தைப் பெற்று, உலக மக்களுக்கு உதவி புரிய உபதேசித்தது ஆகும். தேவி வாக்கு அல்லவா, காளிதாஸரின் உபதேசம். இருந்தாலும், நம்முடைய குழந்தைகள் ஜாதகங்களைப் பார்த்தீரே. நீர் முடிவாக என்னச் சொல்கிறீர்?

நான் என்ன சொல்வதற்கு இருக்கிறது. ஜோதிடத்தை நம்பினால் அதே ஜோதிடம் எழுதி இருக்கும் முன்னோர்கள் த்ருக் கணிதத்தை உபயோகப்படுத்த வேண்டும் என உபதேசித்ததையும் அனுஷ்டிக்க வேண்டும்.

நமஸ்காரம் ஜோஸ்யர்வாள். நாங்கள் மேற்கொண்டு விவாஹ விஷயமாக முயற்சி செய்யலாம் அல்லவா. 'த்ருக்' என்றால் த்ருஷ்டி என்பார்கள். கண்ணால் பார்ப்பதுதான் உண்மை. வாக்யம் என்றாலே காதாலே கேட்டது எனப் பொருள் கொள்ளலாம். காதால் கேட்டதாகக் கூறினால் தவறுகள் இருப்பது சஜகம்தானே. ஜோஸ்யரே, த்ருக் முறைப்படியே நல்ல நாள் பாருங்கள். பெண்ணைப் பார்க்கப்போய் அங்கே வெற்றிலை, பாக்கும் மாற்றிவிட

லாம். நீர் முதலில் இருந்து கடைசிவரை இருந்து நடத்தி வைத்து, இரு சிசுக்களையும் ஆசிர்வாதம் செய்யவேண்டும்.

இல்லை. நான் ஊரைவிட்டு வந்து பல்லாண்டுகள் ஆயின. போய்வர சௌகரியம் இப்பொழுது இருக்கிறது. மன்னிக்கவும், போய்வரலாமா?

கல்யாணத்தை நீர்தான் நிச்சயம் செய்தீர். எங்கள் ஆறுபேருக்கும் ஆனந்தம் அளித்தீர். ஆறுமுகன் அனைவருக்கும் அருள்புரிவாராக; வணக்கம்.

ஏண்ணா! அப்படின்னா, த்ருக்தான் உபயோகப்படுத்தனும். அதிலும் எது அண்ணா உங்களுக்குப் பிடித்தது?

ஆனந்த போதினி, நாமகள், கும்பகோணம் மடத்துப் பஞ்சாங்கம் இம் மூன்றும் தேவலை. ஆனந்த போதினி ஸி. ஜி. ராஜன் பஞ்சாங்கமே உத்தமம்.

## ஜாதகம்

"ஜாதகம் எப்படி கணிப்பது."

முதல் பாடம் ஆனதால், ஓரளவு குறிக்கும் முறையைச் சொல்கிறேன். கவனமாகக் கேள். மிக துல்லியமாக கணிப்பதைச் சொல்லித்தர வேண்டுமானால், இந்த தடவை அதுவே போதிக்க சரியாகி விடும். ஆகவே தற்காலம் இதை அறிந்துகொள்.

முதலில் ஜனன தினம், ஜனன நேரம், ஜனன ஸ்தலம் இவற்றைக் குறித்துக் கொள். ஜனன தினம்! முன்பே சொன்னேன். சூர்ய உதயம் முதல் மறுநாள் சூர்ய உதயம்வரை ஒரு தினம் ஆகும். சிசுவின் ஜனனம் இந்திய கால மணிப்படி எப்பொழுது எனத் தெரிகிறது. பங்குனி

மாதம் 6-ம் தேதி காலை 7 மணிக்கு ராமன் ஜனித்ததாகவும், இரவு 2 மணிக்கு லக்ஷ்மணன் ஜனித்ததாகவும் கருது.

## லக்னம்

பங்குனி மாதம் கிழக்கே சூர்யன் உதயமாகும்பொழுது மணி என்ன என ஆனந்த போதினி பஞ்சாங்கம் 70-ம் பக்கம் இரண்டாவது கட்டத்தைப் பார். சென்னையில் ஜனனமானதால் மூன்றும் கட்டத்தையும் கவனி.

இதர ஊர்களில் ஜனனமானால் அவ்வூரின் அக்ஷாம்சம் என்ன என்று அறிந்து அந்த அக்ஷாம்சத்திற்கு சூர்ய உதயம் என்ன என்று அறியவும். சூர்ய உதயம் அக்ஷாம்சத்திற்கு அக்ஷாம்சம் மாறுபாடு அடையும். நாளுக்கு நாளும் வித்தியாசப்படும். ஆகவே குழந்தை ஜனித்த ஊரின் அக்ஷாம்சம் அறிந்து, பிறந்த தினத்தன்று சூர்ய உதயம் எப்பொழுது எனக் குறிக்க வேண்டும்.

பங்குனி மாதம் 6-ம் தேதி அக்ஷாம்சம் 13 ஆகிய சென்னைக்கு சூர்ய உதயம் 6 மணி 18 நிமிஷம் ஆகும். ராமன் ஜனனம் 7 மணி என்பதாலும் சூர்ய உதயம் ஆதியாக எடுப்பதாலும், சூர்ய உதயமாகி 42 நிமிஷங்களில் ஜனனம். ஒரு நாள் 60 நாழிகை அல்லது 24 மணிக் கொண்டது. ஆகவே 1 மணிக்கு $2\frac{1}{2}$ நாழிகைகள். 1 நாழிகைக்கு 60 வினாடி. 1 மணிக்கு 60 நிமிஷங்கள். ஆகவே 1 நிமிஷத்திற்கு $2\frac{1}{2}$ வினாடிகள் ஆகின்றன. ராமன் சூர்ய உதயம் ஆகி 42 நிமிஷங்களில் ஜனித்ததால் $42 \times 2\frac{1}{2} = 105$ வினாடிகள் $= 1$ நாழிகை 45 வினாடிகளில் ஜனனம். லக்ஷ்மணன் ஜனனம் இரவு 2 மணியானதால், அதில் 6 மணி 18 நிமிஷங்கள் கழிக்க, சூர்ய உதயாதி 19 மணி 42 நிமிஷங்கள் ஆகும்.—$19 \times 2\frac{1}{2}$ நாழிகைகளும், $42 \times 2\frac{1}{2}$ வினாடிகளும் ஆகும். $= 47\frac{1}{2} + 1$ நாழிகை 45 வினாடி $= 49$

நாழிகை, 15 விநாடி. பின்பு பங்குனி மாதம் என்கிற 46-ம் பக்கத்தைப் பார். அதில் ராசி இருப்பு என்று 20வது கட்டத்தில் காணலாம். 6-ம் தேதியன்று 3 நாழிகை 31 விநாடியெனப் புலப்படும். பங்குனி மாதம் எந்த ராசி முதலில் உதயம் ஆகும் தெரியுமா. சூர்ய உதய காலத்தில் வான மண்டலம் கிழக்கே பூமியைத் தொடுவதுப் போன்றுத் தெரிய, சூரியனும் மெதுவாக எழுந்திருப்பதை பார்க்கிறோம். அது எந்த ராசி தெரியுமா?

"தெரியாது."

சித்திரை மாதம் பூராவும மேஷம் கிழக்கே உதயமாகும். அதில் சூர்யன் அப்பொழுது சஞ்சரிக்கும். அப்பால் வைகாசி மாதம் நடைபெறும்பொழுது, சூர்யன் உதயமாகும்பொழுது ரிஷப ராசி கிழக்கே உதயமாகும். ஆனி மாதம் மிதுனம். இவ்விதமே பங்குனி மாதம் பூராவும் மீன ராசி உதயமாகும். ஒவ்வொரு ராசியும் 30° ஆனதால், ஒவ்வொரு நாளும் மீன ராசியில் ஒவ்வொரு டிகிரி அதிகமாக சூர்ய உதயம் ஆவதுமுன் உதயமாகி விடும். பங்குனி முதல் தேதி மீனம் ஆரம்பிக்க சூர்யனும் உதயமாகும், பங்குனி 15 தேதி அளவில், மீனம் பாதி, சூர்ய உதயத்திற்கு முன்பே உதயமாகிவிடும். மற்ற பாதி சூர்யன் உதயம் ஆனபின வெளிவரும். சூர்யன் ராசியின் சரி மத்தியில் இருக்கும். பங்குனி 30-ம் தேதி மீனம் முடியும் 30° உதயமாகும். ஆகவே ஜனித்த தினம். சூர்யன உதயமாகி, மீனம் முழுவதும் வெளிவர எவ்வளவு காலமாகும் என்று "20-ம் கட்டத்தில் ராசி இருப்பு" எனும் தலைப்பில் கொடுத்திருப்பதை கவனிக்கவும். 3 நாழிகை 31 விநாடி எனக் குறித்திருக்கிறது. அதாவது சூர்ய உதயம் 6 மணி 18 நிமிஷத்திற்கு அப்பால் 3 நாழிகை 31 விநாடி முடிய, மீனம் முடிவடைந்து, மேஷம் உதயமாக ஆரம்பிக்கும். பிறகு பஞ்சாங்கத்தில் 72-ம் பக்கத்தில்

சுதேச, உத்திர அக்ஷாம்சத்திற்கு உரிய ராசிமான சங்கியைக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதைக் கவனித்தால், சென்னை அக்ஷாம்சமான 13 அக்ஷாம்சத்திற்கு மேஷம் 4 நாழிகை 29 வினடி, ரிஷப அக்ஷாம்சம் 5 நாழிகை, 5 வினடி; மிதுன அக்ஷாம்சம் 5 நாழிகை 26 வினடி எனக் குறித்திருப்பதைக் கவனிக்கவும். ராமன் ஜனித்ததே சூர்ய உதயமாகி 1 நாழிகை 45 வினடி. அன்று மீனராசி 3 நாழிகை 31 வினடி. ஆகவே மீன ராசியே கிழக்கே உதயமாகிக் கொண்டிருக்கும்பொழுதே ஜனித்தாகி விட்டது. ஆகவே ஜனித்தது முதல் மீனம் முடிய 3 நாழிகை 31 வினடியில், 1 நாழிகை 45 வினடி கழிக்க, 1 நாழிகை 46 வினடிகள் உள்ளன. மீன ராசியோ மொத்தம் 4 நாழிகை 11 வினடி. அதில் 1 நாழிகை 46 வினடிகள் இருக்க ஜனனம். இதுவே ஜனன லக்னம். ஜனனம் காலத்தில் மீனம் 4-11-ல் 1-46 கழிக்க, 2 நாழிகை 25 வினடி. ஜனனத்திற்கு முன் உதயமாகி 1-46 பாக்கி என எடுத்துக்கொள்ள வேண்டும். ஜனன லக்னம் மீனம்.

லக்ஷ்மணன் சூர்ய உதயாதி நாழிகை 49 வினடி 15க்கு ஜனனம். மீனமோ, ஜனன காலத்தில் 3 நாழிகை 31 வினடி ராசி இருப்பு இருக்கிறது. பிறகு மேஷம் 4-29, ரிஷபம் 5-5, மிதுனம் 5-26 என எழுதிக்கொண்டு போய் 49-15 எந்த ராசியில் இருக்கிறதெனக் குறிக்க வேண்டும். 3°31 + 4°29 + 5°5 + 5°26 + 5°22 + 5°8 + 5°4 + 5°16 + 5°28 + 5°19 = 50°8 என வருகிறது. ஜனனமோ 49 நாழிகை 15 வினடி. ஆகவே ஜனனம் 5°19 எனும் தனுசு ராசியாகும். 50 நாழிகை 8 வினடி வரை தனுசு. தனுசு 5-19 ஆகவே தனுசு 44-49க்கு ஆரம்பித்தது. ஜனனமோ 49-15-ல் ஏற்பட்டது. 44-49 போக, 4 நாழிகை 26 வினடி கழிந்தப் பின், 50-8-ல் 49- 15 போக 0 நாழிகை 53 வினடி இருக்க தனுசு ராசி லக்னமாக ஜனனம். ஜனன லக்னம் தனுசு.

ராசி

அண்ணா இந்த கணக்குப் புரிந்தது. ஆனால் ராசி என்கிறாய், லக்னம் என்கிறாய். ஜனங்களும் என் லக்னம் இது, ராசி இது எனச் சொல்கின்றனர். சிலர் எனக்கு லக்னமும் ராசியும் ஒன்றே என்கின்றனர். அதென்ன.

பின்னால் வரும். இருந்தாலும் இந்த சந்தேகத்தை தீர்க்கிறேன். லக்னம் என்றால், ஒருவர் ஜனித்தபொழுது, கிழக்கே வான மண்டலத்தில் எப்பகுதி உதயமாகிறது என சொல்கிறோமோ அது. லக்ஷ்மனன் லக்னம் தனுசு. ராமன் லக்னம் மீனம். புரிந்ததா. ராசி என்பதற்கு இரண்டு பொருள்கள். மேஷம் ரிஷபமெனப் பொதுவாகப் பேசும்பொழுது, மேஷ ராசி, ரிஷப ராசி என்கிறோம். இங்கே ராசி என்றால் வீடு என கண்டுக்கொள். ஆனால் ஜனங்கள், தத்தம் ராசி என்னவென்று சொல்லிக் கொள்வதோ, அவர்கள் ஜனித்தப்பொழுது சந்திரன் எந்த ராசியில் மேஷம் முதல் மீனம் வரை இருக்கும் வீடுகளில் எந்த வீட்டில் இருந்தபொழுது ஜனனம் எனக் குறித்துச் சொல்வது. ஜனனக் காலத்தில் சந்திரன் நின்ற வீடு ராசியாகும். வான மண்டலத்தில் உதயமானதோர் பாகம் லக்னமாகும்.

நல்லது அண்ணா. நன்கு விளங்கிற்று. மேலே அண்ணா.

லக்னத்தைக் குறித்ததும், சந்திரன் இருக்கும் நிலையை அறிய வேண்டும். அன்று சூர்ய உதயமான பின் 0 நா 42 விநாடி வரை சதயம் அப்பால் பூரட்டாதி. ஆகவே இருவரும் பூரட்டாதியில் ஜனனம். பூரட்டாதி நக்ஷத்திரம் 6-ம் தேதியன்று 0 நாழிகை 42 விநாடிக்கு ஆரம்பித்து மறு தினம் 8 நாழிகை 17 விநாடி வரை இருக்கிறது. அதாவது 67 நாழிகை 35 விநாடி ராமன் ஜனனம். சூர்ய

உதயாதி 1 நாழிகை 45 விஞடியானதால், சதயம் 0-42க்கு முடிய, பூரட்டாதியில் 1 நாழிகை 3 விஞடி கழிந்த பின்னரே ஜனனம்: மேலும் பூரட்டாதி நக்ஷத்திரம் 66 நாழிகை 32 விஞடி இருக்கிறது. லக்ஷ்மணனே 49 நாழிகை 15 விஞடிக்கு ஜனனமானதால் பூரட்டாதி நக்ஷத்திரம் 49-15-ல் 0-32 போக 48 நாழிகை 33 விஞடி கழிந்து விட்டது. மொத்தம் 67-35-ல் 48-33 போக 19 நாழிகை 2 விஞடி இருக்கின்றன. ஆகவே இருவருக்கும் பூரட்டாதி நக்ஷத்திரமாகும். ஏற்கனவே ஒவ்வொரு நக்ஷத்திரத்தையும் 4 சம பாகமாய் போட்டு, எப்பாகம் என அறிந்தால், துல்லியமாக ஒரு கிரகம் இருக்கும் இடம் குறிப்பிட முடியும். பூரட்டாதி மொத்தம் 67 நாழிகை 35 விஞடி. ஆகவே ஒவ்வொரு பாகமும் 16-53¾ விஞடிகளாகும். ராமன் ஜனித்த காலத்தில் பூரட்டாதி 1 நாழிகை 3 விஞடி கழிந்தது. ஆகவே முதல் பாகத்திலேயே ஜனனம். லக்ஷ்மணனே 48 நாழிகை 33 விஞடி கழித்து ஜனனம். 3ம் பாதம் 33 நாழிகை 47½ விஞடிக்கு ஆரம்பித்து 50 நாழிகை 41¼ நாழிகைக்கு முடிகிறது. ஆகவே பூரட்டாதி 3ம் பாதத்தில் ஜனனம். அப்பால் புத்தகம் கடைசியில் பார்த்தால், எந்த எந்த ராசியில் எந்த நக்ஷத்திரம் இருக்கிறது, எவ்வளவு பாதங்கள் இருக்கின்றன எனப் புலப்படும். பூரட்டாதி 1, 2, 3 பாதங்களும் கும்ப ராசி என்றும், பூரட்டாதி 4ம் பாதம் மீனமெனப் புலப்படும். ஆகவே இருவரும் சந்திரன் கும்பத்திலிருக்க, கும்ப ராசியில் ஜனனம். ராமன் முதல் பாதம். லக்ஷ்மணன் 3ம் பாதம். ராமன் மூத்த புத்திரன். லக்ஷ்மணன் 2ம் புத்திரனெனக் கேட்டிருப்பதுபோல், இங்கு தற்செயலாக, உதாரணமும் ஒன்று மூன்று பாதங்களாய் அமைந்துவிட்டது. பின்பு ஜாதகத்திற்குக் கடைசி பக்கங்களில் போட்டிருப்பதுபோல் கோட்டை இழுத்து 12 ராசிகள் ராசிக்கும், 12 வீடுகள் நவாம்சத்திற்கும் போட்டுக்கொள்ளவும்.

**நவாம்சம்**

அப்பால் 21ம் பக்கம் பார்க்க:—அங்கே கிரகபாத சாரங்களெனக் குறித்து இருக்கிறது. பங்குனி மாதம் 6-ம் தேதி என்றும், ஒரு ஜனனம் காலை 1 நாழிகை 45விநாடிக்கென்றும், மற்றொன்று 49 நாழிகை 15 விநாடிக்கென்றும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவும்.

சூர்யன் பாதசாரத்தைப் பார்த்துவரின், பங்குனி மாதம் 1ம் தேதி 12 நாழிகை 8 விநாடிக்குப் பூரட்டாதி 4ம் பாதம் நுழைய, கும்பத்தைவிட்டு மீனம் பிரவேசித்தது. பங்குனி மாதம் 4ந் தேதி 33 நாழிகை 2 விநாடிக்கு உத்திரட்டாதி 1ம் பாதம் பிரவேசித்தது. அப்பால் 7ம் தேதி தான் உத்திரட்டாதி 2ம் பாதம். ஆகவே ஜனன காலம் 6-ம் தேதி காலையானாலும், இரவானாலும சூர்யன் மீன ராசியில் உத்திரட்டாதி 1ம் பாதத்தில் நகருகிறதென அறியவும். சந்திரனுக்கோ கணித்தாகிவிட்டது. செவ்வாய் (அங்காரகன், குஜன், மங்கள்) பங்குனி மாதம் 4-ம் தேதி 6 நாழிகை 27 விநாடிக்கு உத்திராடம் 4ம பாதம் மகரத்தில் சஞ்சரிக்க, 8ம் தேதிதான் மகரத்திலேயே திருவோணத்திற்குச் செல்கிறது. ஆகவே செவ்வாய் மகரத்தில் உத்திராடம் 4ம் பாதமென அறியவும். புதன்: பங்குனி மாதம் 42, 48 நாழிகை 23 விநாடிக்கு ரேவதி 1ம் பாதம். மீனத்திலேயே சஞ்சரிக்க ஆரம்பிக்க, 6ம் தேதி 38 நாழிகை 26 விநாடிவரை ரேவதி 1ம் பாதமாகும். அப்பால் 2ம் பாதமாகும். ஆகவே காலையில் ஜனித்த ராமனுக்குப் புதன் ரேவதி 1லும், இரவில் ஜனித்த லக்ஷ்மணனுக்கு (ஜனனம் 38 நாழிகை 27 விநாடிக்கு அப்பாலானதால்) புதன் 2ம் பாதத்திலும் சஞ்சரிக்கிறது. இதைக் குறித்துக் கொள்ளவும்.

குரு மார்கழி மாதம் 27ம் தேதி சுவாதி 1ல் துலா ராசியில் சஞ்சரிக்கிறது. மாசி மாதம் அதே இடத்தில்

வக்ரமாகத் திரும்பச் செல்வதுப்போலத் தோன்றுகிறது. பங்குனி மாதம் 9 தேதியே சித்திரை 4ம் பாதம் திரும்ப வரும். ஆகவே குரு ஸ்வாதி முதல் பாதத்தில் வக்கிர கதியில் இருக்கிறது. இது இருவர் ஜனன நேரத்திற்கும் ஒரே மாதிரிதான்.

சுக்ரன் பங்குனி மாதம் 5ம் தேதி 22 நாழிகை 25 விநாடிக்குத் திருவோணம் 4ம் பாதத்திலும், 9ம் தேதியே 24 நாழிகை 25 விநாடிக்கு அவிட்டம் முதல் பாதம் செலலும், ஆகவே ஜனித்தபொழுது இருவருக்கும் சுக்கிரன் திருவோணம் 4ம் பாதத்தில் சஞ்சரித்திருக்கிறது.

சனி தை மாதம் 24ங் தேதி 35 நாழிகை 2 விநாடி முதல் மூலம் 1ல் தனுசுல் சஞ்சரிக்க, பங்குனி மாதம் 22ம் தேதிவரை நேர்கதியில் மூலம் 1ம் பாதத்திலேயே சஞ்சரிக்கிறது. ஆகவே ஜனன நேரத்தில் சனி மூலம் முதல் பாதத்தில் நேர்கதியில் இருக்கிறது. ராகுவும். கேதுவும் எப்பொழுதும் வக்கிர கதி என்றேன் அல்லவா, ஆகவே கவனி. தை மாதம் 5ம் தேதி 6 நாழிகை 25 விநாடிக்குச் சுவாதி 2ல் ராகுவர, பங்குனி மாதம் 9ங் தேதி சுவாதி முதல் பாதத்திற்கு வருகிறது. ஆகவே ஜனன தினத்தன்று ராகு சுவாதி 2ம் பாதம் கேது அவ்விதமே அசுவதி 4ம் பாதம் என்பதைக் கவனித்துக் குறித்துக் கொள்: யூரேனேஸ் பூசம் 4ம் பாதம் என்றும், நெப்ட்யூன் சுவாதி 2ம் பாதம் என்றும் தெரிகிறதா. குறித்துக்கொள். அப்பால் கடைசி பக்கத்தில் சுலபமாக ராசி சக்கரமும் நவாம்ச சக்கிரமும் போடக் குறிப்பதைக் கவனித்துப்பார். குறித்தால் பின்பக்கத்தில் கண்ட பிரகாரம் வரும்.

| | | | |
|---|---|---|---|
| புதன் (ரேவதி 1)<br>சூர்யன்<br>(உத்ரட்டாதி 1)<br>லக்னம் | கேது<br>(அசுவதி 4) | | |
| சந்திரன்<br>(பூரட்டாதி 1) | ராமன்<br>இராசி | | யுரேனஸ்<br>(பூசம் 4) |
| சுக்ரன்<br>(திருவோணம் 4)<br>செவ்வாய்<br>(உத்திராடம் 4) | | | |
| சனி<br>(மூலம் 1) | | நெப் (சுவாதி 2)<br>ராகு (சுவாதி 2)<br>குரு (சுவாதி 1) | |

| | | | |
|---|---|---|---|
| புதன் (ரேவதி 2)<br>சூர்யன் (உத் 1) | கேது<br>(அசுவதி 4) | | |
| சந்திரன்<br>(பூரட்டாதி 3) | லக்ஷ்மணன்<br>ராசி | | யுரேனஸ்<br>(பூசம் 4) |
| சுக்ரன்<br>(திருவோணம் 4)<br>செவ்வாய்<br>(உத்திராடம் 4) | | | |
| லக்னம்<br>சனி (மூலம் 1) | | நெப் (சுவாதி 2)<br>ராகு (சுவாதி 2)<br>குரு (சுவாதி 1) | |

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய்<br>(உத்திரம் 4) | சனி (மூலம் 1)<br>சந்திரன்<br>(பூரட்டாதி 1) | | |
| | ராமன்<br>நவாம்சம் | | சுக்ரன்<br>(திருவோணம் 4)<br>கேது<br>(அசுவதி 4) |
| ராகு<br>(சுவாதி 2)<br>நெப்ட்யூன்<br>(சுவாதி 2) | | | சூர்யன்<br>(உத்ரட்டாதி 1) |
| புதன்<br>(ரேவதி 1)<br>குரு (சுவாதி 1) | யுரேனஸ்<br>(பூசம் 4) | | |

| | | | |
|---|---|---|---|
| செவ்<br>(உத்ராடம் 4) | சனி<br>(மூலம் 1) | | சந்திரன்<br>(பூரட்டாதி 3) |
| | லக்ஷ்மணன்<br>நவாம்சம் | | கேது<br>(அசுவதி 4)<br>சுக்ரன்<br>(திருவோணம் 4) |
| புதன் (ரேவதி 2)<br>நெப் (சுவாதி 2)<br>ராகு (சுவாதி 2) | | | சூர்யன்<br>(உத்ரட்டாதி 1) |
| குரு<br>(சுவாதி 1) | யுரேனஸ்<br>(பூசம் 4) | | |

இதுவே ராசியும், லக்னமுமாகும். இதுவே ஜனன காலத்தில் கிரகங்கள் நின்ற நிலையைக் குறிக்கும் படம் எனப்படும். குறிப்பு என்றும் ஜாதகமென்றும் சொல்வார்.

ஆமாம் நவாம்சத்திற்கு நவாம்ச லக்னமென்று பார்த்திருக்கிறேனே அதென்ன?

பொறு, சொல்கிறேன். ஒவ்வொரு ராசியின் சங்கியைப் பார்த்தாயா? மீனராசி சங்கியை மதருஸ் எனும் 13° உத்திர அக்ஷாம்சத்திற்கு எவ்வளவு என 72ம் பக்கம் பார்த்தாய் அல்லவா. 4 நாழிகை 11 விநாடி. அதாவது 251 விநாடிகள். இதை 9 சம பங்குபோடு. ஒரு ராசியில் 9 பாதங்கள் அடங்கிய $2\frac{1}{4}$ நக்ஷத்திரங்கள் அல்லவா. லக்னமும் எந்த நக்ஷத்திரத்தில் எந்த பாதத்தில் இருக்கிறதென கண்டுபிடி. மீன ராசி 4-11ல் ஜனிப்பதற்கு முன் 2 நாழியை 25 விநாடி செல்ல, 1 நாழிகை 46 விநாடிகள் உள்ளன. ராசி சங்கியை 4–11ஐ 9ல் வகுக்க, ஒரு பாதத்திற்கு 28 விநாடிகளுக்குச் சற்றுக் குறைவு. ஆகவே 2 நாழிகை 25 விநாடி சென்றது என்றால் 140 விநாடிகளில் 5 பாதங்கள் முடிவடைகிறது. மீனராசியில் 6ம் பாதம் உதயமாகிவிட்டது. மீனராசியில் முதல் பாதம். பூரட்டாதி நக்ஷத்திரத்தின் 4ம் பாதமாகும். பின்பு 4 பாதங்கள் உத்திரட்டாதியாகும். ஆகவே மீனராசியில் 6ம் பாதம் ரேவதியின் முதல் பாதமாகும். நவாம்சத்தில் ரேவதி முதல் பாகம் எங்கு உள்ளது என பின் அட்டவணையைப் பாருங்கள். தனுசு எனத்தெரியும் ஆகவே ராமனுக்கு தனுசு நவாம்ச லக்னமாகும், தனுசில் லக்னம் எனக்குறி.

அதேபோல் லக்ஷ்மணன் ஜனித்த தனுர் ராசியின் சங்கியை 5 நாழிகை 19 விநாடி—318 விநாடி. ஒரு பாகத்திற்கு $35\frac{4}{9}$ விநாடியாகும். லக்ஷ்மணன் ஜனிப்பதற்குமுன் 4 நாழிகை 26 விநாடி கழிந்தது. 0 நாழிகை 53 விநாடி இருக்கிறது. 266 விநாடி கழிந்தது. ஆகவே ஏழு பாதங்கள் கடந்து 8ம் பாதத்தில் ஜனனம். 8ம் பாதம் தனுர் ராசியில் பூராடம் 4ம் பாதமாகும். ஆகவே விருச்சிக நவாம்சமென அட்டவணையில் பார்க்கவும்.

இருவர் ஜாதகங்களிலும் நவாம்ச லக்னங்களை முறையே தனுசு, விருச்சிகம் எனக் குறிக்கவும்.

இவைகளே ஜாதகக் குறிப்பில் கிரக நிலையும், லக்ன இருப்புமாகும்.

## நக்ஷத்திர தசை - உடுதசை

ஏண்ணு! ஜனன காலத்திலே ஒருத்தருக்கு சுக்ர தசை என்கிறார்கள். ஒருவருக்குச் சனி தசை என்கிறார்கள். இதென்ன. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தசை ஆரம்பிக்குமா, என்ன? எந்தக்கிழமை பிறக்கிறார்கள் எனப் பார்த்து, அந்த தசை என்கின்றனரோ. இருக்க நியாயமும் இல்லை. ஏனென்றால் சிலருக்கு ராகு தசை, சிலருக்கு கேது தசை என்கின்றனர். இவர்களுக்கோ கிழமை கிடையாது. ஆதலால் எதைக்கொண்டு அண்ணு இதைச் சொல்கின்றனர். தவிர, ஒருத்தருக்கு சுக்கிர தசை ஜனன காலத்தில் 18 வருஷம் இருந்தது என்கின்றனர். சிலருக்கு 2 மாதமே இருந்தது என்கிறார்கள். இந்த வித்தியாசம் ஏன் வருகிறது? அதற்கு ஏதாவது ஒரு கொள்கை உண்டா, என்ன?

ஆமாம். நக்ஷத்திரங்கள் மொத்தம் 27. அசுவதி ஆரம்பம் அல்லவா. அதிலிருந்து 9 நக்ஷத்திரங்களை வரிசையாகவும் அதன்கீழ் 10ம் நக்ஷத்திரமான மகம் முதல் 9 நக்ஷத்திரங்களை வரிசையாக குறி. அதன்கீழ் பாக்கி மூலம் முதல் இருக்கும் 9 நக்ஷத்திரங்களையும் எழுதிக்கொள் இப்பொழுது கீழ் வரிசையாகப் பார். அசுவதி, மகம், மூலம் ஒரு வரிசை. பரணி, பூரம், பூராடம் அடுத்த வரிசை. கிருத்திகை, உத்திரம், உத்திராடம் அடுத்தது. ரோஹிணி ஹஸ்தம், திருவோணம்; மிருகசீரிஷம், சித்திரை, அவிட்டம் திருவாதிரை, சுவாதி, சதயம்; புனர்பூசம், விசாகம், பூரட்டாதி; பூசம், அனுஷம், உத்திரட்டாதி; ஆயில்யம், கேட்டை, ரேவதி என 9 பிரிவுகள் வரும். சான்றோர்கள் அசுவதி, மகம், மூலம் மூன்றிற்கும் கேது நக்ஷத்திராதிபதி என்றும், பரணி, புரம், பூராடத்திற்கு சுக்ரன் நக்ஷத்திராதிபதி என்றும், கிருத்திகை, உத்திரம், உத்திராடத்திற்கு சூர்யன் நக்ஷத்திராதிபதி என்றும், மற்றவைகளுக்கு முறையே சந்திரன், செய்வாய், இராகு, குரு, சனி, புதன் நக்ஷத்திராதிபதிகளாவர் என உபதேசித்திருக்கிறார்கள்.

ஆகவே ஒருவர் எந்த நக்ஷத்திரத்தில் ஜனித்திருக்கின்ருரோ அந்த நக்ஷத்திர அதிபதியே ஜனன காலத்தில் அந்த ஜாதகனின் ஆரம்ப தசைக்கு நாதன் ஆவார்.

உதாரணம் எடுத்த ஜாதகத்தில் இருவருக்கும் பூரட்டாதி. ஆகவே இருவருக்குப் ஜனன காலத்தில் குரு தசையாகும்.

அண்ணு, 88ம் பக்கத்தில் நீங்கள் சொன்னபடி நக்ஷத்திரத்தையும் அதனதிபதியையும் குறித்திருக்கிருர்கள். ஆனல் கேது தசை 7 வருஷம், சுக்ரன் 20, சூர்யன் 6 சந்திரன், 10 செவ்வாய் 7, இராகு 18, குரு 16 சனி 19, புதன் 17 ஆண்டுகள் என வெவ்வேறு வருடங்கள் ஒவ்வொன்றிற்குமென்று எழுதியுள்ளனரே. ஏன் இவ்வித பேதம்.

ஏன் என்பது எனக்கும் இன்னும் புலப்படவில்லை. ஆனல் பலாபலன்கள், மிகவும் சரியாக ஒத்தே வருவதால் எப்படி கண்டுபிடித்து இவ்விதம் உரைத்தனர் என்பதைக் கண்டுபிடிக்க முயன்ருலும், அதை உபயோகப்படுத்த முதலில் கற்றுக்கொள். ரயில் வண்டி எப்படி ஓடுகிறது. எப்படி கட்டினுர்கள் என அறிவதற்கு தகுந்த ஞானம் வேண்டும். அதைப் பின்னல் தெரிந்துகொள்ளலாம். நமக்கு இப்பொழுது பிரயாணம் முக்கியமானதால், அதில் முதலில் ஏறிச்சென்று, மகிழ்வோம். அதுபோல் இப்பொழுது கவனி. பூரட்டாதி நக்ஷத்திரத்தில் இருவரும் ஜனனம். பூரட்டாதி 0 நாழிகை 42 விஞடிக்கு ஆரம்பித்தது. மறுநாள் 8 நாழிகை 17 விஞடிவரை இருக்கிறது. ஆகவே பூரட்டாதி ஆதியில் இருந்து அந்தம் வரை 67 நாழிகை 35 விஞடிகள். இந்த 67 நாழிகை 53 விஞடி—3055 விஞடிகளாகும். 4055 விஞடிக்கு 16 ஆண்டுகள் அல்லவா குரு தசை. அதை சமமாகப் பங்கிடு. ஒரு விஞடிக்கு $\frac{5760}{4055}$ நாட்களாகும். பூரட்டாதி நக்ஷத்திரத்தில் ஒருவர் ஜனிக்கு முன் எவ்வளவு கழிந்தது எனக் கவனி. ராமன் பூரட்டாதி ஆரம்பித்து 1 நாழிகை

3 விஞடி கழிந்த பின்னரே ஜனனம். அதாவது 63 விஞடிகள். ஆகவே $63 \times \frac{5760}{4055}$ நாட்கள் கழிந்துவிட்டன–89 நாட்கள் 21 நாழிகள் என வரும். குரு த்சையான 16 ஆண்டுகளில் 89 நாட்கள் 21 நாழிகை கழிய, 15 ஆண்டுகள் 9 மாதம் 0 தினம் 38 நாழிகை ராமன் ஜனனமான பின் நடைபெற வேண்டும் என அறியவும்.

லக்ஷ்மணன் பிறந்த நேரத்திற்குள் 48 நாழிகை 33 விஞடி–2913 விஞடிகள் கழிந்தது. மொத்தம் 67 நாழிகை 35 விஞடி–4055 விஞடிகள். குருவின் தசை 16 ஆண்டுகள். ஆகவே ஜனனத்திற்கு முன் (அதாவது மாதாவின் கர்ப்பத்தில் இருக்கும்பொழுதே) $\frac{2913}{4055}$ பாகம் கழிந்தது. $\frac{16 \times 2913}{4055}$ ஆண்டுகள் அல்லது $\frac{5760 \times 2913}{4055}$ நாட்கள் 11 வருஷம் 5 மாதம் 27 நாட்கள் $49\frac{1}{2}$ நாழிகை ஆகவே 16 ஆண்டுகளில் 11 வருஷம் 5 மாதம் 27 நாட்கள் $49\frac{1}{2}$ நாழிகைகள் கழிக்க பாக்கி 4 வருஷம், 6 மாதம் 2 நாட்கள் $10\frac{1}{2}$ நாழிகை ஜனனத்திற்குப் பின் நடக்க வேண்டிய தசை இருப்பு ஆகும். ஆகவே ராமன் ஜாதகத்தினடியில் ஜனன காலத்தில் குரு மஹா தசையில் மாதாவின் கர்ப்ப செல்லு 2 மாதம் 29 நாள் 21 நாழிகைகள் போக 15 வருஷம் 9 மாதம் 0 நாள் 39 நாழிகைகள் இருப்பு என்றும், அப்பால் லக்ஷ்மணன் ஜாதகத்தில் குரு மஹா தசை மாதாவின் கெற்பச் செல்லு 11 வருஷம் 5 மாதம் 27 நாட்கள் $49\frac{1}{2}$ நாழிகை போக, பாக்கி இருப்பு 4 வருஷம் 6 மாதம் 2 நாட்கள் $10\frac{1}{2}$ நாழிகை என எழுத வேண்டும்.

### மாந்தி - குளிகன்

மாந்தி, குளிகன் என உப்க்ரகம் குறிப்பது உண்டு. அவற்றின் பலா பலன்களுக்கு மாலா தமிழ் மாதப் பத்திரிகையில் 1957-ம் ஆண்டு ஜூலை மாத இதழில் ஆரம்பித்து, தொடர்பாக எழுதி உள்ளதை வாங்கிப் படித்துக் கொள். என்ன கணபதி.

என்னிடம் அப்புத்தகம் இல்லையே.

மாலா ஆபீஸ், சதர்ன் அவின்யூ, ஆழ்வார்பேட்டை, மதராஸ் 18க்கு கடிதம் போடு. பழைய புத்தகத்தில் அவ்விதம் இருப்பின் அனுப்புவார்கள். குளிகனைப்பற்றி யாவரும் இதுவரை அவ்வளவு விளக்கமாய் எழுதியது கிடையாது. பொது மக்களுக்கு உதவும் என எழுதப்பட்டிருக்கிறது. மேலும் ஜோதிடப் பகுதி எழுதி வருகிறது. இலகுவாக, முக்கியமாய் அறிந்துக்கொள்ள வேண்டியதை மாதா மாதம் வெளியிடுகிறார்கள். இனி வாங்கத் தவறாதே. என்னிடம் ஒரு இதழ் கூட இப்பொழுது இல்லை. ஆகவே அதை வாங்கி, விடாமல் தொடர்ந்து படித்து வா.

“புத்தகம் இருக்கோ. இல்லையோ. நீயே சொல்லி விடு.”

‘சரி.’

குளிகன், மாந்தி என சிலர் ஜாதகங்களில் தான் குறித்திருப்பதைப் பார்த்திருக்கிறேன். கேரளம், திருநெல்வேலி முதலிய இடங்களில் தான் இதை நினைக்கின்றனர். இவ்வுலகில் வேறு எங்கும் இதை உபயோகப்படுத்தவில்லை ஏன்?

நவக்ரஹங்களைத் தவிர உபகிரஹங்களென ஜோதிட வித்துவான்கள் உபதேசித்ததில் நவகிரஹங்கள் ஒவ்வொருவருக்கும் ஓர் உபகிரஹம் இருக்கிறது. சூர்யனின் உபகிரகத்தை “கால” என்றும், சந்திரனின் உபகிரகத்தை “பரிதி” என்றும், செவ்வாயின உப கிரகத்தை “தூம” என்றும், குருவின் உப கிரகத்தை “யமகண்டக” என்றும், சுக்ரனின் உப கிரகத்தை “கோதண்ட” அல்லது “இந்த்ர சாப”, “கார்முக” என்றும், சனி உபகிரகத்தை “மாந்தி”, “குளிகன்” என்றும், ராகுவின் உபக்ரத்தை “பாத” அல்லது “வ்யதீபாத” என்றும், கேதுவின் உபக்ரத்தை “உபகேது” என்றும் வழங்குகிறோம்.

அப்படியானால் குளிகனின் மறு பெயர் மாந்தியா?

அல்ல. சனிக்கு இரண்டு புத்திரர்கள் என்றும், ஒருவரை குளிகனென்றும், மற்றொருவரை மாந்தி என்றும்

சொல்லப்படுகிறது. மாண்டவ்ய மஹரிஷி இவ்விரு உப இரகங்களும், மஹா துஷ்டர்கள். மிகுந்த பாபிகள் என உபதேசிக்கிருர், உண்மையில் குளிகன் மாந்தி என்பவைகள், Zodiac imaginary points. கிரகங்கள் போல ஒழுங்கான சலனம் கிடையாது.

அப்படி இருவரும் வெவ்வேறு ஆனல் அவர்கள் ஜாதகத்தில் அமைந்திருக்கும் நிலையும் வெவ்வேரு அல்லது ஒரே ஸ்திதி தான?

வெவ்வேறு இடமேயாகும். நன்ருய் கவனித்துக் கேள்.

(1) ஜனன தினத்தன்று, ஜனன ஸ்தலத்திற்குச் சூர்ய உதயம் எப்பொழுது என்றும் சூர்ய அஸ்தமனம் எப்பொழுது என்றும் குறித்துக்கொண்டு, சூரிய அஸ்தமன காலத்தில் சூரியோதய காலத்தைக் கழித்து பகலின் நேரத்தையும், இரவின் நேரத்தை சூர்யாஸ்தமனம் முதல் மறுநாள் உதயம் வரை கண்டுப்பிடிக்க வேண்டும். சூர்ய உதயம் முதல் சூர்யாஸ்தமனம் வரை பகல் நேரம். மற்றது இரவு நேரம். இரண்டும் சேர்ந்தால் ஒரு தினம் ஆகும்.

(2) அப்பால் பகலில் ஜனனமானல், பகல் நேரத்தை 30-ல் வகுக்கவும். இரவில் ஜனனமானல் இரவு நேரத்தை 30-ல் வகுக்கவும்.

(3) பிறந்த கிழமை ஞாயிரு, திங்களா, செவ்வாயா, என்ன கிழமை என்பதை அறியவும்.

(4) ஞாயிறு பகலில் ஜனனமானல், பகல் நேரத்தை 30-ல் வகுத்து வந்த ஈவை 26-ல் பெருக்கி, வரும் பெருக்குத் தொகையை, சூர்ய உதயத்துடன் கூட்டினல் மாந்தியின் ஸ்திதி தெரியும். அதாவது பகல் நேரத்தை 30-ல் வகுத்து, 26-ல் பெருக்கி வந்த நேரம் எவ்வளவோ, அவ்வளவு நேரத்தில் ஒரு குழந்தை பிறந்தால், எந்த டிகிரி, அல்லது பாகை, விகலை லக்னமாக வருமெனக் குறிக்கிருேமோ, அதுவே மாந்தியின் ஸ்திதியாகும்.

(5) திங்கள் பகலில் ஜனனமானுல், அன்றைய பகல் நேரத்தை 30-ல் வகுத்து, 22-ல் பெருக்கி வரும் நேரத்தை சூர்ய உதயத்துடன் கூட்ட, அந்நேரத்திற்கு அன்று கிழக்கே உதயமாகும் வான மண்டல ஸ்திதியே மாந்தியின் ஸ்திதி.

(6) செவ்வாய்க்கிழமை பகலில் ஜனனமானவர் களுக்கு, ஜனன ஸ்தலத்தில் ஜனன தினத்தன்று பகலின் நேரம் எவ்வளவோ அதை 18-ல் பெருக்கி, 30-ல் வகுக்க, வரும் நேரத்தை சூர்ய உதயத்துடன் கூட்ட, அந்த நேரத் திற்கு வான மண்டலத்தில் எப்பாகம் உதயமாகுமோ அது மாந்தியின் ஸ்திதி. 1 லக்னம் என்ருல் குழந்தை ஜனன மாகும் காலத்தில் வான மண்டலத்தில் எப்பகுதி கிழக்கே உதயமாகிறதோ அதுவே லக்னமாகும். லக்னத்தைக் கண்டுபிடிக்க எவ்விதம் ஜனன தினத்தன்று, சூர்ய உதயமாகும்பொழுது சூர்யனிருக்கும் ராசியில் பாக்கி எவ் வளவு என்றும், அப்பால் அடுத்த ராசியின் பரிமாணம் ஜனனமான ஸ்தலத்திற்கு எவ்வளவு என்றும், இவ்வித மாகக் கணக்கிட்டு, எந்த ராசியில் ஜனன நேரமிருக்கிறது எனக் கண்டுப்பிடிக்கிருேமோ, அதேபோல் மாந்திக்கு வரும் விடையை, சூர்ய உதயமானது முதல் சூர்யனிருந்த ராசியின் இருப்பும் அப்பால் அடுத்த ராசியின் பரிமாண மென்ன என்றும் இவ்விதமே கணக்கிட்டு குளிகனின் ஸ்திதியை அறிய வேண்டும்.

(7) புதன் பகல் ஜனனமானுல் பகல் காலத்தை 30ல் வகுத்து 14ல் பெருக்கி வருகிற நேரத்தை சூர்ய உத யத்தில் கூட்டி அந்நேரத்திற்கு உதயமாகும் இடமே மாந்தியின் ஸ்திதி.

(8) இவ்விதமே வியாழன் பகலுக்கு 30ல் வகுத்து 10ஆல் பெருக்கு.

(9) வெள்ளி பகலுக்கு 30ல் வகுத்து 6ஆல் பெருக்கு.

(10) சனி பகலுக்கு 30ல் வகுத்து 2ல் பெருக்கி, வரும் நேரம் எவ்வளவோ அந்த நேரத்திற்கு வான

மண்டலத்தில், உதயமாகும் பாகமே மாந்தியின் ஸ்தியாகும்.

**உதாரணம் :—**

1. ஒரு குழந்தை 1957-ம் ஆண்டு ஜூலை மாதம் 27ம் தேதிக்குச் சரியான ஆடி மாதம் 12ம் தேதி சனிக்கிழமை பகல் 11 மணிக்கு மதராஸில் ஜனனம் என வைத்துக்கொள்வோம். மதராஸிற்கு ஆடிமீ 12ந் தேதி சூர்ய உதயம் 5·57 A.M. அஸ்தமனம் 6.33 P.M. ஆகவே பகல் நேரம் 12 மணி 36 நிமிஷங்கள். ஆகவே இரவு 11 மணி 24 நிமிஷங்களாகும் (Solartime : not sidereal) 12 மணி 36 நிமிஷங்கள். 31 நாழிகை 30 விநாடி=1890 விநாடிகள், இரவு 1710 விநாடிகள்.

2. ஜனனம் பகலில் 11 மணிக்கு என்பதால், பகல் 1890ஐ 30ல் வகுக்கவும்.

3. சனிக்கிழமைக்கு இரண்டால் பெருக்க வேண்டும். ஆதலால், $\frac{1890}{30}+2=126$ விநாடிகள்.

4. குளிகன் சூர்ய உதயத்தின் பின் 126 விநாடிக்கு வானமண்டலத்தில் உதயம் என கொள்ளவேண்டும். பிறந்த வைகாசி மீ 12ம் தேதி சூர்ய உதயத்தின்பொழுது வான மண்டலத்தில் ரிஷபராசி உதயமாகி பாக்கி அது முடிய 3 நாழிகை 28 விநாடி உள்ளது. அடுத்த ராசி மிதுனம், சூரிய உதயத்திற்குப்பின் 3 நாழிகை 28 விநாடி ஆரம்பம். குளிகனோ 126 விநாடி அல்லது 2 நா. 6 விநாடியில் இருக்கிறது. ரிஷபம் முடியவில்லை. ஆகவே மாந்தி ரிஷபத்திலேயே இருக்கிறது.

1. இரவில் ஜனனமானவர்களுக்கு, ஜனன ஸ்தலத்திற்கு, ஜனன தினத்தன்று இரவு நேரம் எவ்வளவு எனக் கண்டுபிடிக்க வேண்டும்.

2. பின்பு அதை 30ல் வகுக்கவேண்டும்.

3. ஞாயிறு இரவில் ஜனனமென்ருல் வகுத்துவந்த தொகையை 10ஆல் வகுக்கவும்.

4. திங்கள் இரவு ஜனனமென்ருல் 6ல் பெருக்கவும்.

5. செவ்வாய் இரவிற்கு 2லும்,

6. புதன் இரவிற்கு 26 ஆலும்,

7. வியாழன் இரவிற்கு 22 ஆலும்,

8. வெள்ளி இரவிற்கு 18 ஆலும்,

9. சனி இரவிற்கு 14 ஆலும் பெருக்கவும்.

10. பெருக்கி வந்த துகையை சூரிய அஸ்தமன நேரத்துடன் கூட்டிவரும் நேரத்தில் மாந்தி ஸ்திதி எனக் குறிக்கவேண்டும்.

**உதாரணம் :**

1. ஆடி மாதம் 10ந் தேதி வியாழக்கிழமை இரவு 10 மணிக்குச் சேலத்தில் ஜனனம் என்ருல், சேலத்தில் வியாழக்கிழமை ஆடி 10 தேதிக்குச் சூர்யன் 6.34க்கு அஸ்தமானமாகி 5-58க்கு உதயமாகிறது. ஆகவே 11 மணி 24 நிமிஷம் இரவு நேரமாகும். அதாவது 28 நா. 30 விஞடிகள் = 1710 விஞடியாகும்.

2. இதை 30ல் வகுத்தால் $\frac{1710}{30}$ வியாழனன்று இரவு ஜனன மானதாலே 21ல் பெருக்க வேண்டும். ஆகையால் $\frac{1710}{30} \times 22 = 1254$ விஞடி என வரும்.

3. இதை சேலத்தில் ஜனன தினத்தன்று சூரிய அஸ்தமன நேரமான 6.34P.M. த்துடன் கூட்ட (1254 விஞடி $= 1254 \times \frac{2}{5} = \frac{2508}{5} = 501\frac{3}{5}$ = 6 மணி 31 நிமிஷம்

36 ஸெகண்டு 16·34+6.31.36=1 ம. 5 நி. 36 ஸெகண்ட் இரவு ஆகும்.

4. ஒரு குழந்தை இந்த நேரத்தில் ஜனனமானால் லக்னத்தை எங்கே போடுவோமோ அவ்விதமே 1 மணி 5 நிமிஷம் 36 ஸெகண்டிற்கு வான மண்டலத்தில் எப் பாகம் உதயமாகிறதோ, அதை மாந்தியின் ஸ்திதியாக எழுதவேண்டும். இவ்விதமாக மாந்தியின் ஸ்திதியை அறியவும்,

குளிகளின் ஸ்திதி அறிய :

பகல் ஜனனமா? இரவு ஜனனமா? ஜனன ஊருக்கு, ஜனன தினத்தன்று பகல் எவ்வளவு நேரம். இரவு எவ்வளவு நேரம் எனக் கண்டு பிடிக்கவும். பகல் நேரத்தை 8 சமபங்காகப் போட, சூர்ய உதயம் முதல், முதல் பாகம் முடியும்வரை ஒரு கிரகமும், அடுத்த பாகத்தை அடுத்த கிரகமும், அதற்கடுத்த பாகத்தை மறுதின கிரகமும், இவ் விதம் சூர்ய உதயம் முதல் 7 பாகங்கள், 7 கிரகங்கள் ஆளுகின்றன. எட்டாவது பாகத்திற்கு அதிபதி கிடையாது. எந்த பாகத்திற்குச் சனி அதிபதியாவாரோ அந்த பாகமே குளிகனுக்கு உரித்தாகும். பகல் ஜனன மானால், ஞாயிற்றுக்கிழமையாயின் சூரியன் முதல் பாகத் திற்கும், சந்திரன் 2ம் பாகத்திற்கும், செவ்வாய் 3ம் பாகத் திற்கும், இவ்விதமே சனி 7ம் பாகத்திற்கு அதிபதியாவார் 8ம் பாகத்திற்கு அதிபதி கிடையாது. வியாழக்கிழமை ஜனனமானால் முதல் பாகத்தின் அதிபதி குரு, மறுபாகத் திற்குச் சுக்ரன், 3ம் பாகத்திற்குச் சனி, இவ்விதம் 7 கிரகங் களுக்கும் வரிசையாக கொடுக்கவேண்டும். 3ம் பாகமான சனியின் பாகமே குளிகனுடையதாகும். ஸ்திதியை அறியும் பொழுது இந்த பாகம் முடியும் நேரமே குளிகனின் ஸ்திதி யாகும்.

இரவில் ஜனனமானால், முதல் 7 பாகங்களுக்கு உரித் தாகும், 8ம் பாகம் அப்பொழுதும் அதிபதி இன்றி காலி யாக இருக்கும் இரவில் ஜனனம் எந்த கிழமை என அறிய வும் அத்துடன் 5ம் தினத்தின் அதிபதியினுடையதாகும்.

இரண்டாம் பாகம் 6ம் தினத்தின் அதிபதி. 3ம் பாகம் 7ம் தினத்தின் அதிபதி. 4ம் பாகம் பிறந்த தினம் என்னமோ அந்த கிழமையின் அதிபதியினுடையது. 5ம் பாகம் பிறந்த தினத்தின் மறுதின அதிபதியினுடையது. 6ம் பாம்ம அதற்கடுத்தவருடையது. 7ம் பாகம் அதற்கடுத்தவருடையது. 8ம் பாகம் அதிபதி இல்லே. இதில் சனி எந்த பாகத்திற்கு அதிபதியோ அது குளிகனின் முகூர்த்தம். அந்த பாகம் முடியும் க்ஷணமே குளிகனின் நேரம் ஸ்திதியாகும். பகலோ, இரவோ சரியாக 30 நாழிகை என்ருல் குளிகன் ஞாயிறு பகலில் சூர்ய உதயத்திலிருந்து $26\frac{1}{4}$ நாழிகையிலும் திங்களாஞல் $22\frac{1}{2}$ நாழிகையிலும்,செவ்வாயாயின் $18\frac{3}{4}$ நாழிகை, புதஞனல் 15 நாழிகை, வியாழஞனல் $11\frac{1}{4}$ நாழிகை, வெள்ளியாயின் $7\frac{1}{2}$ நாழிகை, சனியாயின் சூர்ய உதயத்திலிருந்து $3\frac{3}{4}$ நாழிகை முடியும் வரை, குளிகனின் ஸ்திதியாகும், இங்கு சற்று யோஜிக்கவும்.

சனிக்கிழமை பகல் ஜனனமானல் சூர்ய உதயத்திலிருந்து 2 நாழிகை முடியும் பொழுது மாந்தியின் ஸ்திதி. ஆனல் $3\frac{3}{4}$ நாழிகை முடியும் பொழுது குளிகனின் ஸ்திதி வெள்ளியாயின் 6 நாழிகை முடியும்பொழுது மாந்தியும் சூர்ய உதயத்திலிருந்து $7\frac{1}{2}$ நாழிகை கடந்ததும் குளிகனும் ஆகும். இப்பொழுது இவர்களின் ஸ்திதியில் வித்தியாசம் தெரிகிறதா ?

இதுவரை இருமுறை படித்தால்தான் நன்கு விளங்குமெனத் தோன்றுகிறது. சொல்லும் பொழுது புரிகிறது. திரும்பவும் மறுமுறை பார்த்தால்தான் மனதில் நன்கு பதியும் என நம்புகிறேன். ஆமாம் இரவில் ஜனனமாயின் குளிகன் எங்கு இருக்கும் என உதாரணம் சொன்ஞல் நல்லது.

புதன்கிழமை இரவு ஜனனம். அன்று இரவு 30 நாழிகை என்றே எண்ணிக்கொள். முதல்பாகம் புதன் 1, வியாழன் 2, வெள்ளி 3, சனி 4, 5ம் பாகம் சூர்யனுடையது. 6ம் பாகத்தினதிபதி அதற்கடுத்த சந்திரன், 7ம் பாகத்திற்குச் செவ்வாய். இரவு நேரம் 30 நாழிகையை

8 சம பாகமாகப்போட்டால், ஒவ்வொரு பாகமும் 31 நாழிகை. ஆகவே சனியின் பாகம் முடிவு $7 \times 3\frac{3}{4}$ நாழிகை அதாவது 261 நாழிகை சூர்யாஸ்தமன நேரத்தில் கூட்டினல் குளிகனின் நேரம் அல்லது ஸ்திதி தெரியும்.

இவர்கள் இருக்கும் ஸ்திதியை ஜாதகத்தில் போடுகிரும் இவர்கள் எப்பலனை அளிப்பர். எப்பொழுது எதிர் பார்க்கலாம் என உபதேசிக்கவேண்டும்.

இதர கிரகங்களுக்கு ஜனன நக்ஷத்திரத்திற்கேற்ப உடுதசை, புக்தி அந்த்ரம் நடைபெறும். சகல பலன்களையும் அறியமுடியும். நம் வாழ்நாளில் பலமுறை ஒரு கிரகத்தின் சூக்ஷ்மங்களும், அந்த்ரங்களும், சில சமயங்களில் புக்திகளும் வரும். சிலருக்கு ஓர் பலனை அறிவிக்கும் தசை ஒரு முறையும், சிலருக்கு அத்தசையே வராமலுமிருக்கும் குளிகனுக்கோ, அவ்விதமாக பொதுப்பலன் பார்க்க உடுதசைப் போல் பார்ப்பதில்லை. ஆயுள் நிர்ணயம் செய்ய மாத்திரம் குளிகன் தசை பார்ப்பது உண்டு. அதைப் பின்னல் சொல்கிறேன். இதர கிரகங்கள் அவர்கள் பலனை அவர்கள் கிழமையிலோ. நக்ஷத்திர தினத்திலோ அளிப்பர். குளிகனுக்குக் கிழமை ஏது? நக்ஷத்திரமென்று ஏது? ஆகவே பின்னல் சொல்லும்பொழுது கவனித்துப் பலனை அறிந்துக்கொள்ள வேண்டும்.

ஓர் ராசியை ஓர் புஷ்பம் என எண்ணிக்கொள். சுப கிரகத்தை குளிர்ந்த தண்ணீராகக் கருது. அசுபக்கிரத்தை அக்னியாக நினைத்துககொள். தண்ணீர் புஷ்பத்தின் மேல் பட்டால் என்ன நேரும்? புஷ்பம் மலரும். இனிமையாக மணக்கும். அவ்விதமே சுபர் சேர்ந்த வீடு, நற்பலனை அளிக்கும். மேன்மை உண்டு. புஷ்பத்தின்மேல் அக்னியை வைத்தால் என்ன ஆகும்? புஷ்பம் தீயும், துர்நாற்றம் வரும். அதுபோல் அசுபர் சேரின் ராசி கெடும். அந்த ராசி எப்பலனைக் குறிக்கிறதோ, அப்பலன்கள் கெட்டுவிடும். கஷ்டத்தையும், நஷ்டத்தையும், துக்கத்தையும், ஏக்கத்தையும் கொடுக்கும்.

குளிகனும், மாந்தியும் பொல்லாத கிரகங்கள். அவை கள் எந்த ராசியிலிருக்கிறதோ, அந்த ராசி மூலம் நாம் எதிர்பார்க்கும் பலன் எல்லாம் கெடுதலேயாகும். நற்பலனை எதிர் பார்த்தால் ஏமாறவேண்டியதுதான்.

அதனால் குளிகன் வேறு, மாந்தி வேறு என அறிந்தேன். அந்ருஷ்ட குறி ஆங்கில முறையில் கணிப்பவர்கள், அதிருஷ்ட குறி என்கின்றனரே. தாங்கள் அதைபோதிக்க வில்லையே?

அத்ருஷ்ட குறி என்பது ஒவ்வொரு ஜனன நேரத்திற்கும், அதன் ஸ்திதி மாறி மாறி வரும். இதற்கு வான மண்டலத்தில் உருவம் இல்லை. நிறமில்லை.கனம், பரிமாணம் யாதுமில்லை. ஒரு இடத்தைக் கணக்கிட்டு, கண்டுபிடித்து அங்கு அந்த ஜாதகருக்கு அத்ருஷ்டக்குறி இருக்கிறது என அறிய வேண்டும், ஜோதிட நூலில் ஆராய்ச்சி செய்து வந்த பெரியோர்களில் Ptolemy Wilde, Crosydale போன்றுள்ள அறிவாளிகள் இக் குறியைக் கணக்கிட்டு, பலா பலன்களைக்கூறி. எவ்விதம் பலன் அறிவது என உபதேசித்தார்கள். ஒருவர் ஜாதகத்தில் லக்னம் எந்த டிகிரி என்றும் தெரிந்தபின், மேஷம் ஆரம்பத்திலிருந்து இவைகள் இரண்டிற்கும் எவ்வளவு டிகிரி தூரத்திலிருக்கிறது எனக் கண்டு, இரண்டையும் சேர்த்துக் கூட்டிக்கொள்ளவும். இதில் சூர்யன் மேஷத்திலிருந்து எவ்வளவு தூரத்தில் இருக்கிறது எனக் கணக்கிட்டு, அவ்வளவு டிகிரியை, கூட்டி வந்த துகையில் கழிக்கவும். சூர்யனுக்கும், சந்திரனுக்கும் இடையே உள்ள தூரம் எவ்வளவோ, அவ்வளவே தூரம்தான் லக்னத்திற்கும் அத்ருஷ்ட குறிக்கும் உள்ள தூரம்.

**உதாரணம்**

I 1. லக்னம் கடகம் 15° = 150°

2. சந்திரன் கன்னி 7° = 157°

3. சூர்யன் துலாம் 12° = 192°

II 1. லக்னம் மேஷம் 8° = 8°

2. சந்திரன் ரிஷபம் 10 = 40

3. சூர்யன் மீனம் 5° = 335°

ஜாதகனின் லக்னம் எந்த பாகை என அறிந்து, அத்துடன் அவன் ஜனன காலத்தில் சந்திரனிருந்த பாகையையும் கூட்டிவரும் எண்ணில் சூர்யனின் பாகையை கழிக்க, வரும் பாகையே அத்ருஷ்ட பாகையாகும்.

முதல் உதாரணத்தில் :—

லக்னம், கடகம் 16° அதாவது மேஷம் 30,° ரிஷபம் 30,° மிதுனம் 30,° கடந்த பின் கடகத்தில் 15,° இவைகளை கூட்ட 150° லக்னமாகும்.

சந்திரன் கன்னி 7. அதாவது மேஷம் 30,° ரிஷபம் 30,°...சிம்மம் 31° கன்னி 7.° ஆகவே 157°ல் சந்திரன்.

சூர்யன் துலாம் 12° = மேஷம் 30°. துலாம் 12° = 192°.

லக்ன பாகையும், சந்திரன் பாகையும் கூட்ட 105 + 157 + 262° ஆகும். அத்ருஷ்டம் 70° என்று ஏற்படும்.

இரண்டாவது உதாரணத்தில் :—

லக்னம் மேஷம் 8° = 8°

சந்திரன் ரிஷபம் 10° = மேஷம் 30° + ரிஷபம் 10° = 40°.

இரண்டையும் கூட்ட 8 + 40 = 48° சூர்யன் மீனம் 5° = 11 × 30 + 5° = 335°. ஆகவே 48°ல் 335°ஐ கழிக்க வேண்டும். ஒரு வான மண்டலம் 26ம். ஆகவே 48·ல் 335ஐ கழிக்க முடியாது. ஆதலால் 360ஐ 48ஆல் கூட்ட 408· ஆகும். இதில் சூர்யன் பாகை 335· கழிக்க 73· ஆகும்.

73 = மேஷம் 30°, ரிஷபம் 30° + 13° = மிதுனம் 13° இவ்விதமாக லக்ன பாகையுடன் சந்திர பாகையைக்கூட்டி

சூர்யன் பாகையைக் கழித்துவரும் அதிருஷ்ட குறியை+ போடவும்.

ஆதிகாலத்தில் திதியை வைத்துக்கொண்டும் பலன் சொல்லி வந்தனர் என அறிகிறோம். இப்பொழுது அப் பகுதிகள் கிடைப்பது இல்லை. திதி என்பது சூர்யன், சந்திரன் இருவருக்குமிடையே உள்ள தூரம் இதே தூரம் தான் லக்னத்திற்கும் அத்ருஷ்ட குறிக்கும் ஆகும்.

இவ்விதமாக முதலில் ஜாதகம் கணிக்கத் தெரிந்தால் போதும் அடுத்தமுறை சொல்லும்பொழுது "பாவம்", துல்லியமாக கணக்கிடும் முறை, Sidereal time, cush. முதலியன விளங்கும்படி உரைக்கலாம். ஸ்தலத்திற்கு ஸ்தலம் கணிப்பதில் வரும் சிறு தவறுகளோ, பெரும் பிசகுகளோ எடுத்து விளக்கப்படும்.



# உலகம் பலவிதம்

## ராசிகள்

வான மண்டலத்தை 12 சம பங்குகளாக வகுத்து, அதனால் ஏற்படும் 12 ராசிகளைப் பற்றியும், உலகில் நடைபெறும் சம்பவங்களை எவ்விதம் 12 வகைகளாக பிரித்துள்ளனர் என்றும், ஜகத்ஸ்ருஷ்டியில் ஒவ்வொருவர் வாழ்க்கையில் நடைபெறும் நிகழ்ச்சிகளையும், நமது குணாதிசயங்களையும் 12 விதமாக வகுத்து உபதேசம் செய்திருக்கிறார் என்றும் சுருக்கமாக உரைக்கிறேன்.

12 ராசிகளும், மேஷம்; ரிஷபம்; மிதுனம்; கடகம்; சிம்மம்; கன்னி; துலாம்; விருச்சிகம்; தனுசு; மகரம்; கும்பம்; மீனம் என வழங்கப்படுகிறது.

சூர்யன் உத்தராயணத்தில், தெற்கிலிருந்து, வடக்கு பக்கமாக கொஞ்சம் கொஞ்சமாக, நாள் ஒன்றுக்கு சுமார் $\frac{1^{\circ}}{12}$ நகர்கிறது. இதை நீ எவ்விதம் அறியலாம் தெரியுமா. உயரமான ஓர் கட்டிடத்தின் நிழல் விழுவதை கவனித்துக் கொண்டு, ப்ரதி தினமும் சுமார் 12 மணிக்கு அதன் நிழல் எதுவரை விழுகிறது என குறித்துக்கொண்டு வா. தினசரி, நிழல் தெற்கு நோக்கி நகரும். சூர்யன் வடக்கே நோக்கி வந்தால்தானே, நிழல் தெற்கு திக்கு நோக்கிச் செல்லும். அப்படி சூர்யன் வடக்கு நோக்கி வரும்பொழுது, வான மண்டலத்தின் சரி மத்ய பாகத்தில் எப்பொழுது சூர்யன் இருக்கிறாரோ, நிழல் நேராக கீழே பூமத்ய ரேகையில் விழு

கிறதோ, அதுவே ராசி மண்டலம் ஆரம்பம். மேஷம் ஆரம்பமும் மீனம் முடிவுமாகும்.

[வான மண்டலமே சுமார் 71 ஆண்டுகளுக்கு 1° வக்ர கதியில் நகர்கிறதாக பெரியோர்கள் உபதேசித்திருக்கின் றனர். ஒரு வருஷத்திற்குச் சுமார் 50·8 மினிட்கள் வக்ர கதியில் வருகிறது. அவ்விதமாக கவனிக்கும்பொழுது சுமார் 23°10, மேஷம் நகர்ந்திருக்கிறது என்றும், மேற் கூறியபடி நிழல் 23 தினங்கள் முன்பே, நேராக விழுகிறது என்றும் சொல்லப்படுகிறது. எனினும், ஹிந்துக்கள் நிராயண முறை அனுஷ்டிப்பதால், அசுவதி நக்ஷத்ரம் ஆரம்பத்தையே மேஷம் ஆரம்பம் என எடுத்துக் கொள் கின்றனர். நான் நிராயண முறையை இப்பொழுது சொல் கிறேன். அடுத்தபடியாக சாயண முறையை விளக்கு கிறேன்.]

கணபதி, கடவுளின் ஸ்ருஷ்டியில், ஒவ்வொரு ஜீவராசி யிலும் எவ்வளவு ஜாதி யிருக்கிறது தெரியுமா?

இயற்கையில் ஜாதி பேதமேது?

இருக்கிறது. ஆண், பெண் என இரண்டு உண்டு.

வாஸ்தவம். நான் என்னமோ என்று எண்ணி னேன்.

அதேபோல், 12 ராசிகளையும் ஆண் ராசி, பெண் ராசி என வகுத்திருக்கிறார்கள். ஒன்றுவிட்டு இருக்கும் ராசி களான மேஷம், மிதுனம், ஸிம்மம், துலாம், தனுசு, கும்பம் இந்த ஆறும் ஆண் ராசி யெனப்படும். ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் இவ்வாறும் பெண் ராசி யெனப்படும். ஆறு ஆடவர்கள், தத்தம் தர்ம பத்தினி யுடன், வரிசையாக உட்கார, அவர்களைப் புகைப்படம் பிடித்துப் பார்த்தால் எப்படி ஆணும் பெண்ணும் மாறி மாறி தென்படுகிறதோ, அவ்விதமே 12 ராசிகளும், மாறி மாறி யிருக்கிறதுபோல் கருதவும்.

ராசிகள் ஆணானல் என்ன? பெண் ஆனல் என்ன? அதனல் நமக்கு என்ன ஸௌகர்யம்?

பலா பலன்கள் சொல்லும்பொழுது, இதன் ஸௌகர்யம் தெரியும். ராசிகள் ஆணு, பெண்ணு என தெரிந்து கொள். ஓர் பெண் மணி பூர்ண கர்ப்பம். ஆண் பிறக்குமா, பெண் பிறக்குமா என அறிய ஆசைப்படுகிருள். ஜோதிடர், பலனே அறிய, எந்த ராசியைக்கொண்டு சொல்ல வேண்டியிருக்கிறதோ அந்த ராசி ஆண் ராசியானுல், ஆண் ஜனனமென்றும், பெண் ராசியானுல், பெண் என்றும சொல்ல முடியும். [விவரமாக பின்னல் ஆருடமும் அதன் உண்மையும், எனப் ப்ரசுரிக்கும் புத்தகத்தில் காணலாம்.] ஒரு சாமான் திருட்டு போய்விடுகிறது. ஓர் ஆணேயும் ஒரு பெண்ணேயும் சந்தேகிக்கிருேம். அதைத் தீர்மானம் செய்ய, இது பயன்படும். விவாஹத்திற்கு மண மகனேத் தேடுகிருேம். அதில் நற்குணமும், அடக்கமும், பரம சாதுவாக யிருக்கும் மணமகள் ஜாதகத்தில், லக்னமும், பெண் ராசியிலிருக்க, லக்னுதிபதியும், ராசியினதிபதியும், பெண் ராசியிலிருப்பார்கள், அப்படியல்லாமல், ஜனன லக்னம் ஆண் ராசியாகி, லக்னுதிபதியும், சந்திரன் இருக்கும் ராசியினதிபதிபதியும், ஆண் ராசியேறின், பௌருஷம், தைர்யம், ஆண்மையுள்ளவரென்றும், அந்த ராசிகளில் பாபிகள் ஏறி, செவ்வாயுடன் கூடின் முன் கோபமும், சண்டைபிடுபவரும், நிம்மதிராமல் கஷ்டத்தை :யளிக்கும் மண மகளென்றும் அறியலாம். ராசிகளேப் பிரித்தது இவ்விதமாகப் பலனளிக்க உதவும்.

அடுத்தபடியாக, நாம் குணங்களே மூன்ருக வகுத்து, ராஜஸம், தாமஸம், ஸாத்வீகம் என்று சொல்கிருேம்.

ராஜஸம் என்ருல், தான் நினேப்பதை நடத்திக்காட்டும் தன்மையும் அதனுல் நன்மையடைய யத்தனமும், இடையூறு வரினும் அதைப் பொருட்படுத்தாது, பேராசை கொண்டு, விடாமுயற்சி புரியும் தீரமும், வீரமும் ஆகும். 'சரம்' என்றும் கூறுகின்றனர். இவர்கள் இடம் மாறிக் கொண்டே யிருக்கலாம். "சரம்" என்ருல் நகர்வது என பொருள். நதியிலோடும் நீர் போன்றது சரம்.

தாமஸம் என்ருல் ஸ்திரம், அசரம், அசையாதது, மந்தம் எனப்படும். எதையும் ஸ்திரப்படுத்துவது, ஊர்

ஜிதப்படுத்துவது. சக்தியை சேகரிப்பது. இதை ஓர் ஏரிக்கோ அல்லது அணைக்கட்டால் தடுத்து தேக்கப்பட்ட நீருக்கோ ஒப்பிடலாம.

சாத்வீகம் : கோபம், ரோசம், ஆசை யெனப்படும் சரமுமல்ல. இடி விழுந்தாலும் எனக்கென்ன என்று கார்யத்தையே கவனிக்கும் ஸ்திரமுமல்ல. ஆனல் விவேகத்தால் நன்மை தீமையை சோஜித்து, நன்மையையே நினைத்து, இன்பமளிக்க முயலும் "உபய" ராசி எனப்படும். ஊஞ்சல் போன்றது. சமுத்ர அலை போன்றது. நல்லதை கரையில் சேர்க்கவும், அல்லாததை தூர இழுத்துச் செல்லும் அலை போன்றது. எக் கார்யத்திலும் இனப துன்பங்களை யோஜனை புரிந்து இன்பமளிக்க யத்தனிக்கும் குணம்.

சரம் மனோ திடத்தையும், ஸ்திரம் பாசத்தையும், நட்பையும். உபயம் ஞானத்தையும் குறிக்கிறது.

மேஷம், கடகம். துலாம், மகரம் இந்நான்கு ராசிகளும், சரம், ரிஷபம், ஸிம்மம் விருச்சிகம் கும்பம் இந்நான்கு ராசிகளும் ஸ்திரம், மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இந்நான்கு ராசிகளும். உபயம் இவ்விதம் வகுத்ததை பலா பலன் சொல்லுமிடத்து உபயோகிக்க வேண்டும்.

ஒருவர், எந்த லக்னம், ராசியில் ஜனனமென்று கவனித்து, அந்த ராசிக்கு உபதேசித்துள்ள குணங்கள் அவரிடமிருக்குமென அறியலாம்.

ஒருவா ஒரு உத்தியோகத்தி லிருக்கிறார். வேலை அங்கேயே நீடிக்குமா அல்லது வேறு வேலை கிடைத்து இடம் மாற நேருமா என கேட்கும்பொழுது, அந்த ஜாதகருக்கு என்ன தசை என்ன புக்தி நடைபெறுகிறது என்று கவனிக்க வேண்டும். அப்பால் தசையே மாறுவதாக வைத்துக் கொள்வோம். வரப்போகும் தசையென்ன என்று, தசாநாதன், ஜனன காலத்தில், சர ராசியிலிருந்ததா, ஸ்திர ராசியிலா உபய ராசியிலா என்று கவனிக்க வேண்டும். சர ராசியாயின், பழைய வேலையை விட்டு, புது வேலைகுப் போவாரென்றும், ஸ்திர ராசியிலிருப்பின், இடப் பெயர்ச்சியில்லை யென்றும், உபயராசியிலிருப்பின்

அதே உத்யோகத்தில் இடம் மாறும் (Transfer) என்றும் அறியலாம்.

அடுத்தபடியாக, இந்த 12 ராசிகளை. நான்கு தத்வங்களாகவும் வகுத்துள்ளனர்.

பூமி முதலில் அக்னி போன்று அதி உஷ்ணமாகவும், த்ரவமாகவும் இருந்ததென்றும், அப்பால் நாளடைவில் குளிர, குமியின்மேல் பாகம் கெட்டிப்பட்டதென்றும், பூமியின் மேல் காற்று இருந்ததென்றும், பூமியின் மேல் உஷ்ண நிலை 100°Cக்கு கீழ்ப்பட்டதும், காற்றிலிருந்த நீராவியெல்லாம் மழையாகப் பெய்து; பள்ளங்களில் தேங்கி சமுத்ரம், ஏரி போன்று ஆகி இப்பொழுது நாம் இருக்கும் பூமி இந் நான்கு தத்வங்களைக் கொண்டதென அறிகிறோம். அவ்விதமே வான மண்டலத்தை அக்னி, ப்ருதிவி (பூமி), காற்று, தண்ணீர் (ஜலம்) என நான்கு, நான்காக வரிசையாக வகுத்துள்ளனர்.

அக்னி—மேஷம், சிம்மம், தனுசு.

பூமி ராசிகள்—ரிஷபம், கன்னி, மகரம்.

காற்று ராசிகள்—மிதுனம், துலாம், கும்பம்.

ஜல ராசிகள்—கடகம், விருச்சிகம் மீனம்.

அக்னி, சூடு, எவ்விதம் எல்லா உயிர்களுக்கும் தேவையோ, அவ்விதமே அக்னி ராசிகளில் இருக்கும் கிரகங்கள் அவர்களுடைய தசை, புக்தி காலங்களில், ஆற்றல். மனோதிடம், தைர்யம், எக்காரியத்தையும் செய்ய முன் வருவது, அவைகளை செய்துமுடிக்கும் திறமை இவைகளைக் கொடுக்கும். போர்க்களம் செல்ல அஞ்சாத ராசிகள்.

ப்ருதிவி, பூமி எனப்படும் ராசிகள், பூமியைப்போன்று பொறுமையையும், ஜாக்கிரதையாக எத்தனிப்பதையும், சிக்கனத்தையும் ஒருவரின் விடாமுயற்சியையும், பாடுபடுவதையும். நிதானத்தையும், குறிக்கிறது. ஓரிடத்திலேயே ஜீவனம் புரியும் தொழிலாளிகள் ஆகாயம், காற்று, வாயு எனப்படும் ராசி புத்தி கூர்மையையும், சிறந்த யோசனையையும், சாமர்த்யத்தையும், மரியாதையையும்,

அடக்கத்தையும், நன்மை தீமை இரண்டையும் பல காலம் சிந்தித்து. தீர்மானம் எடுக்க தாமதத்தையும், புத்தி புகட்டுவதில் நிபுணரையும் குறிக்கிறது.

மந்திரி, பிரதிநிதி போன்றவர் ஜனிக்கும் ராசிகள் :—

ஜலராசி, வெட்கம். நாணம் அதிகம். சக்தி குறைவு, அச்சம் உண்டு. அசட்டு தைரியமிருக்காது. எதைச் சொன்னாலும் நம்பிவிடுவது. வெளுத்ததெல்லாம் பால் என ஒப்புக்கொள்ளும் ராசிகள். காலத்திற்கேற்ப விலையை அனுசரித்து வ்யாபாரம் செய்யும் வ்யாபாரிகளைக் குறிக்கு மென்றும் கூறுகின்றனர்.

சரீரத்தில், நமது சக்தியை அக்னி ராசியிலிருந்தும், உடலை பிருதிவி ராசியிலிருந்தும், மனதை வாயு ராசியிலிருந்தும், ஆத்மாவை ஜல ராசியிலிருந்தும் அறியலாம்.

ஆகவே, 1, 5, 9 ராசிகள் அக்னியெனவும், 2, 6, 10 ராசிகள பிருதிவியெனவும், 3, 7, 11 வாயுவென்றும், 4,:8, 12 ஜலமென்றும் பிரித்துள்ளதை, சில நிபுணர்கள் வேறுவிதமாகவும் உபதேசிக்கிறார்கள், 1, 5, 9 வீடுகள் (1) தன்னையும், (5) தன் புத்ரர்களையும் (9) பிதாவையும் குறிக்குமென்றும், 2, 6, 10 ஒருவர் தனத்தையும் சேவகத்தையும், ஜீவனத்தையும் குறிக்குமென்றும், 3, 7, 11, சகோதரரையும், நண்பரையும் குறிக்குமென்றும், 4, 8, 12, மாதாவையும், ஆயுளையும், மோக்ஷத்தையும் குறிக்குமென்று வகுத்துள்ளார். அதாவது :

தான், தன் குழந்தை, தன்பிதா, 1, 5, 9 வீடுகள்.

தனம், உழைப்பு, ஜீவனம் 2, 6, 10 வீடுகள்.

ப்ராதா, மனைவி, நண்பர் 3, 7, 11 வீடுகள்.

ஜனனத்தின் முன் கர்பவாஸமானதாய், உலகில் மரணம், அப்பாலுள்ள கதி 4, 8, 12 வீடுகளாம்.

மற்றொரு விதமாகவும் 12 ராசிகளையும் கருதுகின்றனர். மேஷமான முதல் வீடு தன் ஆரோக்யத்தையும், 2ம் வீடுதான் மதிப்புடன் வாழ தன வசதியையும், ஜயம் பெற நயமான வார்த்தை பேசும் தன்மையும், கண்டுகளிக்க

கண்களையும், 3ம் வீடு சகோதரரையும், அருகில் உள்ளோரையும், 4ம் வீடு ஈன்றெடுத்த அன்னையையும், இருக்கும் இல்லத்தையும், ஏறிச் செல்லும் வாகனத்தையும் ஏறு பிடித்து உழும் நிலத்தையும், நிரந்தர சொத்தையும் 5ம்வீடு புத்ரர்களையும், 6ம் வீடு ரணம், ரோகம், விரோதம், கடன் போட்டி முதலியவற்றையும், 7ம் வீடு இல்லறமே நல்லறமென இல்வாழ்க்கை நடத்த கணவனை, அல்லது மனையையும், 8ம் வீடு சகலமும் அனுபவித்த பின் இவ்வுடலை விட்டு நீங்குவதையும் குறிக்கிறது. 9ம் வீடு தர்மத்தையும் 10ம் வீடு கர்மத்தையும், 11ம் வீடு காமத்தையும், 12ம் வீடு மோக்ஷத்தையும் குறிக்கிறது. ஆகவே வான மண்டலத்தை ஆண், பெண் என்று இரண்டு வகுப்பாகவும், ராஜஸம், தாமஸம், ஸாத்வீகம், என மூன்று பிரிவாகவும் மேலும் அக்னி, பிருத்வீ, வாயு, ஜலம் என நான்காகவும், வகுத்துள்ளனர். 2, 3, 4விற்கு L.C.M. 12தானே. அதனால் தான் வானமண்டலம் 360° ஐ 12 பங்காக வகுத்துள்ளார் போலும். ஒவ்வொரு பங்கும் ஒரு ராசி எனப்படும். இவைகளின் ஆரம்பம் மேஷம்.

## மேஷ ராசி

வான மண்டலத்தில் 0° முதல் 30°வரை. இவ் விட்டில் அசுவதி 4 பாதங்களும், பரணி 4 பாதங்களும், கார்த்திகை முதல் பாதமுமாக 9 பாதங்கள் உள்ளன. வான மண்டலத்தின் முதல் ராசி, பெண் ராசி, இவ்விட்டினதிபதி செவ்வாய். அதாவது செவ்வாயின் குணநிசயங்களும், இவ்வீட்டின் குணநிசயங்களும் ஒன்று. இவ்வீட்டில் செவ்வாய்க்கு வலுவு அதிகம். மேஷ ராசியில் சூர்யனுக்கு பலம் ரொம்ப அதிகம். ஆகவே இங்கே சூர்யன் உச்சம். சூர்யனின் புத்ரனை சனி இங்கு மிக பலக் குறைவு. ஆகவே நீசம்.

### மேஷ லக்னத்தில் ஜனித்தவர்களின் குணநிசயங்கள்.

சரீரம்: அதிக உயரம் இல்லாமலும், தசை வலுவு பெற்று ஊழ சதை இல்லாமலும், மெல்லியதுமல்லாமல் மிக பெருத்ததும் அல்லாத கழுத்து உடையவரும், வைரம் பாய்ந்த மரம்போன்ற எலும்பு உள்ளவர் ஆவர்.

**குறிகள் :** இவ்வீட்டில் (மேஷத்தில்) பாபிகள் கூடி, மேஷமே லக்னமும் ஆனால் தலையில் மச்சம் இருக்கும் அப்பால் மேஷத்தில் இருக்கும் பாபியினுடைய தசை, புக்தி நடக்கும்பொழுது கொப்பளம் உண்டாகியோ, காயம் ஏற்பட்டோ தழும்பு உண்டாகும்.

**குணம் :** தன்னுடைய இஷ்டப்படி,எதிர்ப்பை லக்ஷ்யம் செய்யாமல், காரியம் செய்வதில் அதிக துணிச்சலும், சாமர்த்தியமும், பேராசையும் இருக்கும். இதரர்கள் சொல்லும் புத்திமதியை கேட்க மாட்டார்கள். சாத்வீகமே தெரியாது. தன் புத்திக்கு எட்டியதையே செய்வர். நல்லது கெட்டது என அவர் மனதிற்கு பட்டதையே செய்வர். சகஜமாக கெடுதல் செய்யார். தப்பும் எண்ணமாட்டார். தீர்மானத்துடன் எதையும் செய்வார். சீக்கிரமே பணி புரிவார். அதிகாரம் செலுத்துவதில் தீரர். வியாபாரம் செய்தாலும் வாயடியடித்து தொழில் முன்னேற செய்ய அதிக சாமர்த்தியம் உண்டு. தன் நலனை மறக்கவே மாட்டார்கள். எக்காரியம் செய்தாலும் அதில் தனக்கு என்ன இருக்கிறது என ஆலோசித்து' தனக்குச் சுகம் உண்டு என்றால் தான் அப்பணியை புரிவர். அவருக்கும் சமாதானமே தெரியாது. வீரச் செய்கை செய்வதில் என்ன, எதிர்த்து பதில் உரைப்பதில் என்ன, சண்டைவரின் அதை விடாமல் போர் புரிவதில் என்ன, துஷ்டர்களை தண்டிக்க முயன்றாலும், திருடர்களை பிடிக்க முயன்றாலும், பயமின்றி எண்ணத்தை நிறைவேற்றி முயற்சி செய்வதென்ன,அஞ்சாத நெஞ்சுடன் போட்டிகளில் கலப்பது என்ன, எவ்வளவு பெரிய அசாத்தியமான காரியமானாலும் அலட்சியமாக எடுத்துச் செய்ய துணிவு என்ன, உலகமே எதிர்த்து கலகம் செய்தாலும் அதை அடக்கும் ஆர்வமும், வலிவும் சாமர்த்தியமும் என்ன இவைகள் எல்லாம் மேஷ லக்னத்தில் ஜனித்தோரின் குணம் ஆகும்.

**ரோகம் :** வியாதியை லக்னத்திலிருந்து 6ம் வீட்டைக் கொண்டு கண்டுபிடிக்க வேண்டும். மேஷ லக்னத்தில் ஜனித்தால் கன்னி 6ம் வீடாகிறது. ஆகவே, இவர்களுக்கு ஜீரண குறைவினாலும், நரம்பு தளர்ச்சியினாலும், வைடமின் B-குறைவினாலும் மயக்கம், வலிப்பு, பிசாச பீடை இவை

களிலும், நாய், குரங்கு, பூச்சிகள் கடியினலும், புதன் புக்திகளில் வரக்கூடும்.

ஜீவனம் : 2, 6, 10 வீடுகளைக்கொண்டு ஜீவனம் விஷயம் அறிவதால் இவர்களில் யார் மிக வலுவு பெற்ற னர் என அறிந்து நவாம்சத்தில் எங்கு இருக்கிருர் எனக் கொள்ளவேண்டும். அப்படி வலுவு பெற்றவர் மேஷ நவாம்சத்தில் இருப்பாரேயானுல் போலீஸ், மிலிடெரி, மேஸ்திரி, தலைவர் பூமி மூலமும், நூல்மில், கம்பளி, கோதுமை, பார்லி, 'தாது' மூலிகைகள், தங்கம், ஆடு, குங்கில்யம, பிசின் மூலமும், அக்கினியை உபயோகப் படுத்தி செய்யும் தொழில்கள - பட்டரை கம்மாலை, யந்திர சாலை, வெடிகுண்டு செய்யும் ஸ்தலம் இவை போன்ற வற்றில் - உத்தியோகமும், அதிலேயே சீக்கிரம் மேல் பதவி யும் அதிகாரமும் இருக்கும். தலைவணங்கி அடங்கி ஒடுங்கி தொழில் புரிய மனம வராது.

களத்திரம் : 2, 7, 11 வீடுகளைக்கொண்டு களத்திரத் தின் குணுதிசயம் அறியவேண்டும். ஆனுல் முக்கியமாக ஏழாம் வீட்டைக்கொண்டு சொல்வதால், துலாராசிக்குச் சொல்லப்படும் குணுதிசயங்களை படித்துப் பார்த்துக் கொள்ளவும்.

## ரிஷப ராசி

வான மண்டலத்தில் 30° முதல் 60° வரை இவ்வீட் டில் கார்த்திகை 2, 3, 4 பாதங்களும், ரோகிணி 4 பாதங் களிலும், மிருக சிரிஷம் 1, 2 பாதங்களும் உள்ளன. வான மண்டலத்தில் 2ம் ராசி. பெண் ராசி. ஸ்திர ராசி. பூமி ராசி. இவ்வீட்டின் அதிபதி சுக்ரன். அதாவது சுக்ரனின் குணுதிசயங்களும் இவ்வீட்டின் குணுதிசயங்களும் ஒன்று. இவ்வீட்டில் சுக்ரனுக்கு வலுவு அதிகம். சந்திரனுக்கு பலம் மிக அதிகம். ஆகவே ரிஷபத்தில் சந்திரன் உச்சம். இங்கே ஒரு கிரகமும் நீசம் அல்ல.

சரீரம் : ரிஷபலக்னத்தில் ஜனித்தால் அநேகமாக சாதாரண உயரமும், பெருத்த சரீரமும், அகண்ட நெற்றி யும், பெருத்த கழுத்தையும் உடையவர் ஆவர்.

குறிகள் : ரிஷபத்தில் பாபிகள் இருப்பின் கண்ணின் அருகிலும் கன்னத்திலும் மச்சம் இருக்கும். ரிஷபத்தி லிருக்கும் பாபிகளின் தசைபுக்திகளில் இவ்விடங்களில் தழும்பும் உண்டாகும்.

குணம் : நிதான ஸ்வபாவம், தீர்மான எண்ணம், உறுதியான கருத்து, அதை மாற்றுவது கடினம். நான் என்கிற எண்ணம் அதிகம், இருப்பினும் பெருவாழ்வு வாழ வேண்டும் என்கிற எண்ணத்துடன் விடாமுயற்சியையும் இலகுவில் கோபமே வராத பொறுமையும், அதனால் பெருமையும், சுகத்தையும், குறிக்கிறது. நல்ல ஞாபகத் துடன் பணிபுரிதலும் பிதுர் தனம் கூடும் பாக்யம் உடைய வரும் ஆவர். தன் தனத்தில் கருத்து, ஸ்வபகார்யத்தில் கருத்து, தான தர்மம் செய்ய நேரின் அநேகமாக மிக சிக்கனம், இயற்கையை கண்டு இன்புறுவது, தனியாக இருந்து ஆனந்தமடைவது, நல்ல புத்தியும் உண்டு, சகல மும் அறிவார். மிதமாக பேசுவார். தன் கருத்தை மாற்ற மாட்டார்.

ரோகம் : 6-ம் வீடு துலாம் ஆவதால் மூத்திரப்பை, அப்பெண்டிஸைடிஸ், நீரரோகம், இடுப்பில் வலி, வாயு பீடை, வயிற்றின் அடிபாகத்தில் வலி.

ஜீவனம் : 2, 6, 10-ம் வீட்டின் அதிபதிகளில் வலுவு பெற்றவர் ஜாதகத்தில், நவாம்சத்தில், ரிஷபத்தில் இருந் தால் பயிர் தொழில், பூங்காவனம், புஷ்பம், நகை, வைரம், மூக்குக்கண்ணாடி, கண்ணாடி, அரிசி, மாடு, பாலைக்கொடுக் கும் பெண் மிருகங்கள், பருத்தி, பட்டு, காய்கறி, பிளாஸ்டிக், தோல், புகைப்படம், கிரோஸின், பெட்ரோல், சங்கீதம், சர்க்கரை கரும்பு பால் பவுடர், வாசனை திரவியம், வாகனம், பெண்கள் மூலம், நிதிஸ்தலத்திலும், தனது வாக்கு சாதுர் தியத்தாலும் தனவிருத்தி இருக்கும்.

களத்திரத்திற்கு விருச்சிகராசி குணதிசயங்களைப் பார்க்கவும்.

## மிதுனராசி

வான்மண்டலத்தின் மூன்ருவதுராசி : 60° முதல் 90° வரை மிருகசீரிஷம் 3, 4 பாதங்கள், திருவாதிரை, புனர்

பூசம் 1, 2, 3 பாதங்கள் உள்ளன ஆண்ராசி : உபயராசி : வாயு அல்லது ஆகாசம் எனப்படும். இவ்வீட்டின் அதிபதி புதன். இங்கே ஒரு கிரகமும் உச்சமுமில்லை; நீசமுமில்லை.

சரீரம் : உயரமான உடம்பு, நீண்டகைகள், குறுகுறுவென சுறுசுறுப்பைக்காட்டும்முகம், கூர்மையான பார்வை தெளிவான பேச்சு, அதிராக நடையுடைவராவர்.

குறி : மிதுனலக்னத்தில் பாபியிருந்தால் கழுத்து, கை, தோளாப்பட்டையில் மச்சம், பாபியின்புக்தியில், ரணத்தால் தழும்பு.

குணம் : "மானிடசேவையே மாதவ சேவை" யெனக் கருதி, மானிடர்களின் இயற்கை ஸ்வபாவங்களை அறிந்து, அவர் அவர்களுக்குத் திகுந்தாற்போல், யாவர் மனதையும் புண்படுத்தாது, ஈகையைக்காட்டி, இன்புற உண்மையைச் செய்பவர். "நகை, ஈகை, இன்சொல் இகழாமை இவை நான்கும் வகையென்ப" என்ற திருவள்ளுவர் வாக்கின்படி நடக்கக்கூடியவர், வாயுராசி யானதால் யோஜனை செய்வதிலும், நுண்ணறிவுடன் புத்தி கூறுவதிலும, சமயம் போல் நடிக்கவும் திறமை வாய்ந்த தூதன். குற்றம் குறை கண்டு பிடிப்பதில் மன்னன். மூளையைப் பயன் படுத்தி வேலை செய்வதில் திரன் எக்கலையானாலும் படித்து, பயின்று, ஞானத்தையடைவதில் ப்ரஹஸ்பதி. எத்தொழிலிலும் ஆரம்பசூரன். இடையூறு, தடை, ஸ்ரமம் வருவதால் பூர்த்தி செய்வதில் தாமதம்.

ரோகம் : கர்பப்பை, மர்மஸ்தலம், மூத்ரப்பையில் கல், கொப்பளம், மாதவிடாய் மூலம் கஷ்டம் புணர்ச்சியால் பெறும் பெரும் நோய் மூல சூட்டால் கஷ்டம்.

ஜீவனம் : பேச்சாளர். வேதாந்தம் எடுத்துரைப்பவர், பாடகர்; எழுத்தாளர் இன்ஸ்பெக்டர், பரிசோதகர் விற்பனையாளர். எஜெண்ட், பிரதி நிதி, பல தொழில் ஒரே காலத்தில் செய்பவர், இன்ஜினியரிங், போக்கு வரத்து சாதனம், மோட்டார், ரெயில்வே, ஆகாசக்கப்பல், கடிதம், அச்சு, போஸ்டல், பத்திரிகை, பள்ளிக்கூடம், மின்சாரம், ரேடியோ, கம்பியற்ற தந்தி இலாகா, விளம்பர இலாகா,

தூதர், (ambassador, agent) சணல், பருத்தி, வெள்ளியல் பச்சைநிற வஸ்துக்கள், முள்ளங்கி வேர்க்கடலை, பருப்பு, பாதரஸம், நூல், நடனம், முதலியவற்றின்மூலம், 2, 6, 10ம் வீட்டுக்குடையவர்களில் வலுவுபெற்றவர் நாவம்சத்தில் மிதுனத்திலிருப்பின், தொழில் ஏற்படும்.

களத்ரம் : தனுர் ராசிக்குச் சொல்லப்பட்ட குணாதிசயங்களையும் தனுசில் ஏதாவது கிரஹம் ஜாதகத்திலிருப்பின், அந்த கிரகத்தின் குணாதிசயத்தையும் சேர்த்து, ஊஹித்துக் கொள்ளவும். இவ்விதமே ஒவ்வொரு ராசி ஜனனத்திற்கும் 7-ம் வீடு, அதிலுள்ள கிரகங்களைக் கொண்டு, களத்ரம் அல்லது புருஷனின் குணமறியவும்.

## கடகராசி

வான மண்டலத்தில் 90° முதல் 120° வரை : வான மண்டலத்தின் 4வது ராசி. பெண் ராசி, சர ராசி, ஜல ராசி. புனர்பூசம் 4-ம் பாதம், பூசம் ஆயில்யம் நக்ஷத்ரங்கள் அடங்கி யிருக்கின்றன. இவ் வீட்டின் அதிபதி சந்திரன். கடகத்தில் குருவிற்குப் பலம் மிக அதிகமாகவே குரு கடகத்தில் உச்சம், செவ்வாய் அக்னி கிரகமாகி இங்கே சரமும் ஜலமுமான ராசியில், கடகத்தில் நீசம், பலம் மிகக் குறைவு.

சரீரம் : பொதுவாக குட்டையான ஜனங்கள். இளைத்த சரீரம். இளமையில் பலஹீனம். பூஞ்சை. வயதாக ஆக திட சரீரம். நோய்வரின் திரும்ப ஆரோக்யமுண்டாக தாமதம். உடம்பில் இடுப்பிற்குமேல் நீளம். அதிகம் உருண்டை முகம். மான் போல் பார்வை.

குறி : மார்புக்கு மேல் மச்சம், கடகத்தில் இருக்கும் பாப க்ரஹத்தின் தசா, புக்திகளில் ரணத்தால் தழும்பு.

குணம் : சந்திரனை 'மதி' என்கிறோம். ஆகவே கடக லக்னத்தில் ஜனித்தோர் விவேகி, மனத்தோற்றம், கற்பனை யதிகம், மற்றவரைப் பார்த்து, அவரைப் போல் நடிப்பது, பின்பற்றுவதில் சாமர்த்யம். ஸ்திரமான எண்ணமோ, தீர்மானமோ, போதுமான சக்தியோ கிடையாது.

ஜலத்தை எப்பாத்திரத்தில் எடுத்தாலும், ஜலம் அப்பாத்திரத்தின் உருவத்தை யெடுப்பதுபோல், சமயத்திற்கு தகுந்தபடி மேலதிகாரி நோக்கத்தை யறிந்து நடப்பது. தன் கார்யத்திலும் ஓர் கண். சுறுசுறுப்புண்டு. பார்ப்பவர்களுக்கு கள்ளம் கபடற்று பேசுவதுபோல் தோன்றும். இவர்கள் மனதை அறிய முடியாது. பல விஷயங்களை வெளியில் சொல்ல மாட்டார். ரகஸ்ய போலீஸ் இலாகாவிற்கும், censor ஆபீஸுக்கும் ஏற்றவர். வானத்தின் 4ம் ராசியானதால், புண்ய வசத்தால் நிலம் வீடு முதலியன இருக்கும். குடும்பத்தில் பற்று அதிகம். தைர்யமும் அதைர்யமும் மாறி மாறி இவரிடம் காணலாம். குணமும் அப்படியே. ஒரு சமயம் கொஞ்சி குலாவுவது. மற்றொரு சமயம் கடு கடுப்பு, சிக்கனம், முன் ஜாக்ரதை. முன் கோபமுமுண்டு. திட்டம் போட்டு வேலை செய்யும் குணம்.

ரோகம் : 6ம் வீடு தனுசு. ஆகவே இடுப்பில் பிடிப்பு, கில் வாயு, தொடையில் நோய், மூச்சுப் பையிலும் கஷ்டம்.

ஜீவனம் : வாஹனம், நீர்பாசனம், ஏற்றுமதி இறக்குமதி, கப்பல், நீர்ப்படை, மீன் முதலிய இலாகா. பெருந்தனத்தை முதலாகப்போட்டு, பெரிய தொழிற்சாலை ஏற்படுத்தி நிர்வகிப்பது. பழவகை, வாழை, கிழங்கு தென்னை, தேயிலை, காப்பி, ரப்பர், வெள்ளி பால் பெட்ரோல், ஹோட்டல், மது, பானம், எண்ணை, பசும் இலை, மொட்டைகோஸ், வெள்ளிரி, முலாம் பழம், பூசனி, நெய், உப்பு, சோழி, முத்து. கிணறு கட்டுவது, தூர் எடுப்பது, நாய்க்குடை முதலியவற்றின் மூலம் தன விருத்தி,

களத்ரம் : 7ம் வீடான மகர ராசிக்குக் கூறியுள்ள ஸ்வபாவங்களும், 7ம் வீட்டிலுள்ள கிரகங்களின் குணாதிசயங்களும் கணவனிடம் அல்லது தனக்கு வரும் பத்னியிடம் காணலாம். [குறிப்பு : இரு கிரகங்கள் 7லிருப்பதாய் வைத்துக் கொள்வோம். அதாவது கேதுவும், சுக்ரனும், மகரத்தில், கடகத்திற்கு 7ம் வீட்டிலிருப்பதாக வைத்துக் கொண்டால், ஜாதகனின் கேது புக்திகளில், மனைவியின் குண விசேஷங்கள் கேதுக்கு கூறப்படுவதுபோல் ஸ்லாக்யமாயிராது. உடனே சுக்ர புக்தி வந்ததும், குணம் காலத்

திற்கேற்ப மாறி உற்சாத்தை யளிக்கும். ஆகவே குணாதிசயமும் காலத்திற்கேற்ப சற்று மாறுமென்பதையும், நடக்கும் தசா புக்திகளை ஒட்டி குணங்களிருக்கும் என்பதையும் மறக்கலாகாது. பல்லாண்டு யோக்யனுயிருப்பினும், திடீரென திருடவும், பொய் சொல்லவும், ஏமாற்றவும் புத்தி மாறுவது நாம் ப்ரத்யக்ஷமாக பார்க்கவில்லையா? ஆகவே, ராசிகள் மூலம் அறிவது ஓர் பொது பலனேயாகும். மாறுவதை தசைகள் மூலம் அறிய வேண்டும்].

## ஸிம்மம்

வான மண்டலத்தில் 120° முதல் 150° வரை. வான மண்டலத்தின் ஐந்தாம் ராசி, ஆண் ராசி, ஸ்திர ராசி, அக்னி ராசி, மகம் 4 பாதங்கள். பூரம் 4 பாதங்கள், உத்ரம் முதல் பாதம் கொண்டுள்ளது.

சூர்யனின் குணாதிசயங்கள் இந்த ராசியின் குணாதிசயங்களுக்கு ஒத்திருப்பதால் இவ்வீட்டினதிபதி சூர்யன. சூர்யனுக்கு ஸிம்மத்தில் வலுவுண்டு. இதர கிரகங்களுக்கு ஸிம்மத்தில் உச்சமுமில்லை. நீசமுமில்லை.

**சரீரம் :** ஸிம்ம லக்னத்தில் பிறந்தவர்களுக்கு பொதுவாக நல்ல வளர்த்தி, ஆஜானுபாஹு. எலும்புகள் நீண்டு வளர்ந்திருக்கும். தோள்பட்டைகள் விரிந்து படர்ந்திருக்கும். யாவரையும் அடக்கியாளும் அதிகார தோற்றம். முகம் சிறிதளவே நீண்டிருக்கலாம். அடர்த்தியான ரோமம் கண் புருவம் அதிக அழகு.

**குறிகள் :** ஹ்ருதயத்தினருகில் மச்சம். பாபிகள் ஸிம்ம லக்னத்திலிருப்பின், ஹ்ருதயத்தினருகில் கொப்பளம், ரணத்தால் தழும்பு, அந்த பாப கிரகத்தின் தசை புக்தி காலங்களில் ஏற்படும்.

**குணம் :** பெருந்தன்மையும், தாராள சிந்தனையும், தலைமை தாங்க ஆவலும், முன்னேற்றமடையவோ, எக்கார்ய்த்தையும் யத்தனிக்கவோ போட்டியிடவோ அஞ்சாத வீரமும், திடசித்தமும், மன்னிக்கும் நற்குணமும் கஷ்டம் வரும் காலத்தில் அக்கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல்,

பொறுமையுடன் தன்னால் செய்யக்கூடாதது எதுவும் இல்லை என்கிற தீர்மான நம்பிக்கையுடன் மேலும் விடாமல் தொடர்ந்து செய்யும் ஊக்கமும், இழிவான எண்ணம் மனதில் உதிக்காமலும், தாழ்ந்த செய்கைகளை கையாளாம லும், அப்படி செய்வோரை கண்டாலே வெறுக்கும் குணமும் சிறப்பும். பிரபு குணமும் நாளடைவில் இக்குணங் களால் பெயரும் புகழும் உண்டாகும். ஆண் ராசி ஆன தால் பௌருஷம், தைர்யம், வீரம் உண்டு. ஸ்திர ராசி யானதால் திடசித்தம். அக்னி ராசியானதால் அஞ்சாத நெஞ்சு, அல்ப விஷயங்களை எரிக்கும் தன்மை.

**ரோகம்:** சிம்ம லக்னத்தில் ஜனித்தால் 6ம் வீடு ரோகஸ்தானம் எனப்படுவது மகரமாகும். ஆகவே பொது வாக சிம்ம லக்னத்தில் ஜனித்தவர்களுக்கு முழங்காலில் பிடிப்பு, நோய், சதையின்பேரில் படை, குஷ்டம் போன்ற தேஜஸை குறைக்கும் வியாதி, ஜீரணக் குறைவு, கீல்வாதம் மந்தம், ரத்தம் கெட்டுவிடுவது.

**ஜீவனம்**, 2, 6, 10ம் வீட்டுக்குடையவர்களில் வலுவு பெற்றவர் நவாம்சத்தில் சிம்மமேறினால், தங்கம், நாணயம் அச்சிடும் சாலை, மருந்துகள் வைத்தியசாலை, அரசாங்கத் தில் தொழில் அல்லது நிரந்தரமான தொழில் அதிகாரம், சுகாதார இலாகா இவைகளில்உத்தியோகம். விலைஉயர்ந்த கல், அரிசி, தேன், வாசனைக்கொடுக்கும் மூலிகை, மருந்து கள், தான்யத்தில் உள்ள தவிடுகள், பழச்சார், கோல், வெல்லம், சர்க்கரை, இவைகளின்மூலம் தொழில் புரிய லாம்.

## கன்னியாராசி

**களத்ரம்:** 7ம் வீடான கும்ப ராசிக்கு சொல்லப்படும் குணாதிசயங்களையும், ஜனன காலத்தில கும்பத்திலிருந்த கிரகங்களின் குணாதிசயங்களைக்கொண்டு, களத்திரத்தின் ஸ்வபாவம் அறியவும்.

**கன்னியா ராசி:** வான மண்டலத்தில் 150° முதல் 180°வரை. வான மண்டலத்தின் 6வது ராசியாகும். உத்திரம் 2, 3, 4 பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1,2 பாதங் கள் கொண்டுள்ளன. பெண் ராசி உபயராசி. பிருத்வீ

அல்லது பூமி எனப்படும் ராசி. இவ்வீட்டின் குணதிசயங்கள் முழுவதும் புதனின் குணதிசயங்களுக்கு ஒத்து இருப்பதால் இவ்வீட்டின் அதிபதி புதன். கன்னியில் புதனே உச்சம். இங்கு சுக்ரனுக்குப் பலம் மிகக் குறைவு. ஆகவே சுக்ரன் நீசம்.

**சரீரம் :** கன்னியா லக்னத்தில் ஜனித்தவருக்குப் பொதுவாக மெலிந்த சரீரமும், சராசரி உயரமும், மெல்லிய குரலும், குடுகுடுவென வேகமான நடையும், எவ்வளவு வயது முதிர்ந்தாலும் இளமை தோற்றமும், கருத்த மயிரும், கூர்மையான பார்வையும், வில்போல் வளைந்த புருவமும இருக்கும்.

**குறிகள் :** கன்னியில் பாபி இருந்தால் வயிறு, ஈரல்பை இவைகளுக்கு நேராக சரீரத்தில் மச்சம் உண்டு. கன்னியில் இருக்கும் பாபியின் தசை, புக்திகளில் அவ்விடம் ஏற்படும் நோயால் தழும்புகள் உண்டாகும். இவர்களுக்கு அடிக்கடி ரணங்கள் ஏற்பட நியாயமுண்டு.

**குணம் :** புத்தி கூர்மையும், சாமர்த்தியமும், சீக்ரம் சகலமும் கற்றுக்கொளளும் அறிவும் அதிகம். நல்ல சொல் திறமை இனிமையாக பேசுவார். குற்றம் குறைகள் கூறுவதில் நிபுணர். பச்சாதாபம் இல்லாதவர். தன்மட்டில் ஜாக்கிரதையாக நடப்பவர். மற்றவர் முகத்தைப் பார்த்து சமயத்திற்கேற்ப நடப்பவர். தன்னைக்கூட தானே நம்ப மாட்டார். சந்தேகம் அதிகம். எவ்விஷயத்தையும் மிக விவரமாகவும், விளக்கமாகவும் பெரிய கதைபோல் நன்கு விளங்கும்படி உரைக்கும் பேச்சாளர். எச்சிலவையும் தவற விடாமல் வரிசையாக எழுதும் கணக்காளர். சிறுநோயானு லும் விரிவாக வைத்தியரிடம் எடுத்துரைத்து சதா மருந்து சாப்பிடும் மனப்பான்மை உடையவர். தன் வீட்டையும், பண்டங்களையும், தஸ்தாவேஜ்களையும், புஸ்தகம் முதலியவற்றையும், அலங்காரமாகவும் வரிசையாகவும் வைத்துக் கொள்வார். சேவகர்களிடம் சதா வேலை வாங்குவதில் பரமானந்தம்.

**ரோகம் :** 6ம் வீடு கும்பமாவதால் ஆட்டு தசை, அதற்குக் கீழும் ரணம் ஏற்படலாம். நரம்பு சிலந்தி, ரத்தக் கொதிப்பு, கண்ணில் ரோகம், பாண்டு ரோகம் வரக்கூடும்.

ஜீவனம் : 2, 6, 10க்குடையவர்களில் வலுவு பெற்ற வர் நவாம்சத்தில் கன்னியில் இருப்பின் படிப்பு எழுத்து கணக்குப் பிள்ளை உபாத்தியாயர் தூதர் இஞ்சினீயர். சுகா தாரம் புஸ்தகம் கடிதம் அச்சாபீஸ் பத்திரிகை தமிழ் மின்சாரம் போக்கு வரத்து சாதனம் சேவகர்கள் க்ஷேமலா பத்தை கவனிக்கும் தொழில். சணல் நார் கோணி கொள்ளு பச்சைப்பயிறு பருத்திப் பயிர் வெள்ளியம் ஜவுளி மில் கணக்குப் பரிசோதனை. நடனம் முதலிய வற்றின் மூலம் தன விருத்தி ஏற்படலாம்.

களத்திரத்திற்கு 7ம் வீடான மீன ராசிக்குக் கூறப் படும் குணாதிசயங்களைக் கொண்டு அறிந்துகொள்ளவும்.

## துலாராசி

வான மண்டலத்தில் 180° முதல் 210° வரை வான மண்டலத்தின் 7வது ராசி சித்திரை 3, 4 பாதங் கள். சுவாதி 4 பாதங்கள் விசாகம் 1, 2, 3 பாதங்கள் கொண்டுள்ளன. ஆண் ராசி; சர ராசி. வாயு எனப்படும் ஆகாச ராசி. இவ்வீட்டின் குணாதிசயங்கள் சுக்ரனின் குணாதிசயங்களுக்கு ஒத்திருப்பதால் சுக்ரன் அதிபதி ஆவர். சனிக்கு மிக வலுவு அதிகமானதால் துலாத்தில் சனி உச்சம். எப்படி ஐப்பசி மாதத்தில் அடை மழையால் சூர்யனையே நாம் காண முடியாதோ அதேபோன்று இவ் வீட்டில் சூர்யனுக்கு இங்கு மிக பலக் குறைவு. ஆகவே சூர்யன் இங்கு நீசம்.

சரீரம்: உயரமும், மெலிந்த உடம்பும், காந்தியும் தேஜஸும், சுந்தரமான பார்வையும், நடு வயதில் தலையில் அழகான வழுக்கையும் இருக்கும்.

குறிகள் : நாபியின் கீழும், மர்மஸ்தானத்திற்கும் மேலும் மச்சம் உண்டு. துலாத்தில் இருக்கும் பாபியின் தசா புக்தி காலங்களில் மேற்கூறிய இடத்தில் தழும்புகள் ஏற்படும்.

குணம் : கடுமையில்லாது நற்குணம் உள்ளவரும், அன்புள்ளவரும், யோக்கியமானவரும், இறக்கம் உள்ள வரும், நியாயமாய் நடப்பவரும், வேற்றுமையை ஒழித்து சதா ஒற்றுமையை நாடி விரோதத்தை வளர்க்காமல்,

உறவை கொண்டாடும் தன்மையும், எக்காரியம் செய்யினும் அதனால் விளையக்கூடிய இனப துன்பங்களை ஆலோசனை செய்பவரும், தூக்கம் வாராது பணிபுரியும் சாமர்த்திய முள்ளவரும், உள்ளொன்று வைத்து புறமொன்று பேச தெரியாதவரும், பிடிவாதம் இல்லாது இழுத்த இழுப்பிற்கு வருபவரும், கோபம் வரினும் சீக்கிரமே சாந்தத்தை அடைபவரும், உணர்ச்சி மிகுந்தவரும், இதரர்கள் ஏசிப் பேசின் மனம் தாளாதவர்களும், இருவர்கள் சண்டையிட்டால் அவர்களுக்குள் சமாதானத்தை நிலைநாட்டுபவரும், மற்றவர் சுகத்தைக் கருதி பொதுநல பணி புரிபவரும் தன் நலம் கருதாது சமூகத்திற்கு பாடுபட்டு உண்மையாக உழைத்து நற்பெயர் பெறுபவரும், பொதுமக்களின் நற்பெயரை அடைபவரும் ஆவார்.

ரோகம்: 6ம் வீடு மீனராசியாவதால் கால், பாதம் இவற்றில் வீக்கமும், மதுபானம் செய்வதால்கஷ்டம், ரத்தகுழாய் முழங்காலுக்கு கீழே புடைத்து கண்ணிற்கு விகாரமாய் தோற்றமளிப்பது, மஹோதரம் போன்று நோய்வரக் கூடும்.

ஜீவனம்: 2, 6, 10ம் வீட்டு அதிபதிகளில் வலுவு பெற்றோர் நவாம்சத்தில் துலாமேறின் காற்றினால் ஓடும் மில், ஆகாய கப்பல், சங்கீதம், பாட்டு, நடிகர், பெயிண்ட் சாயம், வர்ணம், பட்டு உடுப்பு தயாரிப்பவர், பருத்தி, சணல், கோதுமை, தான்யம், உணவு பண்டங்கள், வாசனை திரவியம், முத்துசிற்பி, கண்ணாடி, பூசெடி, செம்பு, வெள்ளி மனதைக் கவரும் விலை உயர்ந்த பண்டங்கள், பிளாஸ்டிக், மைகா, மேஜை, நாற்காலி போன்ற சாமான்கள், ஆப்பிள், ஜெல்லி, கிராப், ஏலக்காய், குங்குமப்பூ, உளுந்து, கடுகு, பிஸ்கட், பப்பர்மிண்ட், பெண்கள் மூலம் பெண்களுக்கு சேவகம் செய்தல், பெண்கள் பள்ளியில் தொழில் நீதி நியாயம் வழங்கவும், வரி எவ்வளவு என தீர்மானிக்கவும், Estimate, assessment போன்ற தொழில்.

களத்திரம்: களத்திர விஷயமாக 7ம் வீடான மேஷம் திற்குச் சொல்லப்பட்டுள்ள குணாதிசயங்களையும் அப்பால் 7ம் வீட்டில் உள்ள கிரகங்களின் குணாதிசயங்களையும் சேர்த்துப் பார்த்து யூகித்துக்கொள்ளவும்.

## விருச்சிக ராசி

வான மண்டலத்தில் 210° முதல் 240° வரை. வான மண்டலத்தின் 8வது ராசி. விசாகம் 4ம் பாதம், அனுஷம், கேட்டை நக்ஷத்திரங்கள் கொண்டுள்ளன பெண் ராசி. ஸ்திர ராசி. ஜல ராசி. இவ்வீட்டின் குணாதிசயங்கள் செவ்வாயின் குணத்திற்குப் பெரும்பாலும் ஒத்து வருவதால், செவ்வாயே அதிபதி. செவ்வாய்க்கு வலுவு அதிகம். ஒரு கிரகமும் இங்கே உச்சம் பெறவில்லை. ஆனால் சந்திரனுக்கு இங்கு பலம் குறைவு. மிகக் குறைவு. ஆகவே சந்திரன் நீசம்.

**சரீரம் :** விருச்சிக லக்னத்தில் ஜனிப்பவருக்கு நல்ல ஆரோக்யத்துடன்கூடிய, வளர்ச்சியுடன், உருண்டை முகத்துடன், குட்டை மயிருடன், கீழ்பார்வை பார்க்கும் நேத்ரத்துடன், பயமற்று துணிச்சலால், துரிதமாய் கார்யங்களைச் செய்யும் மனதையும் சரீரத்தையும் தனது செய்கையாலேயே உடம்பைப் பாழாக்கிக்கொள்ளும் தன்மையும் இருக்கும்.

**குறிகள் :** மர்ம ஸ்தானத்தில் மச்சம், பாபிகள் இருப்பின் ஆபரேஷன் செய்ய நேரும். ஆகவே தழும்பும் இருக்கும். தழும்பு ஜனனத்திலேயே யிருக்காது. நடுவில் உண்டாகும். ஆகவே, விருச்சிகத்தில் உள்ள பாபக்ரகத்தின் தசை, புக்திகளில் தழும்பு வருமென அறியவும்.

**குணம் :** அஞ்சாத நெஞ்சும், துணிவும், பணிபுரிவதில் மிக சுறுசுறுப்பும், மனோதிடமும் இருக்கும். தடையேற்படுமேயாயின், மேலும் பலங்கொண்டு பணியாற்றி, எண்ணத்தை பூர்த்தி செய்வார். பல்லாண்டு திட்டங்களை, தற்பொழுதே ஒருவாறு யோசனை செய்து, என்ன நிகழக்கூடும், யாது பலனை பெறுவோம் என்பதை யூகித்து, அணைபோட்டு, சாமர்த்தியமாக கார்யத்தை செய்வதில் நிபுணர். தன்னால் எவ்வளவு செய்யக்கூடுமென, தனக்கே தெரியாது உழைப்பார். மற்றவர்கள் எடுத்து உரைக்கும் பொழுதே இவர்களின் தனிப்போக்கு வெளிப்படும். சதா ஏதாவது செய்துகொண்டே யிருக்கவேண்டும். அதனால் உடம்பு பாதிக்கப்பட்டாலும் அதைப் பொருட்படுத்தார்கள். தான் என்னும் அஹம் ஓரளவு இருக்கும்.

யாராவது, தன்னைப்பற்றி குறைகூறின் தாளமாட்டார். சமயம் பார்த்து, எதிரி தலையை தூக்கமுடியாதபடி தீங்கிழைத்து விடுவார். தன் எண்ணப்படி, தனியே வேலை செய்தால், பலர் வேலையை ஒருவரே செய்யும் திறமையுண்டு. ஞாபகமும் அதிகம். சிற்றின்பத்தில் ஈடுபட்டாலும் தன் எண்ணத்தை நிறைவேற்றி விடுவர். தன் கார்யத்தில் கருத்து. அனுவசிய வம்பு இராது. நூதன வழிகள் கண்டுபிடிப்பதற்கு வேண்டிய நுண்ணறிவுள்ளவர். நாளை நாளையென தாமதித்துக் கடைசியாக சகலத்தையும் மிக திருப்தியாக செய்யும் சக்தி வாய்ந்தவர். சிற்றின்பத்தில் அதிக புத்தி சலனமில்லாவிடில், எக்கார்யத்தையும் இந்த ராசிக்காரர்கள் செய்து முடிப்பதுபோல், இதர ராசியில் ஜனிப்பவர் செய்ய முடியாது.

ரோகம்: 6ம் வீடு, மேஷம் ஆவதாலும், 6ம் வீட்டினதிபதி லக்னாதிபதியாவதால், தானே தனக்கு நோயை வரவழைத்துக்கொள்வார். கொப்பளம் அக்னி ஆயுதத்தால் பீடை சிரங்கு தலைவலி திடீரென ஜ்வரம் மண்டை நடைச்சல் ஆவேசம் வருபவர்போன்று மயக்கம். தானே ஏதோ நோயிருப்பதுபோல் பயப்படுவது. Haemmorhage.

ஜீவனம்: 2. 6. 10ம் வீட்டினதிபதிகளில் வலுவு பெற்றவர், நவாம்சத்தில் விருச்சிகத்திலிருப்பின் இன்ஸ்யூரன்ஸ் வைத்தியம் ப்ரஸவ ஸ்தலம் மர்மஸ்தான நோய் சிகிச்சை. மருந்து டானிக் முதலியன தயாரிப்பது. மருந்து வ்யாபாரம் குடி சாராயம் அக்னியைக்கொண்டு செய்யும் தொழில் சமையல் இன்ஜின் பாய்லர் சுரங்கம் சேனைக்குத் தண்ணீர் சப்ளை பூமி அணைக்கட்டு ஆயுதம் ஆடுமாடு கொலை செய்யும் இடம், சேவகர்களை அடக்கி ஆள்வது, தேயிலை காபி புகையிலை முதலியவை மூலம் தன விருத்தி, செம்பு டின் புழுங்கலரிசி, பூண்டு வெல்லம் சோப்புக்கல், சுரங்கத்தில் கிடைக்கும் வஸ்துக்கள். சேவகர்களை ஒருங்கு கூட்டி, சங்கமேற்படுத்தி அதை நடத்துவது. அல்லது அச் சேவகர்களிடம் வேலைவாங்கி வ்யாபாரம் செய்வது. யானை முதலிய மிருகங்களின் மூலமும் தன லாபம். அதாவது யானையைக் காட்டில் பிடிப்பது, அதை விற்பது, அல்லது பாகன் வேலை போன்றது தனவிருத்தி.

களத்ரம்: 7ம் வீடான ரிஷபத்திற்குச் சொல்லப்பட்ட குணாதிசயங்களும், 7ம் வீடான ரிஷபத்தில் ஜனன காலத்தில் இருந்த கிரகங்களின் குணாதிசயங்களையும் சேர்த்து ஊஹிக்கவும்.

## தனுர் ராசி

வான மண்டலத்தில் 240° முதல் 270° வரை. வான மண்டலத்தின் 9ம் ராசி. மூலம்: பூராடம், உத்திராடம், முதல் பாதம் கொண்டது. ஆண் ராசி: உபய ராசி: அக்னி ராசி. இவ்விட்டின் குணாதிசயங்கள் குருவின் குணத்திற் கொத்துவருவதால், இதன் அதிபதி 'குரு'. குருவிற்கு இங்கு பலம் அதிகம். வேறு எந்த கிரகத்திற்கும் தனுர் ராசியில் உச்சமோ நீசமோ கிடையாது.

சரீரம், உயரம். நன்ருக வளப்பத்துடன் வளர்ச்சி. அழகான முகம். அகன்ற நெற்றி. பழுப்பு நிறம் கலந்த மயிர். விசாலமான கண்கள். நீண்ட மூக்கு.

குறிகள்: தொடையில் மச்சம். தழும்பு.

குணம்: வெகுளி கள்ளங்கபடமற்றவர். யோக்யர். தாராள சிந்தனை. யாவருக்கும் உதவிபுரிய வேண்டுமென்கிற அவா. பலபடித்துப் பயிலவேண்டுமென ப்ரியம், வகையாக விருத்தி செய்து வளம்பெற வேண்டுமென்கிற விருப்பம். நியாயப்படியே நடக்கவேண்டுமென்கிற நல்லெண்ணம். இங்கிதமறிந்து, இடையில் தன் காரியத்தைச் சாதித்துக்கொள்ளும் இயற்கை. எல்லாம் நன்மைக்கும் க்ஷேமத்திற்குமே என்று எண்ணி, யாவற்றிலும் மேன்மையடைவதை எண்ணி உற்சாகம் உள்ளவர். கஷ்டம் வரினும், தெய்வானுகூல முண்டு என்னும் நம்பிக்கையால், மனந்தளர மாட்டார். தைர்யமுண்டு; நீதி தவற மனம் வராது. வேதாந்தி; நுண்ணறிவும், விடாமுயற்சியும், காரியம் முடியும்வரை உறக்கமின்றி உழைக்கும் தன்மையும், ஒரு முறையாக வகுத்து, ஒவ்வொன்ருக பணிபுரியும் மனப்பான்மையும், திடீரென தீர்மானித்தாலும், அறிவாளிகள் ஆழ்ந்து சிந்தனை செய்து சொல்லும் புத்திமதிக்கு மாறில்லாதபடி அவ்வளவு அறிவும், ஆண்டவன்

அருளும் தேகப் பயிற்சியில் ஓர் ஆசையுமுள்ளவர். அடங்கி நடந்து ஜீவிக்க மனம்வராது. சுயார்ஜிதத்தையும், எதிலும் தலைமை தாங்கவேண்டுமென்கிற அவா இருக்கும். தமாஷான பேச்சுடன் கூடியவர்.

6ம் வீடான ரிஷபம், ரிஷபத்தில் உள்ள பாபிகள் அவர்களது தசா, புக்திகளில் அடிக்கடி தொண்டையிலும், வாயிலும் புண், உள்நாக்கு பல்வலி, பல்லீரலில் ஓ, டிப்தீரியா, மூலச்சூடு, மலச்சிக்கல் போன்ற நோய்கள்.

ஜீவனம் : 2, 6, 10ம் வீட்டினதிபதிகளில் வலுவு பெற்றவர் தனூர் நவாம்சத்திலிருப்பின், கஜானா, பாங்க, நிதிசாலை, நீதிமன்றம் பள்ளிக்கூடம், குழந்தைகளுக்குப் போஷிப்பு, எவ்விடத்திலும் பொக்கிஷதார், தேவால்யம், உள்ளுக்குச் சாப்பிடும் மருந்து செய்பவர், பிஸிஸியன, ப்ரோஹிதர், ரதம் ஓட்டும் சாரதி, தங்கம், நகை, இனிப்பான பண்டங்கள் தயாரிப்பு, புத்தகம், பசு, மஞ்சள், ரப்பர், டின், வெளிநாட்டுடன் வ்யாபாரம், கம்பி, தந்தி, விஞ்ஞான இலாகா, உணவு இலாகா, அனுவசியமானதும் அதிகப்படியானதும் அத்யாவசியமில்லாததுமான சரக்குகள், கோ கோ பழறுகள், துத்துநாகம், புகையிலை போன்றவைகள் மூலம் தன விருத்தி.

களத்ரம் : 7ம் விடான மிதுன ராசிக்குக் கூறியுள்ள குணாதிசயங்களும் ஜனன காலத்தில் மிதுனத்திலிருந்த கிரகங்களின் குணாதிசயங்களையும் சேர்த்து, களத்ரம் குணத்தையறியவும். 7ம் வீடு இரட்டை ராசியானதால், கன்னி ராசியோ, தனூர் ராசியோ லக்னமாகப் பிறந்துள்ளாருக்குப் பாபர் சம்பந்தம் வரின், மனைவி தவிர துணைவியுமிருக்கலாம்.

## மகர ராசி

வான மண்டலத்தில் 270° முதல் 300° வரை. வான மண்டலத்தின் 10ம் ராசி : உத்ராடம் 2, 3, 4 பாதங்கள் : திருவோணம் அவிட்டம் 1, 2, பாதங்கள் கொண்டுள்ளது; பெண் ராசி சர ராசி; பிருதிவி ராசியாகும். இவ்வீட்டின் குணாதிசயங்களும் சனியின் குணாதிசயங்களும் ஒத்து

வருவதால சனி அதிபதியாவர். சனிக்கு மகரத்தில் வலுவு அதிகம். இங்கே செவ்வாய்க்கு மிக வலுவு. ஆகவே இங்கு செவ்வாய் உச்சம் குருவிற்கு மகரத்தில் வலுவு மிகக் குறைவு. ஆகவே குரு இங்கு நீசம்.

சரீரம் : மகர லக்னத்தில் ஜனித்தால், பலஹீனமான மெல்லிய சரீரம். நாளடைவில் தேறிவரும். நீண்ட முகம் கன்னம் ஒட்டியிருக்கும். மயிர் அதிகம். கெட்டியாயுமிருக்கும் மூக்கு எடுப்பாகயிருக்கும்.

குறிகள் : முழங்காலின்மேல் மச்சம். லக்னத்தில் பாபி யிருந்தால், அந்த பாபியின் தசாபுக்தி காலங்களில் தலை யிலும் முழங்காலிலும் அடிபடுவதால் தழும்பு ஏற்படும்.

குணம் : எக் கார்யத்தையும் பொறுமையாகவும், நிதானமாகவும், தொடர்ந்து விடாமலும் யத்தனித்து, பற்பல இடையூறுகள் வரினும், தாமதத்தினால் மனந்தளரா மல், உழைத்து, தனக்கு பலன் உண்டாகும்படி சாமர்த்திய மாய், உண்மையையறிந்து. எதிர்ப்பை முன்பே உணர்ந்து, சமாளித்து பூர்த்தி செய்வார்கள். நாளடைவில் பேரும் புகழும் உண்டாகும்படி, பலகாலம் பாடுபடுவர். நுண்ணறி வும், தன்னால் எல்லாம் சாதிக்க முடியுமெனும் நம்பிக்கை யும், தேவியின் அருளாலும், நண்பர் உதவியாலும் முன்னேற்றமடைவர். அதிகமாகவும் பேராசைப்படமாட் டார்கள். தன்னுடைய சக்தியை நன்கு அறிந்தவர். சதா படிப்பர். யோஜனை செய்து ஆராய்ச்சியும் செய்வார். வீண் பொழுது போக்கமாட்டார் என்றாலும், எப்பொழுதும் தனத்தையே எண்ணியும்மாளமாட்டார்கள். தெய்வசிந்தனை யும், ஆராதனையும் இடையிடையேயிருந்து வரும். உண்மை செய் நன்றி மறவாமை, நம்பிக்கைக்குப் பாத்திரமான நல்லெண்ணம், நற்செய்கை, சுய கார்யத்தில் அதிக கருத்து, பெரிய அலுவல்களையும் நன்றாய் செய்து முடிக்கும் திறமை, யாராவது ஒருவர் தூண்டுதலின்றி ஆரம்பிக்க சோம்பல். ஆரம்பித்தபின் சூரன்; பேச்சாளன்; ஏற்கனவே நாளடைவில் ஏற்பட்ட ஸ்நேகிதர் தவிர, புதிதாக நட்பை யும் ஸ்நேகத்தையும் அதிகப்படுத்த மாட்டார்கள், நண்பர் கள் பெரிய பதவியில் இருப்பர். யாவரையும் சமமாகப்

பாவிக்கும் மனப்பான்மை. வேதாந்தத்தைக் கற்றுணர்ந்து அனுஷ்டிப்பார்.

ரோகம்: 6ம் வீடு மிதுனமானதால், மூச்சு விடுவதில் ஸ்ரமம், ஸ்டார்ச் ஜீரணக் குறைவு. வயிறு உப்புசம். வாயு பிடை. லிவர் மந்தம். மஞ்சகாமாலை,

ஜீவனம்: இரும்பு, ஈயம், எள்ளு, எண்ணை, கிலகிற சாமான்கள், ட்ராப்ட்ஸ்மன், பஞ்ச இலாகா, பிகைஷக்காரர் விடுதி, சத்திரம் இவற்றில் பொறுப்பு ஏற்று செய்பவர், கொள்ளம்பட்டரை, ஏழ்மையான தொழில், ஸங்யாஸ், சேவகரின் சுகாதாரம், பூமிக்குள்ளிருந்து எடுக்கும் பண்டம் கள், சுரங்கம், கரி, குழாய் பழுது பார்ப்பவர், சிறைச்சாலை யில் தொழில், சுடுகாட்டில் தொழில், காவற்காரன், கடுமையான வேலை, கிணறு வெட்டுவது, இரவில் உத்தி யோகம், இவ்வித தொழில்களில் ஏதாவது 2, 6, 10க் குடையவர்களில் வலுவு பெற்றவர், நவாம்சத்தில் மகரத்தி லிருப்பின் இருக்கலாம்.

களத்ரம்: 7ம் வீடு கடகமானதால், குணாதிசயங்கள் கடக ராசிக்கு கூறியுள்ளபடியிருக்கும். கடகத்தில் கிரகங் கள் இருக்குமேயானால், இனி கிரகங்களுக்கு சொல்லப் போகிற குணங்களையும் சேர்த்துக்கொள்ளவும்.

## கும்பராசி

வான மண்டலத்தில் 300° முதல் 330° வரை வான மண்டலத்தின் 11ம் ராசி. அவிட்டம் 3, 4 பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 பாதங்கள் கொண்டுள்ளன. ஆண் ராசி, ஸ்திர ராசி, ஆகாச ராசி எனப்படும் சனியின் குணாதிசயங்களும் கும்பராசியின் குணாதிசயங்களும் ஒத்து வருவதால், கும்பத்தில் சனிக்கு வலுவு அதிகம். கும்பத் தின் அதிபதி சனியாகிறார், இவ்வீட்டில் வேறு எந்த கிரகத்திற்கும் உச்சமோ, நீசமோ கிடையாது. மேல்நாட் டார், கும்பத்தில் "யுரேனஸ்" என்னும் கிரகத்திற்கு வலுவு மிக அதிகமென கருதுகின்றனர்.

சரீரம்: சாதாரண உயரம்; திட சரீரம்; திருப்திகர மான ஆரோக்யம்; அழகான முகம்; புன்முறுவல்; குறுகிய கண்; நல்ல நிறம்; வளைந்த புருவம்; நீண்ட மூக்கு.

குறிகள்: ஆட்டுச் சதையிலும் அதன் கீழும் மச்ச மிருக்கும். பாபிகள் கும்ப லக்னத்திலிருப்பின் ஆட்டுச் சதையருகேயும் எலும்பின் அருகிலும் அடிபடுவதாலும், கொப்பளம் வருவதாலும் தழும்பு.

குணம்: பலருடன் கூடிபழக ஆவல்; சங்கங்களில் முதன்மையாக பொதுப்பணி புரிவது, ஜனங்களின் கஷ்டங் களை உணர்ந்து, எப்பொழுதும் உதவிபுரியும் குணம். இயற்கையைக் கண்டு இன்புறுவது. கள்ளங்கபடமற்றி ருப்பது. பக்ஷாத்தாபத்துடன் தயையைக் காட்டி நன்மை செய்வது. யாரையும் நிமிஷம் இடைபோட்டு, மற்றவர் குணத்தையறிந்து, அவரவர்களுக்கேற்றாற்போல், சாமர்த் தியமாக நடப்பது. நண்பர்களை நன்ருகப் பழகிப் பார்த்தே தேர்ந்தெடுப்பது. எல்லோருடனும் பழகினாலும் உண்மை நண்பர் மிகக் குறைவு.

எதிலும் எச்சரிக்கையுடனும் முன் ஜாக்ரதையுடனும் இருப்பது. நிம்மதியுடன் தொழில் நடத்தி, ஒரு சமயத்தில் ஒரே காரியத்தில் கவனத்தைச் செலுத்தி, திருந்த செவ்வனே செய்வது. நுண்ணறிவு அதிகம். நூதன மாக கண்டுபிடிக்க ஆசை மனதில் மெதுவாக கிரஹித்து கற்றுக்கொள்வார். கற்றதை கசடறவே கற்பார். வெளிக்கு வேஷம் போடுபவர் அல்ல; உண்மையாளர்; குடும்பத்திலும் அதிக பற்றுள்ளவர். குடும்ப கௌரவத் தைக் காப்பாற்றுவதில் ஊக்கமும், ஆர்வமும் அதிகம். சோம்பல் குடிகொண்டாலும், தூண்டுதல் மூலம் ஓர் கார்யம் செயயத் துணிந்துவிட்டால், எதையும் லக்ஷயம் செய்யாமல் பொறுமையுடன் எண்ணத்தை நிறைவேற்றி விடுவார். தமாஷாகப் பேசுவதுமன்றி, உண்மையான தத்துவம் நிறைந்த பேச்சாக இருக்கும்.

ரோகம்: 6ம் வீடு கடகமாகவே, மூச்சுப்பையில் கோளாறு, காசம், ப்ளூரஸி. மலசிக்கல். ரத்தக் குறைவு, மார் படபடப்பு.

ஜீவனம் : பலர்கூடி நடத்தும் லிமிடெட் கம்பெனி யில் உத்யோகம், கோவாபரேடிவ் ஸொஸைடி : நூதன மான தொழில்கள் விஞ்ஞான அபிவிருத்தி இலாகா, Research, டெலிபோன் முதலியன, மின்சாரம் பட்டு, சணல், பஞ்சு, மேலும் மகரராசிக்குச் சொல்லியுள்ள பலன் களையும் அறிந்து, இவைகளில் ஏதாவது, 2, 6, 10-க்குடை யவர்களில் வலுவு பெற்றவர், கும்பநவாம்சம் ஏறின், அதன் மூலம் தனவசதியென அறியவும்.

களத்ரம் : 7–ம் வீடு சிம்மம். ஆகவே, சூர்யனின் குணத்தையும். 7-ம் வீட்டிலுள்ள கிரகங்களின் குணத்தை யும் சேர்த்து ஊஹித்துக் கொள்ளவும்.

## மீன ராசி

வானமண்டலத்தில் 330° முதல் 360 அல்லது 0° வரை. வானமண்டலத்தின் 12-ம் ராசி : பூரட்டாதி 4–ம் பாதம், உத்ரட்டாதி, ரேவதி நக்ஷத்ரங்கள் கொண் டுள்ளன. குருவின் குணநிசயங்களும் மீனராசியின் குணமும ஒத்திருப்பதால் மீனராசியினதிபதி குரு. மீனத்தில் குருவிற்கு வலுவு அதிகம். சுக்ரனுக்கு மீனத் தில் மிக வலுவு ஆனதால், சுக்ரன் இங்கே உச்சம் புதனுக்குப் பலம் இங்கு மிகக் குறைவு. ஆகவே புதன் நீசம்.

சரீரம் : சராசரி உயரத்திற்குச் சற்று குறைவு, பெருத்த சரீரம் உருண்டை முகம் : திரண்டு வருண்ட தோளாப்பட்டை : பெரிய கண் : மந்த பார்வை : நடுவயதில் மேலும் சரீரம் பெருக்கும். மெலிந்த மயிர் அதிகம்.

குறிகள் : கணுக்காலிலும். பாதத்திலும் மச்சம்: பாபிகள் மீனத்திலிருப்பின், அந்த பாபகிரகத்தின் தசா புக்தி காலங்களில் பாதத்தில் காயமோ சிரங்கோ வர, தழும்பு ஏற்படும்.

குணம் : ஈகையும் இரக்கமும், பொது மக்களின் கஷ்டங்களைத் தாளமுடியாமல், ஏதாவது யோஜனை

செய்துகொண்டு, நூதன எண்ணங்கள் உதிக்கவே, பழைய பழக்க வழக்கங்களைவிட்டு விடுவதும், கண்ணைக் கவருவனவற்றில் கருத்தைச் செலுத்துபவரும், இல்லற வாழ்க்கையிலும், இகலோக சுகத்திலும் பற்று அதிகம் உள்ளவரும். உயர்ந்த உணவு உண்பவரும், பாடுபட்டு உழைத்து ஞானம் பெறுபவரும். பலவிதமாக தனம் பெற்று ஏழைகளுக்கு உதவுபவரும், குற்றம் புரிபவரை மன்னிக்கும் பெருந்தன்மையுடையவரும், மமதையில் லாமல் கீழ்ப்பட்டவர்களுடன் கலந்து பழகும் நல்ல நோக்கமும், ஸ்வயநலத்தை பொருட்படுத்தாது, ஓரளவு பொதுநலத்தைக் கருதுபவரும், உண்மை உரைப்பதாலும் தப்பு செய்ய தைரியமில்லாததாலும், நம்பிக்கைக்கு நல்ல பாத்ரமாவர். நன்மை தீமை இரண்டையும் ஆராய்ந்து, தீர்மானம் எடுக்க தாமதித்து கடைசியாக நன்மை புரியவே முயல்வார்.

ரோகம் : 6-ம் வீடு சிம்மமாவதால் ஹ்ருதயத்தில் நோயும், ரத்தக் கொதிப்பும், கண் ரோகமும், மயக்கமும், மார்பு படபடப்பும் இருக்கும்.

ஜீவனம் : 2, 6, 10-க்கு குடையவர்களில் வலுவு பெற்றவர் மீன நவாம்சம் ஏறினால் வெளி தேசத்துடன் வியாபாரம் செய்வது, திரவ சம்பந்தம் முத்து, மீன் இலாகா, எண்ணெய், மதுபானம், நதி கால்வாய் இவை களில் படகு, கப்பல், கல்லூரி, நிதி ஸ்தலம், மந்திரி வக்கீல், புரோகிதர், தங்கம், மஞ்சள் நிறமுள்ள சரக்குகள், கம்பளி, துணி, மந்திரவாதி, மருந்து கொடுக்கும் வைத்யர் (ரண சிகிச்சை அல்ல) இவைபோன்ற தொழில் புரிவர். அடிக்கடி மாற்றல் உள்ள உத்தியோகம்.

களத்ரம் : 7-ம் வீடான கன்னி ராசிக்குச் கூறியவற்றையும் கன்னிராசியில் ஜனன காலத்திலிருந்த கிரகங்களின் குணநிசயங்களையும் சேர்த்து யூகித்துக் கொள்ளவும்.

பூரட்டாதி 4ம் பாதம்,
உத்திரட்டாதி, ரேவதி
உச்சம் : சுக்கிரன்
அதிபதி : குரு
நீசம் : புதன்
நட்பு : சூர்யன், செவ்வாய்
ராகு, கேது
சமம் : சந்திரன், சனி

அசுவதி, பரணி, கிருத்திகை
முதல் பாதம்
உச்சம் : சூர்யன்
அதிபதி . செவ்வாய்
நீசம் : சனி
நட்பு : குரு
சமம் : சந்திரன், புதன்
சுக்ரன்
பகை , ராகு, கேது

அவிட்டம் 3, 4 பாதம், சதயம்
பூரட்டாதி 1,2,3 பாதங்கள்
அதிபதி : சனி
நட்பு, சுக்ரன்
சமம் : சந்திரன், செவ்வாய்
புதன், குரு
பகை : சூர்யன், ராகு,
கேது.

இராசி

உத்தராடம் 2, 3, 4 பாதங்கள்
திருவோணம், அவிட்டம்
1, 2 பாதம்
உச்சம் : செவ்வாய்
அதிபதி: சனி
நீசம் : குரு
நட்பு : சுக்ரன்
சமம் : சந்திரன், புதன்
பகை : சூர்யன், ராகு, கேது

மூலம், பூராடம், உத்ராடம்
1, பாதம்
அதிபதி : குரு
நட்பு : சூர்யன், செவ்வாய்
ராகு, கேது
சமம்: சந்திரன், சுக்ரன்
புதன், சனி

விசாகம் 4ம் பாதம், அனுஷம்
கேட்டை
உச்சம் : ராகு, கேது
அதிபதி : செவ்வாய்
நீசம் : சந்திரன்
நட்பு : சூர்யன், குரு
சமம் : புதன், சுக்ரன்
பகை : சனி

| | |
|---|---|
| கிருத்திகை 2, 3, 4 பாதம், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2, பாதம், <br> உச்சம் : சந்திரன் <br> அதிபதி : சுக்ரன் <br> நீசம் : ராகு கேது <br> நட்பு : புதன், சனி <br> சமம் : செவ்வாய் <br> பகை : சூர்யன், குரு | மிருகசீரிஷம் 3, 4 பாதம், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 பாதம் <br> அதிபதி : புதன் <br> நட்பு : சந்திரன், சுக்ரன் சனி, ராகு, கேது <br> சமம் : சூர்யன் <br> பகை : செவ்வாய், குரு |
| மண்டலம் | புனர்பூசம் 4ம் பாதம், பூசம் ஆயில்யம் : <br> உச்சம் : குரு <br> அதிபதி : சந்திரன் <br> நீசம் : செவ்வாய் <br> நட்பு : சூர்யன் <br> பகை : புதன், சுக்ரன், சனி ராகு, கேது |
| | மகம், பூரம், உத்ரம் 1ம் பாதம் <br> அதிபதி : சூர்யன் <br> நட்பு : சந்திரன், செவ்வாய் புதன் குரு <br> பகை : சுக்ரன், சனி ராகு கேது |
| சித்திரை 3 4 பாதங்கள். சுவாதி, விசாகம் 1, 2, 3 பாதம் <br> உச்சம் : சனி <br> அதிபதி : சுக்ரன் <br> நீசம் : சூர்யன் <br> நட்பு : புதன், ராகு கேது <br> சமம் : சந்திரன், செவ்வாய் <br> பகை : குரு | உத்ரம் 2, 3, 4 பாதங்கள் ஹஸ்தம், சித்திரை 1,2 பாதங்கள் <br> உச்சம் : புதன் <br> அதிபதி : புதன் <br> நீசம் : சுக்ரன் <br> நட்பு : சூர்யன், சந்திரன் சனி, ராகு, கேது <br> பகை : செவ்வாய், குரு |

| | |
|---|---|
| கிருத்திகை | 4ம் பாதம் |
| திருவாதிரை | do |
| ஆயில்யம் | do |
| உத்திரம் | do |
| ஸ்வாதி | do |
| கேட்டை | do |
| உத்ராடம் | do |
| சதயம் | do |
| ரேவதி | do |

| | |
|---|---|
| அசுவதி | 1ம் பாதம் |
| ரோகிணி | do |
| புனர்பூசம் | do |
| மகம் | do |
| ஹஸ்தம் | do |
| விசாகம் | do |
| மூலம் | do |
| திருவோணம் | do |
| பூரட்டாதி | do |

| | |
|---|---|
| கிருத்திகை | 3ம் பாதம் |
| திருவாதிரை | do |
| ஆயில்யம் | do |
| உத்திரம் | do |
| ஸ்வாதி | do |
| கேட்டை | do |
| உத்ராடம் | do |
| சதயம் | do |
| ரேவதி | do |

நவாம்ச

| | |
|---|---|
| கிருத்திகை | 2ம் பாதம் |
| திருவாதிரை | do |
| ஆயில்யம் | do |
| உத்திரம் | do |
| ஸ்வாதி | do |
| கேட்டை | do |
| உததிராடம் | do |
| சதயம் | do |
| ரேவதி | do |

| | |
|---|---|
| கிருத்திகை | 1ம் பாதம் |
| திருவாதிரை | do |
| ஆயில்யம் | do |
| உத்திரம் | do |
| ஸ்வாதி | do |
| கேட்டை | do |
| உத்திராடம் | do |
| சதயம் | do |
| ரேவதி | do |

| | |
|---|---|
| பரணி | 4ம் பாதம் |
| மிருகசீரிஷம் | do |
| பூசம் | do |
| பூரம் | do |
| சித்திரை | do |
| அனுஷம் | do |
| பூராடம் | do |
| அவிட்டம் | do |
| உத்திரட்டாதி | do |

| | |
|---|---|
| அசுவதி | 2ம் பாதம் |
| ரோகினி | do |
| புனர்பூசம் | do |
| மகம் | do |
| ஹஸ்தம் | do |
| விசாகம் | do |
| மூலம் | do |
| திருவோணம் | do |
| பூரட்டாதி | do |

| | |
|---|---|
| அசுவதி | 3ம் பாதம் |
| ரோகினி | do |
| புனர்பூசம் | do |
| மகம் | do |
| ஹஸ்தம் | do |
| விசாகம் | do |
| மூலம் | do |
| திருவோணம் | do |
| பூரட்டாதி | do |

| | |
|---|---|
| அசுவதி | 4ம் பாதம் |
| ரோகிணி | do |
| புனர்பூசம் | do |
| மகம் | do |
| ஹஸ்தம் | do |
| விசாகம் | do |
| மூலம் | do |
| திருவோணம் | do |
| பூரட்டாதி | do |

**மண்டலம்**

| | |
|---|---|
| பரணி | 1ம் பாதம் |
| மிருகசீரிஷம் | do |
| பூசம் | do |
| பூரம் | do |
| சித்திரை | do |
| அனுஷம் | do |
| பூராடம் | do |
| அவிட்டம் | do |
| உத்திரட்டாதி | do |

| | |
|---|---|
| பரணி | 3ம் பாதம் |
| மிருக சீரிஷம் | do |
| பூசம் | do |
| பூரம் | do |
| சித்திரை | do |
| அனுஷம் | do |
| பூராடம் | do |
| அவிட்டம் | do |
| உத்திரட்டாதி | do |

| | |
|---|---|
| பரணி | 2ம் பாதம் |
| மிருகசீரிஷம் | do |
| பூசம் | do |
| பூரம் | do |
| சித்திரை | do |
| அனுஷம் | do |
| பூராடம் | do |
| அவிட்டம் | do |
| உத்திரட்டாதி | do |

ஓர் குறிப்பிட்ட நேரத்திற்கு, ஒரு ஜாதகம் கணிக்கும் பொழுது கிரகங்களின் சாரங்களை பஞ்சாங்கங்களிலிருந்து கிரகங்கள், எந்த நக்ஷத்திரத்தில், எந்த பாதத்தில் குறிப்பிட்ட நேரத்தில் இருக்கிறதென அறிந்து, முன்பக்கங்களில் கொடுக்கப்பட்ட அட்டவணை நவாம்ச மண்டலம் அல்லது நவாம்ச ராசி குறிக்க உதவியாயிருக்கும்.



# கிரகங்கள்

நாம் வசிக்கும் பூமி, ஸூர்யமண்டலங்களடங்கிய ப்ரபஞ்சத்தில் ஒன்று என முன்பே சொன்னேன். உண்மையாக, ஸூர்யன் அசையாமல் இருக்க, ஸூர்யனுக்கு அடுத்தாற்போல், 360 லக்ஷம் மைல் தூரத்தில் புதன் ஸூர்யனைச் சுற்றி வருகிறது. ஸூர்யனிலிருந்து 670 லக்ஷம் மைலுக்கு அப்பால் சுக்ரன், ஸூர்யனைச் சுற்றுகிறது. ஸூர்யனிலிருந்து பூமி 930 லக்ஷம் மைலுக்கப்பால் இருக்கிறது. பூமி தன்னைத்தான் தினம் ஒருமுறை சுற்றிக் கொண்டும், வருடத்திற்கு ஒரு முறை ஸூர்யனையும் சுற்றுகிறது. சந்திரன், பூமியினின்றும் 2,40,000 மைல்களுக்கப்பாலுள்ளது. செவ்வாய் 1420 லக்ஷம் மைல்கள் ஸூர்யனிலிருந்து இருக்க, ஸூர்யனைச்சுற்றி வர 1 வரு 322 நாட்களாகின்றன. ஸூர்யனிலிருந்து குரு 4830 லக்ஷம் மைலுக்கப்பாலும், சனி 8860 லக்ஷம் மைலுக்கப்பாலும் யுரேனஸ் 17820 லக்ஷம் மைலுக்கப்பாலும் நெப்ட்யூன் 27910 லக்ஷம் மைலுக்கப்பாலும், ப்ளூடோ 38,410 லக்ஷம் மைலுக்கப்பாலும் சஞ்சரித்துக் கொண்டே ஸூர்யனைச் சுற்றி வருகிறது.

ஸ்ரீரங்கம் கோயிலில், ஆண்டவன் பள்ளிகொண்டிருப்பதை ஸூர்யன் என நினைத்துக் கொண்டால். அப்பால் ஆண்டவனின் ஆலயத்தில் இருக்கும் ப்ராகாரங்கள் ஏழும், கிரகங்கள் ஸூர்யனைச்சுற்றி வரும் கிரகங்களின் பாதையாகக் கருதலாம். உள்ளிற்குள் இருக்கும் ப்ராகாரத்தை சீக்ரமே சுற்றி விடலாம். அதே போல் புதன், சுக்ரன், பூமி, சந்திரனின் வேகம் ஆகும். அப்பாலுள்ள ப்ராகாரம். சுற்ற நேரமாவது போல், செவ்வாய்; வெளி ப்ராகாரம், வரவர, அதன் சுற்றுப்பாதை பெரிதாகிறதல்லவா. ஆகவே ஒரு முறை சுற்றிவர, குருவிற்கு 11 வரு 315 நாள்

சனிக்கு 29 வருஷம். 167 நாள் விதம் ஆகிறது. இதுதான் உண்மை.

நாமோ பூமியில் இருக்கிறோம். நமக்கு வானமண்டலமும், நக்ஷத்திரங்களும், கிரகங்களும் தோன்றும் விதம் வேறு. நிதானமாகச் சிந்தனை செய்ய வேண்டும். ஒரு பொருள் காட்சி சென்று, அங்கே மின்சார வண்டி; மேலே மூடியில்லாத வண்டி ; ஒரு வட்டமான பாதையில் செல்வதாக எண்ணிக்கொள். இவ்வண்டிக்கு இஞ்சின், கார்டு பெட்டி கிடையாது. இந்த வட்டமான 12 திறந்த பெட்டிகளிலும், ப்ரயாணிகள் வீற்றிருக்கின்றனர். அவர்கள் நிம்மதியாக, அசையாமல் உட்கார்ந்திருக்கிறார்கள். பெட்டியில் நடக்க நடுவிலுள்ள பாதையிலும், சிலர் உட்கார்ந்திருக்கிறார்கள். அப்பொழுது சூர்யன் முக்யமான டிகெட் பரிசோதகர். பக்கத்திலேயே புதனும், சுக்கிரனும், சூர்யனுக்குச் சற்று முன்னும், பின்னும் சேர்ந்து, வேகமாக சோதிக்கின்றனர். செவ்வாய் சீசன் டிக்கெட்டை எடுக்கச் சொல்லி: சீசன் டிக்கெட் எடுப்பதைப்பார்த்துக்கொண்டே சற்று மெதுவாக நகர்கிறது. அப்பால் குரு ஸீஸன் டிகெட்டை பிரித்துப் பார்த்துக்கொண்டே போக மேலும் தாமதம், சனி, சீசன் டிக்கெட் கையெழுத்துப் போலேயே அதை வைத்திருப்பவருக்கும் இருக்கிறதா என சோதித்து கொண்டு மேலும் அதிகமாக தாமதித்து, எல்லாம் நடுப் பாதையிலேயே, 12 வண்டிகளையும் சோதித்துக்கொண்டேயிருக்கின்றனர். சந்திரன், மிக வேகமாக யாவரும் ஒழுங்காய் வேலை செய்கின்றனரா என்று சோதிப்பதுபோல் வேகமாய் செல்லும். சூர்யன், ஒரு பெட்டியிலிருந்து மற்றொரு பெட்டி தாண்டுவதற்குள் சந்திரன் 12 பெட்டிகளிலும் சோதனை செய்து விடுகிறதென எண்ணிப்பார்க்கவும். எப்படி 12 வண்டிகளும் வட்டப் பாதையில் சுற்றுகிறதாகப் புலன்படுகிறதோ, அவ்விதமே வான மண்டலம் நகர்ந்துகொண்டேயிருப்பதுபோல் தோன்றுகிறது. ப்ரயாணிகள் அசையாது உட்கார்ந்திருப்பதுபோல் வானத்தில் ஸ்திரமாகயிருப்பது நக்ஷத்திர கூட்டம். பெட்டியில் நடுவில் நடக்கயிருக்கும் பாதை போன்றது. வான மண்டலம் (ZODIAC). அந்த நடுப் பாதையில் நடக்கும்

டிகெட் பரிசோதகர்கள் போன்றவைகளே இந்த கிரகங்கள்.

கிரகங்களின் குணாதிசயங்களை முதலில் நன்ருக அறிந்துகொள்ள வேண்டும். ஒரு கிரகத்தின்மூலம் நாம் என்ன பலனை தெரிந்துகொள்ள முடியும் என்பதை ஒவ்வொன்ருக எடுத்து உரைக்கிறேன். நூதனமாக கண்டு பிடிக்கப்பட்டுள்ள யுரேனஸ், நெப்ட்யூன், ப்ளூடோ. அப்பால் சாயாக்ரகங்களான ராகு, கேது, மேலும் அத்ருஷ்ட குறி இவைகளைப்பற்றியும் சொல்கிறேன். இயற்கையில் குரு, சுக்ரன், பூர்ண சந்திரன், வளர்பிறை சந்திரன் வேறு கிரகத்துடன் (பாப) சேராத புதன் சுபராவர். சூர்யன், தேய்பிறை சந்திரன், செவ்வாய், சனி, ராகு, கேது, மேற்கூறிய பாபக்ரகத்துடன்கூடிய புதன் பாபி எனப்படும்.

## சூர்யன்

பூமி அடங்கிய ப்ரபஞ்சத்தில், சூர்யனே ப்ரதானம்; முதன்மையானது; மத்தியில் அசைவற்று இருப்பது.

மறு பெயர்: ஆதித்யன்; அரக்கன்; ரவி; பாநு பாஸ்கரன், திவாகரன், மார்த்தாண்டன், ஸவிதன் தீக்ஷணம் இன சுடர் கதிரவன் ஹலி ஆங்கிலம் "ஸன்" (SUN)

சரீரம்: நல்ல வளர்ச்சியும் மாநிற சரீரத்தையும் பெரிய கண்களையும் தெளிந்த வாக்கையும் பெரிய தலையையும் அளிக்கும்.

குணம்: எக்கார்யத்தையும் சொன்னபடியே, குறித்த காலத்தில் நியாயமாக செய்ய வல்லது. எதிலும் லக்ஷயத்துடனும், ஸ்திரத்தையுடனும் அதிகாரம்படைய வேண்டுமெனும் ஆர்வத்துடனும் நிரந்தரமாகயிருக்க வேண்டுமென்கிற நோக்கத்துடனும் அதிகாரம் பதவிபெற ஆவலுடனும் பாடுபடும் தன்மை. சூடு அதிகம், தைர்யத்தையும் நிதானமாக பணிபுரிவதையும் குறிக்கிறது. பெருந்தன்மை மன்னிக்கும் தாராள புத்தி உயிரையும் கொடுத்து கர்ப்பாற்றும் சுவபாவமிருக்கும், சத்வகுணம், சூர்யன்

கெட்ட சூடேறினல் படாடோபம், வீண் பேச்சு கர்வம் அதட்டி உருட்டி மிரட்டி வேலே வாங்குவது போன்றும் தானே தனக்கு கெடுதியை வரவழைத்துக்கொள்பவனு மாகும்.

ரோகம்: நோயை சூர்யன் கொடுக்கவேண்டிவரின். ஹிருதயத்தில் படபடப்பு ரத்த கொதிப்பு ரத்தக் குழாயில் கோளாறு, பார்வையில் குற்றம் சரீரத்தில் வலு குறைவு. மயக்கம் பித்தம் போன்ற நோய்கள்,

ஜீவனம்: நம்பிக்கையுள்ள உத்யோகம் நிரந்தரமான தொழில் பல்லாண்டுகளாக உள்ள, அல்லது பல்லாண்டு கள் நீடிக்கும்படியான ஸ்தலத்தில் கம்பெனியில் அரசாங் கத்தில் பயமற்ற உத்யோகம். பிதாவின் தனத்தால் சுக ஜீவனம் அல்லது அதை முதலாக வைத்து கீழ்கண்ட வற்றில் ஏதாவது வியாபாரம். சிவப்பு ஆரஞ்சு கனகாம் பரம் நிறமுள்ள பண்டங்கள் செம்பு தங்கம் கோதுமை மருந்து முதலியன. சூர்யனுடன் புதன் சந்திரன் கூடினல் சிகப்பு துணி சுக்ரன் சேரின் பெயிண்ட் செவ்வாயுடன் கூடின் செங்கல் சுக்ரன் செவ்வாய்கூடின் சிவப்பு பூ புஷ்பிக்கும் முள்செடிகள் தோப்பு சனிகூடின் கம்பளி வியாபாரம் சந்திரன் செவ்வாய்கூடின் கரி சுக்ரன் குரு சேரின் மஞ்சள் ராகு சேரின் விஷம பாம்பு மூலமும் தன விருத்தியுண்டு. சூர்யனும் சுக்ரனும் சிம்மம் ரிஷபம் ஏற தேயிலே காபி தோட்டம். விருச்சிக சம்பந்தம்பெற்று புதன் குருவுடன்கூடின், உள்ளுக்குச் சாப்பிடும் மருந்தைக் கொடுக்கும் வைத்யம். செவ்வாயின் சம்பந்தம்வரின் ரண சிகிச்சை செய்வார். சுக்ரன்சேரின் ப்ரசவம் அல்லது கெட்டுப் போனதால் வரும் கெட்ட நோய் இவற்றை கவனிப்பார். செவ்வாய் சுக்ரன் புதன் சூர்யன் விருச்சிக சம்பந்தம்பெறின் தோல் வியாதியை தீர்க்கும் வைத்யர் சூர்யன் சுக்ரன் ரிஷப விருச்சிக சம்பந்தம் பெற்ருல் கண் வைத்தியர். சூர்யனும் புதனும் 3, 5, 9, 11ம் வீட்டு சம்பந் தம் பெற்று, அவ்வீடுகளில் ஒன்று விருச்சிகமானல் காது, மூக்குத் தொண்டை வைத்யம். ராகு சுக்ரன்கூடி 9ம் வீடுசம்பந்தம் வரினும், யுரேனஸ் சம்பந்தம் பெறினும் எக்ஸ்-ரே. யுரேனஸ்மாத்ரம் சூர்ய புதனுடன்கூடி வலு

வடையின் சாஸ்திர ஆராய்ச்சி சூர்யன் குரு கன்னி சம்பம் தம்பெறின், சுகாதாரம் செவ்வாய் கன்னி சம்பந்தம்பெற புதனுக்கு விருச்சிக சம்பந்தம்வரின் மெடிகல் என அறியவும். சூர்யன் குரு நீதி ஸ்தலம். புதன் வலுவடையின் ஸிவில். செவ்வாய் வலுவுபெறின் கிரிமினல், அவ்விதம் ஊஹித்தறியவும்.

காரகம் : சூர்யனைக்கொண்டு உத்யோகம் மாறுதல் ஏற்பட்டால், எந்த திக்கிற்கு மாறுமென அறிய வேண்டுமாயின், தானிருக்குமிடத்திற்கு கிழக்கே என்று கொள்ளவும். சூர்யனின் திக்கு கிழக்கு.

காலம் : அக்னி ஆத்மா சத்வகுணம் பழுப்பு நிறம் செம்பு தங்கம் பிதா ஜீவனம் இவைகளைக் குறிக்கும்.

பலம் : உத்தராயணத்திலும், தனது வீடான சிம்மத்திலும், உச்சவீடான மேஷத்திலும், தனது கிழமையான ஆதி வாரத்திலும் நண்பர் இல்லத்திலும் ஒரு ராசியின் ஆரம்பத்திலும வலுவு அதிகம். கிரகண காலத்திலும் ராசியின் முடிவிலும் சத்ரு க்ஷேத்ரத்திலும் நீசமான துலாத்திலும் பலம் குறைவு சூர்யனுக்கு வக்ரம் கிடையாது.

சூர்யன் அளிக்கும் பலன்களை, சூர்யன் உச்சமாயிருக்கும் காலமான சித்ரையிலாவது சொந்த வீடான சிம்மத்திலிருக்கும் காலமான ஆவணி மாதத்திலாவது சூர்யனின் நக்ஷத்திரங்களான கிருத்திகை உத்ரம் உத்ராடம் இவைகளில் சஞ்சரிக்கும் பொழுதாவது எதிர்பார்க்கலாம். தசானுதன் கிருத்திகை உத்ரம் உத்ராடத்தில் சஞ்சரிக்கும் பொழுது சூர்யன் பலனும் நடைபெறும். சிம்மலக்னத்தில் ஏற்படுமெனவும் குறிக்கலாம்.

## சந்திரன்

மறுபெயர்கள் : சசி, சசங்க, விது, ஸோமன், நிஸாகரன், சீதாம்சு, உடுநாதன், இந்து, சீதரஸ்மி, மதி, ஆங்கிலம், மூன். (Moon)

சரீரம் : சந்திரனுக்கும் லக்னத்திற்கும் சம்பந்தம் ஏற்பட்டு, சந்திரன் வலுவு பெற்ருல், உருண்டை முகம்,

பெருத்த சரீரம், குளிர்ந்த பண்டங்களை அருந்துவதில் ஆசை, அதிக உயரம் வளராமல், திடசரீரம், நாளடைவில் பெருக்கும்.

குணம்: சந்திரன் இயற்கையில் தைர்யம் குறைவானது. அது ஜனன காலத்தில் எந்த நக்ஷத்ரத்தில் இருந்ததோ, அந்த நக்ஷத்ராதிபதியின் குணமும், இருந்த ராசியின் குணமும் சேர்ந்து அளிக்கும பலன். பொதுவாக சந்திரன சுபர் சம்பந்தம் பெற்றாலும், சுபருடன் கூடினாலும், சுபரால் பார்க்கப்பட்டாலும், நிம்மதியுண்டு. சமயோஜிதம் போல் நடக்கும் தன்மை: சந்திரனே ஜலக்ரஹம், எப்படி ஜலத்தை எந்த பாத்திரத்தில் வைத்தாலும், அந்த பாத்திரத்தின் உருவை அடைகிறதோ, அவ்விதமே சமயம், சந்தர்ப்பம் இவைகளையொட்டி, நடக்க மனம்மாறும். தீர்மானமான எண்ணமோ, கடினமான சித்தமோயிருக்காது. செவ்வாயுடன் கூடினாலும், செவ்வாயால் பார்க்கப்பட்டாலும், செவ்வாய் வீட்டிலிருப்பினும், தைர்யமுண்டு. குருவுடன் கூடின் நல்ல எண்ணம். இதர கிரகங்கள் தைர்யத்தைக் கொடார். சந்திரனைப் பெண் கிரகம் என்பதால், பெண்களிடம் காணும், நாணம், மடம், அச்சம்; பயிர்ப்பு என்கிற சாத்வீக குணம் அளிக்கும். அன்பு அதிகம். கஷ்டத்தை பொறுக்கமுடியாது.

ரோகம்: நரம்பு, நீர் சம்பந்தம்: மாதவிடாய்; ரத்தம் நீர்த்துவிடுவது. மயக்கம், வலிப்பு, வைட்டமின், பிட் குறைவால், பெரிபெரி, வயிறு உப்புவது, பாண்டு ரோகம், பேதி வாந்தி முத்திரப்பை கோளாறு தூக்கம் வராது. இரவெல்லாம் யோஜனை சொப்பனம் யானைக்கால் தோளில் வலி ப்ளூரஸி: போனற நோய்.

ஜீவனம்: 2, 6, 10ம் வீட்டின் ஆதிபத்யம் இருந்தாலும் அல்லது லக்னத்திற்கு 2,6, 10ம் வீடுகளில் சந்திரன் இருந்தாலும் சந்திரனுடன் சேர்ந்தாலும் சந்திரனின் வீடான கடகத்தில் 2, 6, 10க்குடையவர்கள் நவாம்சத்திலிருந்தாலும் கீழ்க்கண்டபடி தொழிலை தீர்மானிக்கவும். சந்திரன் ஜலராசி தண்ணீர் சப்ளை; படகு கப்பல்: மாலுமி: மீன்: செம்படவன்: திரவம்: வ்யாபாரம் முன்னேற பலரிடம் சென்று பண்டத்தின் குணத்தை விவரமாகக் கூறி

விற்பது மருத்துவச்சி நர்ஸ் முதலியன. செவ்வாய் புத
சந்திரன் கூடின் நீர் நிலையம் சூர்யன் சந்திரன் புதன்சேரின்
சுகாதார இன்ஜினியர் செவ்வாயும் கூடினல் படகோட்டி;
மாலுமி; தண்ணீர்; போர்; படை; சனி சேரின் முத்து
சிப்பி; சோழி; சங்கு வ்யாபாரம்; சுக்ரனின் சம்பந்தம் பெறின்
மீன் வ்யாபாரம் சூர்யன் செவ்வாய் கூடி விருச்சிக சம்பந்தம்
பெறின் Tonic மருந்து வ்யாபாரம் பானம் தயாரித்தல்
ஸோடா; கலர் சனியும் சுக்ரனும் சந்திரனும் சம்பந்தமடைந்
தால் எண்ணெ மிஷின் தயாரிக்கும் இடம்; சந்திரனும் புத
னும் மாத்திரம் கூடினல் நூல் பருத்தி பஞ்சு இலாகா சூர்ய
சந்திரன் சுக்ரன் சேரின் மருத்துவச்சி; கன்னி சம்பந்தம்
பெறின் நர்ஸ்; குரு புதன் சந்திரன் சேரின் விடுகதை
எழுதுபவர். கணக்கை பரிசோதிப்பவர் கணக்கை சோதிக்
கும் இலாகா சுக்ரனுடன் மாத்திரம் சேரின் வாசனே
எண்ணெ; கண்ணுடி பால், செவ்வாயும் கூடின் ஸோப்
வாஸனே பௌடர்; பால் பவுடர், கோகோ, ஓவல்டின்; ஐஸ்
க்ரீம், மதுபானம், கேதுவும் சேரின் விஷ மருந்துகள் தெரு
வில் வ்யாபாரம் செய்பவருக்குச் சந்திரன் வலுவு அதிகம்.

காரகம்: சந்திரனேக்கொண்டு, மனேவி கிடைக்கும் திக்கையறியவோ உத்யோக மாறுதல் ஏற்பட்டால் மாறிச் செல்ல வேண்டிய திக்கை அறிய வேண்டின் வடமேற்கு என அறியவும். மனம், வெண்மை, வருணன், சத்துவகுணம் வெள்ளி, மாதா இவைகளேயும் சந்திரன் குறிக்கும்.

பலம்: (சந்திரனளிக்கும் பலனே சந்திரன் உச்சமாயிருக்கும் ரிஷப ராசியில் தசாநாதன் சஞ்சரிக்கும் பொழுதும் சந்திரனின் சொந்த வீடான கடகத்தில் சஞ்சரிக்கும் பொழுதும் ரோஹிணி ஹஸ்தம் திருவோணம் எனப்படும் சந்திரனின் 3 நக்ஷத்திரங்களில் சஞ்சரிக்கும் காலத்தும் திங்கட்கிழமையிலும் கடக லக்னத்திலும் எதிர்பார்க்கலாம்.)

காலம்: சந்திரன் ரிஷப ராசியிலும், ஸெலஷ்டியல் மத்ய ரேகைக்கு தெற்கில் சஞ்சரிக்கும் பொழுதும், ஸொந்த வீடான கடகத்திலும், ஆண் ராசிகளின் முற்பகுதியிலும், இரவிலும், தன்னுடைய நவாம்சத்திலும், வளர் பிறையில்

ஏகாதசி முதல், இறங்கு பிறையில் பௌர்ணமி முதல் 5 தினங்களும், கிரகங்களுக்கு வடக்கில் இருக்கும்பொழுதும், சுபரின் சேர்க்கை, பார்வை யிருப்பினும் ராசியின் கடைசி யிலும், எந்த ராசியானாலும், அதாவது 12 ராசிகளிலும் பூர்ண சந்திரனாக யிருக்கும்பொழுதும், சந்திரனின் வலுவு அதிகம். சந்திரனுக்கு வக்ர கதி கிடையாது. பெண்கிரகம்.

## செவ்வாய்

மறு பெயர்கள் : ஆரன், வக்ர, மஹீஜ, ருதிர, ரக்த, அங்காரக, க்ரூரத்ருக், மங்களன், குஜன், அவநேயன், ஆங்கிலம், மார்ஸ். (MARS)

சரீரம் : செவ்வாய்க்கும் லக்னத்திற்கும் சம்பந்தம் உண்டாகுமாயின், ஒருவர் மத்திய உயரம், திட சரீரம், உஷ்ண தேகம், பெருத்த எலும்பு, ஊழைச் சதையிராது, எலும்பும் தெரியாது, வலுவு அதிகம், உருண்டை முகம், நல்ல நிறம், சுருண்ட மயிர், கூர்மையான மயிலின் கண்கள் போன்றிருக்கும். தேகப் பயிற்சியால் வலுவடைந்த உடம்பு போன்று தோன்றும்.

குணம் : அதி தைர்யம். எல்லாம் கற்றுணர ஆவல். தாராள எண்ணம், திடீரென அதிகச் செலவு, தன்னால் எக் கார்யமும் செய்யக்கூடு மென்கிற திட நம்பிக்கை. யாவரை யும் அடக்கியாளும் சக்தி. அடங்கி நடக்க மனம் வராது. ஒருவர் புத்திமதியையும் நாடமாட்டார். திடீரென கோபம். அடி, உதை, குத்து என்றால் முன்நின்று சண்டையிட அஞ்சாத நெஞ்சம். தனக்கு இடையூறு இழைத்தவரை, நசுக்கி விடுவது. பாப சம்பந்தம் பெறின் அகங்காரம், மமதை, திமிர், திருடு, கொலைகூட செய்ய அஞ்சமாட்டார். அவருடன் சேரின், முன்னேற்றம், செல்வாக்கு. பௌருஷம் எதிலும் தலைமை தாங்குவது. தாமஸ குணம். சீக்கிரமே செய்யவேண்டு மென்கிற விருப்பம் சக்தியுமுண்டு.

ரோகம் : அதிக உஷ்ணத்துடன் கூடிய ஜ்வரம், அம்மை, ப்ளேக், மலேரியா, கொப்பளம், தலைவலி, மஞ்சக் காமாலை, மூத்திரப் பையில் கல், மர்ம ஸ்தானத்தின் வெளி

யில் புண்; வெட்டு; காயம்; அடிபடுவது; ஆயுதங்களினல் வெட்டுபடுதல்; குண்டு; ரத்தபேதி; சீதபேதி; மூலம்; மாத விடாய்; பாண்டு; காலா அசார்.

ஜீவனம் : ராணுவம்; போலீஸ்; பூமி; விவசாயம்; தனிப் பட்ட முறையில் வ்யாபாரம்; உத்தியோகத்திலிருப்பின், செவ்வாயின் புக்தியில் அதிகாரத்தை யளிக்கும் அல்லது செவ்வாய் தசையில் சனி அல்லது கேது புக்தி களில் வேலையை விட்டுவிட்டு சுதந்திரமாக சம்பாதிக்க தொழில் புரிவர். வ்யாபாரம் கட்டிடம் கட்டும் இன்ஜி னியருக்கும்; ப்ரெஸ்; பேபர்; மெகானிகல் இன்ஜினியருக் கும்; செவ்வாய்க்குப் புதன் சம்பந்தமிருக்க வேண்டும். செவ்வாயும் குருவுமானல், கிரிமினல் வக்கீல் நீதிபதி செவ்வாய்க்கு விருச்சிகம் அல்லது எட்டாம் வீடு சம்பந்த மும் 10க்குடையவர் சம்பந்தமும்வரின் அக்னி இன்ஸ் யூரன்ஸ் செவ்வாயும் சுக்ரனும் கூடின் சங்கீதம் தோல் வியாபாரம் ப்ரஸவ மருந்து படை போன்ற தோல் சம்பந்த நோய்க்கு மருந்து வ்யாபாரம் செவ்வாயும் சனியும் கூடின்; தொழிற்சாலை இரும்பு செம்பு ஈயம் இவைகளினின்றும் சமான்கள் தயாரிக்கும் யந்திரசாலை சுரங்கம் ஓர்ஸ் கெமிஸ்ட் ரண சிகிச்சை ரோம சிங்கார நிலையம் ஆடு மாடு கொலை புரியும் விடுதி முதலிய இடங்களில் தொழில். பலர் போட்டியிட்டு பரிக்ஷை தேறி நல்ல பதவி பெற செவ்வாய் வலுவு வேண்டும். ரக்த நிறம் பவழ நிறம் ரக்த நிற துணி. செவ்வாய் சந்திரன் புதன் சம்பந்தம், ரக்த புஷ்பம் செவ் வாய் சுக்ரன் : ரத்த நிற பெயிண்ட் செவ்வாய் சுக்ர சந்திர சம்பந்தம். சனியும் கூடின பெட்ரோல், நிலையத்தில் உயர்ந்த பதவி. துவரை கந்தக அமிலம் நைட்ரிக் அமிலம் க்ளோரின் முதலியன. பூமி வீடு இவைகளை வாங்கி விற்பது. அடங்கி நடக்க மனம் வராது. ஸ்பெகுலேஷனில் ஈடுபட் டால் கொடுத்தாலும் கெடுத்தாலும் அதிகமாகவே பல னிருக்கும.

காரகம் : செவ்வாயின் காலங்களில் இடப்பெயர்ச்சி வரினும் மனைவியோ கணவனே கிடைக்கும் திக்கை செவ்வாயைக் கொண்டு கண்டுபிடிக்க வேண்டிவரின் தானிருக்கும் ஸ்தலத்திற்கு 'தெற்கே' என்றறியவும்.

ப்ராதா பூமி சிவப்பு தேகபலம் சேனாதிபதித்யம் தாமஸ குணம் செம்பு இரும்பு லங்கை முதல் கிருஷ்ணா வரை செவ்வாயின் ஆதிக்யம். ஆண் கிரகம்.

பலம் : வக்ர கதியிலும் ஓர் ராசியில் சேர்ந்திருக்கும் கிரகங்களுக்கு வடக்கே யிருந்தாலும் மகர கும்ப மீன மேஷ விருச்சிகங்களிலும் இரும்பு இரவிலும் வானமண்டல மத்ய ரேகைக்கு தெற்கே செல்லும் பொழுதும் 10-ம் வீட்டிலும் ஓர் ராசியின் ஆரம்பத்திலும் வலுவு அதிகம்.

காலம் : செவ்வாய் கொடுக்க வேண்டிய பலனை சித்திரை கார்த்திகை தை மாதங்களிலும் கிரகங்கள் செவ்வாயின் நக்ஷத்திரமான மிருகசிரிஷம், சித்திரை, அவிட்டத்தில் சஞ்சரிக்கும்பொழுதும், செவ்வாய்க் கிழமை களிலும் மேஷ விருச்சிக லக்னங்கள் நடக்கும்பொழுதும் கொடுக்கும். செவ்வாய்க்கு நேர்கதி வக்ரகதி இரண்டு முண்டு. சூர்ய சந்திரனுக்கே வக்ரகதி கிடையாது.

## புதன்

மறுபெயர்கள் : வித், ஞா, ஸோமஜ, போதன, குமார, விதுஸூத, இந்துபுத்ர, ஹேமஞ, ஆங்கிலம் மர்குரி. (MERCURY)

சரீரம் : புதனுக்கும் லக்னத்திற்கும் சம்பந்தம் ஏற் பட்டு, புதனே வலுவடையின் மெலிந்த உடலும், நீண்ட முகமும் நீண்ட கை, கால்களும் மெல்லிய கூர்மையான மூக்கும் மெலிந்த உதடும் முகத்தில் கொஞ்ச மயிரும் கருத்த குழியும் அகண்ட நெற்றியும் சிறிய காலும் வேக மான நடையுமிருக்கும்.

குணம் : நுண்ணறிவும், சமயத்திற்கேற்ப நடக்கும் சாமர்த்யமும் முகமறிந்து நடக்கும் திறமையும், யாவற்றை யும் லகுவில் அறிந்துகொள்ளும் அறிவும், ஒரு ப்ரச்னையில் நன்மை தீமை இரண்டையுமாராய்ந்து, தீர்மானம் எடுக்க தாமதித்து, கடைசியாக மிகவும் உசிதமானவற்றைச் செய்யும் மனப்பானமையும், தமாஷ் பேச்சும், பல பாஷை பயிலும் பகயமும், கணக்கு இஞ்ஜினியரிங், சித்ரம் வரை தல், நடனம் எவற்றையும் தீர கற்றுக்கொள்வது, மின்சா

ரம், சப்தம் இவற்றில் தேர்ச்சியுமிருக்கும். புத்திமதி கூறு வதில் புத்திசாலி, வியாபாரம் செய்வதில் நிபுணர். பேச கற்றுக்கொடுக்க வேண்டாம். எழுதினாலும் விநோதம், நவீனம். சாப்பாடு விஷயங்களில் ஒவ்வொன்றின் குணாதி சயங்களை ஆராய்ந்து உட்கொள்வது. எதற்கெடுத்தாலும் மருந்தை விருந்தாக சாப்பிடுவது. உயிர் வெல்லம். ஆனால் இவர்களுக்குத்தான் அடிக்கடி, சிறு ரணங்களோ சிறு ஆபத்தோ வருகிறது.

ரோகம்: மூளைக்கோளாறு. திக்கல்; ஊமை; நியாபகக் குறைவு, தானே வியாதியிருப்பதுபோல் த்யானித்து மன வேதனை. வறட்டு இருமல், கால்களில் பித்தவெடிப்பு, நரம்பு தளர்ச்சி, காதுமந்தம், வலிப்பு, கக்குவாய், இருமல் மயக்கம்,

ஜீவனம்: பள்ளிக்கூடம், படிப்பு, அப்யாசம், ட்ரெய்னிங், ப்ரொபேஷன், எழுத்தாளர் கணக்குப்பிள்ளை அகவுண்ட்ஸ் டிபார்மென்ட், இஞ்ஜினியர், ரேடியோ கம்பியில்லா தந்தி, தந்தி, போஸ்டல் கடிதம்; டைப்; அச்சகம் பேபர்; துணி; கம்பி; தூதன்; ப்ரதிநிதி; ஸெகரடெரி ஏஜென்ட் குமாஸ்தா தமிழ் உபாத்யாயர்; ஜோதிடர்; பச்சை சாமான் களை விற்பது, வெளிநாட்டு சாமானை வரவழைத்து, பிரதி நிதியாகயிருந்து வியாபாரம் செய்வது, போக்கு வரத்து, ஏற்றுமதி இறக்குமதி. நூல், பஞ்சு, பருத்தி, பாதரஸம், வெள்ளியம்; கண்ணாடிக்கு வெள்ளி பூசுவது, சமாசாரங்களை அழகாகக் கோர்த்து வாதாடி வெற்றிபெறச் செய்யும் திறமை வாய்ந்த வக்கில்கள், குறுக்கு கேள்விகளில் மடக்கி, உண்மையை வரவழைக்கும் சாமர்த்யமுள்ள நிபுணர். கமிஷனர்; அம்பாசடர்; முதலிய புதன் நல்ல சுபனாயின் உண்டு. அசுபனாயின், போக்கிரி, திருடன், பொய் கையெழுத்து (சனியுடன்கூடி, துர்ஸ்தானமேறி னால்) சிறைவாசம். திடீரென பையிலிருந்து பண்டத்தைத் திருடி, நிமிஷத்தில் மறைபவன். சாமர்த்யசாலி. இதர கிரகங்களுடன்கூடின் எவ்வித தொழில் என்பதை, கிரக சேர்க்கையும், பார்வையும் என்கிற தலைப்பின்கீழ் சுருக்க மாகச் சொல்லப்படும்.

காரகம்: வாக்கு, முதல் ராஜகுமாரன், பச்சை விஷ்ணு; வடக்கு; ராஜஸம், வெள்ளியம் விந்திய பர்வதம் முதல் கங்கைவரையுள்ள ப்ரதேசங்களை புதன் குறிக்கிறது. புதனின் வலுவையும், சுப அசுப சேர்க்கை; பார்வையையும் கொண்டு பலனறியவும். 'விஷ்ணு' என்று எழுதியிருப்ப தின் அர்த்தம் என்னவெனில், ஒருவர் எந்த பகுதி சேர்ந்தவரெனினும், வைஷ்ணவம் என அறியலாம். புதன் அசுபனுகயிருக்கிறதே, தோஷம் வராமலிருக்கக் கஷ்டப் படாமலிருக்க 'மஹாவிஷ்ணு'வை நம்பி வணங்கிவரின், வணங்க ஆரம்பித்தது முதல் நிம்மதியுண்டாகி, மனே தைர்யமேற்படும்.

பலம்: அஸ்தமமான பின், எப்பொழுது உதயமா கிறதோ, அப்பொழுது பலம் அதிகம். தனுசு மிதுன கன்னி ராசிகளிலும், புதன்கிழமையிலும், இரவு பகல் இரு வேளைகளிலும், அஸ்தமனமில்லாமல் வக்ரமாகயிருக்கும் பொழுதும், ராசிகளின் மத்திய பாகத்திலும் வலுவு அதிகம்.

காலம்: புதனுடைய தசை, புக்தி நடைபெறும் பொழுது, புதனல் கொடுக்கப்படும் நன்மைகளை சுபர்களும் புதனும் ஆனி, புரட்டாசி மாதங்களிலும், மிதுன கன்னி யில் சஞ்சரிக்கும்பொழுதும், மிதுன கன்னிராசி தினங்களி லும், சுபர்கள் ஆயில்யம்கேட்டை ரேவதி நக்ஷத்திரங்களில் சஞ்சரிக்குபொழுதும், மிதுன கன்னி லக்னங்கள் நடை பெறும்பொழுதும் எதிர்பார்க்கலாம். அசுப பலன் நடை பெற வேண்டுமாயின், அசுபர் மேற்கூறியபடி சஞ்சரிக்கும் காலத்தில் எதிர்பார்க்கவும்.

புதனுக்கு நேர்கதியும் வக்ர கதியுமுண்டு.

## குரு

மறுபெயர்கள்: ஜீவன், ஆங்கிரஸ, சுரகுரு, மந்திரி, வாசஸ்பதி, ஆர்ய, ப்ரஹஸ்பதி, ஸூரி, வாகிசன், தேவகுரு வசஸாம்பதி, இஜ்ய, வியாழன், ஆங்கிலம். (JUPITER)

சரீரம் : நிமிர்ந்த சரீரம், கூனல் அல்ல; உயரம் திடசரீரம், நீண்ட பெருத்த கால்கள். ஓரளவு நீண்ட முகமே. நல்ல நிறம். அகண்ட நெற்றி, மிருதுவான மயிர், அதிக தாடியிருககலாம். இவ்விதமாக சரீரத்தைப்பற்றி கூறும்பொழுதெல்லாம், ஒருவர் வளர்த்தி எவ்வளவு இருக்குமென்றால், நடு வயதில் தோற்றமெப்படி யிருக்கு மென்றும் அறியவும். குழந்தையாக இருக்கும் காலத்திற் கும், வயது முதிர்ந்த பின்பும் இருக்குமென கருதலாகாது அதிக தாடி என்றால், நடு வயதில் ஆண்களுக்கு அதிக மாய வளருமென பொருள் கொள்ளவும்.

குணம் : நீதி தவறாது, தமது இல்லத்திற்கேற்ப தர்மத்தை அனுஷ்டித்து ப்ரியத்துடனும், பெருந்தன்மை யுடனும் தன் கடமையைச் செய்ய வல்லவர். கபடமற்றவர். உள்ளொன்று வைத்து புறம்பொன்று பேசமாட்டார். அல்ப புத்தியிருக்காது. தானம், தர்மம் செய்பவர். செய் நன்றி மறவாதவர். தீங்கிழைப்போரையும் மன்னிக்கும் நற்குணம் வாய்ந்தவர். மேன்மேல் விருத்தியாகுமெனும் உற்சாகமும், விருத்தி செய்ய வேண்டுமென்கிற ஆர்வமும், விருத்தியாகும்படியான கைராசியுமுள்ளவர். நிதியும், மதியும் நற்கதியும் நிம்மதியுமுள்ளவர். இவ்விதம், யார் ஜாதகத்தில் குரு லக்னாதிபதியாகி வலுத்திருக்கிறாரோ, அல்லது வலுத்து லக்னத்தைப் பார்க்கிறாரோ அவர்க ளிடம் எதிர்பார்க்கலாம்.

ரோகம்: ஆறும் வீட்டினதிபதியாகி ரோகம் கொடுக்க நேரின், ரத்தம் கெடும். ஈரலும் கெடும். கட்டி விழலாம். மஞ்சக் காமாலை, கெட்ட நீரால் உடம்பு ஊதுவது, பல்லீர லில் வீக்கம், அதிக அன்னம் உட்கொள்ள, ஜீரண சக்தி குறைந்து வாயுவால் வயிறு உப்புவது, ஜலம் கழிப்பதில் சர்க்கரையும் கலந்து கழிப்பது, நீரிழிவு, படை, கான்ஸர், ப்ளூரஸி, பல்மனரி அபாப்ளக்ஸி, ஹ்ருதய துடிப்பு, வயிற்றில் வாயு முதலியவற்றில் குரு எந்த ராசியில் இருக் கிறார் என்பதையும் சேர்த்து ஊஹித்தறியவும்.

ஜீவனம் : நீதி, வக்கில், கோர்ட், ஜட்ஜ், புரோஹிதர், ஆலயம், மதம், நிதிஸ்தலம், நிதிஇலாகா, பாங்க், ப்ரசவ

ஆஸ்பத்திரி, எழுத்தாளர், கணக்கு, வேதம், மதப்பிரசாரம் சாஸ்திரம், எகனுமிக்ஸ், வேதாந்தம், தானம், சத்திரம், முதலிய இடங்களில் தொழில்; மந்திரி, முனிசிபாலிடி முதலியவற்றிற்கு கொன்சிலர், உள்ளுக்குச் சாப்பிடும் மருந்து கொடுக்கும் வைத்யர். தீர்க்க யோசனை சொல்பவர் இலக்கண வித்வான். மஞ்சள் நிறம், பொன் நிறம், விலையுயர்ந்த பண்டங்கள், தித்திப்பான பண்டங்கள், சாமரம், உப்பு, மெழுகு, எருது, குதிரை, யானை, கழுகு, புறு, கம்பளி நகை, வியாபாரி சூர்யன் செவ்வாய் புதன் குரு கூடின் ஆடிட்டர், வருமானவரி இலாகா, வியாபார வரி, சுக்ரன் சம்பந்தம்வரின் நீதிபதி. சனிகூடின் வேதாந்தி, தேவஸ்தானத்தில் தொழில் குரு வலுவு பெற்ருல், ட்ரஸ்டி. 2, 6, 10 வீடுகளுக்கு அதிபதியாகி, நவாம்சத்தில் குருவின் வீடான தனுசு, மீனமேறின் மேற்கூறிய தொழில்களில் ஒன்று.

காரகம்: ஞானம், அறிவு, மந்திரி, மஞ்சள், இந்திரன், தக்ஷிணாமூர்த்தி, வடகிழக்கு, சத்துவகுணம், தங்கம், டின், கௌல்முகி நதி முதல் விந்திய பர்வதம்வரை. சர ராசியில் குரு இருக்க, ராகு புக்திவரை தொழிலில்லாதிருந்திருப்பின், குரு புக்தியில் வடகிழக்கு திக்கில் உத்யோகம் கிடைக்கும். வேலை மாறவேண்டின், வடகிழக்கு திக்கிற்கு மாறவேண்டிவரும். குருவின் சுப பலம்பெற தக்ஷிணாமூர்த்தியை வணங்கவும் என அறியவும். குரு கோசாரத்தில் சுப வீடு சஞ்சரித்து, பலம் பெற்ருல் கௌல்முகி நதிதீரம் முதல் விந்தியபர்வதம்வரை உள்ள ஜீவராசிகளுக்கு சுபீக்ஷம், சுபம், நன்மைபென அறியவும். காரகமெனக் கொடுக்கப்பட்டுள்ளவை ஒவ்வொன்றிற்கும் இவ்விதம் பலாபலனை அறியவேண்டும்.

பலம்: வியாழக்கிழமையிலும். பகலின் நடுவிலும், வளர்பிறையிலும் உத்தராயணத்திலும், தன் சொந்த வீடான தனுசு, மீனத்திலும், உச்சவீடான கடகத்திலும், லக்னத்திலும், கேந்திர ஸ்தானத்லும், வக்கிர சாரத்திலும் சந்திரனுடன் சேர்ந்தாலும், புதனைவிட்டு விலகினலும், இதர சுப கிரகங்களைவிட்டு விலகும் காலத்திலும், விருச்சிகத்திலும் பலம் அதிகம்.

காலம்: குரு பலனைக்கொடுக்க வேண்டிவரின், ஆடி, கார்த்திகை, மார்கழி, பங்குனி மாதங்களிலும், கடக, விருச்சிக, தனுசு மீன லக்னங்களில் வியாழக்கிழமையிலும், சுபர்கள் புனர்புஷ்யம், விசாகம் பூரட்டாதி நக்ஷத்திரங்களில் சஞ்சரிக்கும் காலங்களில் எதிர்பார்க்கலாம். குருவிற்கு நேர்கதியுமுண்டு ; வக்ரகதியுமுண்டு.

## சுக்ரன்

மறுபெயர்கள்: ப்ருகு, ப்ருகுஸுத, ஆஸ்புஜி, ஸித, உஸனஸ், தைத்ய பூஜ்ய. கவி வெள்ளி, ஆங்கிலத்தில் வீனஸ். (VENUS)

சரீரம்: அதிக உயரமல்ல, ஆனால் ஆரோக்யமும் அழகுமுள்ளவர், எலும்பு தெரியாது. ஊழச் சதையும் அதிகமிராது. உருண்டை முகம். கன்னம் அழகு. மீன் கண்ணைப் போன்றிருக்கும். புன்முருவல், அன்னநடை, மெல்லிய இடை, இனிய குரல். சங்கீத ப்ரியன்.

குணம்: குளிர்ந்த தன்மையும், அடக்க ஒடுக்கமும், சண்டையிட வெறுப்பும், சமாதானத்திற்கே பாடுபடும் தன்மையும், தாராள சிந்தனையும், இரக்கமும், மர்யாதையும் தமாஷும் நாகரீகமும், இயற்கையில் ஆனந்தமும், பலருடன்கூடிப் பழகி பெருமையடைய ஆவலும், உயர்ந்த ஆடையாபரணமணிய விருப்பமும், வாஸனைத் திரவியங்களை உபயோகப்படுத்தி நற்மணத்துடனிருக்க முயற்சியும், புஷ்பம் முதலிய அணிய ஆவலும், அலங்காரத்தில் ப்ரியமும், இகலோக சுகத்திலேயே அதிக பற்றும், பெண்களுடன் பழகுவதில் ஓர் ஆனந்தமும், ஸினிமா. ட்ராமா. சங்கிதம் அனுபவிக்க ஆர்வமும், சித்ரம் வரைவது, கலர் பெயிண்ட் அடித்து சுத்தமாகவும் அழகாகவும் யாவற்றையும் காப்பாற்றும் தன்மையும் இருக்கும்.

ரோகம்: தொண்டையில் புண், நோய், உள்நாக்கு, புணர்ச்சியால் வரும் கெட்ட வ்யாதி. மூத்திரக் கோளாறு, டையாபெடிஸ். மர்ம ஸ்தானத்தில் புற்றுநோய், இடுப்பி

லும், கிட்னியிலும் ஸ்ரமம், சில சமயங்களில் வீர்யமற்று விடுவது. விரை வீக்கம் (DIABETES) முதலியன.

ஜீவனம் : வாஹனம், ரெயில்வே, ஆகாயக் கப்பல், பஸ், கார், லாரி, ரிக்ஷா, பல்லக்கு, படகு, கப்பல், சங்கீதம், பெயிண்ட், கலர், பாடகர், சினிமா, ட்ராமா, பட்டு, நூல், வாஸனை த்ரவ்யங்கள், க்ருஷி, வெண்மை நிறமான பண்டங்கள் வெள்ளி, செம்பு, வைரம், பெண்கள் நோய், ப்ரசவ ஆஸ்பத்திரி, சதையின் மேல் வரும் படைக்கு மருந்து, சனியுடன கூடின் இன்ஜினியரிங் அல்லது தோல் வ்யாபாரம். நீலம் சுத்த வெண்மையான பண்டங்கள், அரிசி, பால், பசி, வீர்ய விருத்திக்கு லேஹ்யம், மருந்து, தோட்டம், பூச்செடிகள், தாமரைப் பூ, கரும்பு, ஸ்படிகம் பெண்கள் பள்ளி, பெண்களுக்குப் பணிவிடை, வாத்யங்கள், ஹார்மோனியம், ரேடியோ, குடை, சவுரி, முத்து, யானை குதிரை, புஷ்பமாலை, கண்வைத்யம், கண்ணாடி; மூக்கு கண்ணாடி; மைகா, ப்ளாஸ்டிக் பெட்ரோல், அலங்கார வஸ்துக்கள், ட்ராப்ட்ஸ்மென் எக்ஸ்ரே முதலியன. சுக்ரன் வ்யாபாரமானால் ஓர் நல்ல கூட்டாளியுடன் சேர்ந்து செய்ய நன்மை புரியும். பல கிரகங்கள் ஒரு பாவத்தில் கூடுவதால் ஏற்படும் பலாபலனை பின்னால் அறியவும்.

காரகம் : காமம், மந்திரி, வெண்மை. இந்திராணி தென்கிழக்கு ராஜஸம்; வெள்ளி, கிருஷ்ணாநதி முதல் கௌதமி நதிவரை. ராஜஸ குணமென்றால் சுக்ரன் வலுத்த ஜாதகரின் குணம் ராஜஸம் என அறிந்து கொள்ள வேண்டும். கேது தசை ; புக்தியில் ஓர் வேலையிலிருக்க சுக்ரன் தசையோ, புக்தியோ ஆரம்பிக்கும்பொழுது வேலை மாறி இடப்பெயர்ச்சிவரின் தென் கிழக்குத் திக்கு நோக்கி இடம் மாற நேரும்.

பலம் : மேஷம்; சிம்மம்; விருச்சிகம்; கும்பம் லக்னங்களில் இருந்தாலும் தனுசு பிற்பகுதியும் விருச்சிகமும்; 7ம் வீடாகி அங்கே சுக்ரனிருந்தாலும், தனுசு முற்பகுதி, மீனம் சிம்மம் விருச்சிகம் 10ம் வீடானாலும், மகரம் பின்பாதி 4ம் வீடானாலும் எப்பொழுதும் ரிஷப, துலா ராசியிலும் கிரகங்களுடன் சேர்ந்திருக்கும் பொழுது, எல்லா கிரகங்

களுக்கும் வடக்கேயிருந்தாலும். தக்ஷிணாயனத்திலும், வெள்ளிக்கிழமைகளிலும், வளர்பிறையிலும், சுபக்ரஹத்திற்கு 5ம் வீட்டிலும், சந்திரனுடன் சேர்ந்தாலும் 'மாலை சுக்ரனெனும்' சூரியனுக்கு முன் சுக்ரன் சஞ்சரித்தாலும், ராசியின் நடுவிலும் சுக்ரனுக்குப் பலமதிகம்.

காலம்: சுக்ரன் தசை, புக்தி, அந்த்ரங்கள் நடைபெறும் காலத்தில், சுக்ரன் கொடுக்கவேண்டிய பலன்கள், வைகாசி, ஐப்பசி மாதங்களிலும், சுபர்கள் ரிஷப, துலாம் சஞ்சரித்தாலும், பரணி, பூரம், பூராடம் நக்ஷத்ரங்களில் சஞ்சரித்தாலும், வெள்ளிக்கிழமையில் ரிஷப, துலா லக்னங்களில் நற்பலன் நடைபெறும் சுக்ரனுக்கு நேர்கதியும் வக்ர கதியுமுண்டு.

## சனி

மறுபெயர்கள்: கோண; மந்த; க்ருஷ்ண சூர்யபுத்ர; யம; பாங்கு; சனேஸ்சர; ஸௌரி; கால; சாயஸுத; அசித; ஸ்திர ஆங்கிலத்தில் சாடர்ன். (SATURN)

சரீரம்: சாதாரண வளர்த்தி; நெற்றிகுருகல்; சிறிய கண்கள் மத்திம நிறம், கீழ்பார்வை, மெல்லிய ரோமம், அகன்ற மார்பும் தோளும்; கால் பலஹீனம்; உண்மையான வயதைவிட அதிகமாக வயது ஆனதுபோல் தோற்றம்.

குணம்: எக்கார்யத்திலும், நடைபெற வேண்டுமே எனும் அச்சத்துடன், மெதுவாகவும், விடாமலும் முயற்சி செய்து, பொறுமையை இழக்காமல், மனந்தளராமல் பாடுபடும் பான்மை; சதா படிப்பது; உழைப்பது, யார் எதைச் சொன்னாலும், அதைக்கேட்டு, ஆலோசனை புரிந்து நல்லது கெட்டதென உணர்ந்து நல்லதையே அனுஷ்டிக்க தீர்மானிப்பது. எதிர்ப்பு அதிகம் உண்டு, ஏமாற்றமிருக்கும். இருந்தாலும் வழுக்கும் பாதையில் நடப்பவர்போல, எச்சரிக்கையுடனும் ஜாக்ரதையுடனும், தன்விதி இவ்விதம் என்பதை யுணர்ந்து, பாடுபட்டு முன்னேற்றமடைய உள்ளூர ஓர் ஆசை. வெளிப்படையாக பேச மாட்டார்கள். சிக்கனம், சோம்பேறி ஒருவர் தூண்டுதலால் ஓர் கார்யத்தை

ஆரம்பிப்பார். பின்பு விடாமல் செய்து முடிப்பார். பல வற்றில் காலை அகட்டி கஷ்டப்படாமல்; ஒன்றிலேயே மனத்தைச் செலுத்தி, உழைப்பர். ரகஸ்யத்தை வெளி விடார். கடமையைச் செய்வார். நன்றியுள்ளவர் தன்னைத் தான் அடக்கமுடியும். உண்மையான நடத்தை பொறுமை இவைகளெல்லாம் சனி சுபஸ்தானமான 3, 6, 10 11ல் இருப்பின் எதிர்பார்க்கலாம். அசுபஸ்தான மேறின் மேற் கூறியதற்கு மாறுபாடாக இருக்கும. சுப அசுபம் என்பது வேறு; வலுவு, பலம் என்பது வேறு.

ரோகம்: நீண்ட நாள் பாடுபடுத்தும் நோய் குளிர் ஜலதோஷம், ஜ்வரம், வாயு கில்வாயு ரோமச்சால்களில் புண், ஈரல் மந்தம், இடது காது. முழங்கால், ஆட்டுச் சதையில் நோய். எலும்பிற்குள் நோய், ப்ளோ ரோஸிஸ் இன்டாக்ஸிகேஷன். மாட்டுல்டு எனுமல்; எக்ஸீமா; கருப்பு குஷ்டம், யானைக்கால்.

ஜீவனம்: பூமியின் கீழ் இருக்கும் பண்டங்களையும், ஓர்ஸ், எண்ணெய் கிணறு கரி நிலக்கரி, ஈயம், கம்பளி எருமை, கழுதை, ஆடு, ஒட்டகை, எள்ளு கருப்பு நிலநிற பண்டங்கள், மருந்து, பானை, சட்டி இன்ஸ்யூரன்ஸ் சுடுகாடு நீண்ட கொடிய நோயை குணப்படுத்தும் மருத்துவருக்கு சனி சம்பந்தம் வேண்டும் தோல், குழந்தை அதிகமாக ஜனிக்காது கர்ப்பத்தடை செய்வோருக்கு சனி, ராகு அல்லது சனி கேது சம்பந்தமிருக்கும் எலும்பு வைத்யம் ஆம்புடேஷன், பொறுப்புள்ள தொழிலை ஏற்றுக்கொள் வது உண்மையாக உழைத்தும் பொதுநலப்பணி புரிவது, இரும்பு தொழிற்சாலையில் சேவகம், சேவகர்களின் சுகா தாரம், அலக்ஷ்யமாய் ஒதுக்கியிருக்கும் ஏழைகளின் முன்னேற்றத்திற்கு உழைப்பது, முடிஸ்ருங்கார நிலயம் ரோமம் வளர செய்யும் எண்ணை, நரைத்த மயிர் நிறத்தை கருப்பாகும் கலர் முதலியன செய்வது, செய்யுமிடத்தில் வேலை பார்ப்பது, அதனால் தனவிருத்தியிருக்கும.

காரகம்: துக்கம்; சேவகன், நீலம்; ப்ரம்மா; மேற்கு, தாமஸகுணம் ஈயம் கங்கை முதல் ஹிமய மலைவரை. சனி பலம் பெற்று சஞ்சரிக்கும் காலங்களில் மேற்கூறிய ப்ரதே சத்தில் விளைவு அதிகம். நோயற்ற வாழ்வும் குறைவற்ற

காலமும், சுபமும் எதிர்பார்க்கலாம். நீலநிறத் துணி, பெயிண்ட் முதலியன வ்யாபாரம் அதிகமாகும். எள்ளு விளையும் என பொருள் கொள்ளவேண்டும்.

பலம் : சனிக்கிழமைகளிலும் தேய் பிறையிலும் தக்ஷிணாயனத்திலும் சந்திரனுடன் சேர்ந்திருக்கும் காலத்திலும் இரவிலும் லக்னத்திலிருந்து எண்ணிவர 3, 7, 8, 11 மிடங்களிலும், தனுசு மகர, கும்ப, மீன, துலா ராசியிலும் சுபர் சம்பந்தம் பெறினும் இதர கிரகங்களுடன் கூடியிருக்கும்பொழுது, எல்லாவற்றிற்கும் வடக்கேயிருக்கும் காலத்திலும் லக்னம் அல்லது 4ம் வீடாகி துலா கும்பத்தில் இருப்பினும், சிம்மம் 10ம் வீடாகி அங்கிருப்பினும் எங்கும் 7ம் வீட்டிலும் வலுவுண்டு.

காலம் : சனியளிக்க வேண்டிய பலன்களை சனிக்கிழமையிலும் அல்லது சுபர் சனியின் நக்ஷத்ரங்களான பூசம் அனுஷம், உத்ரட்டாதியில் சஞ்சரிக்கும் பொழுதும், மகர கும்ப லக்னங்களிலும் ராசி தினங்களிலும் தை, மாசி மாதங்களிலும் எதிர்பார்க்கலாம். அஸ்தமனமானாலும் பலம் குறையாது. சனிக்கு நேர் கதியும் வக்ர கதியுமுண்டு.

## ராகு

மறு பெயர்கள் : தாமஸ், அசுரன், ஸ்வர்பானி, விதுந்துட பாத, புஜங்க, அகு, அஹி, ஸைம்ஹிகேய, ஸர்பி ஆங்கிலத்தில் காபுட் அஸெண்டிங் நோட், (CAPUT : ASC : NODE)

சரீரம் : லக்னத்தில் இருப்பின் உயரமதிகம். அங்கக் குறைவு இருக்கலாம். காயத்தாலோ, அடிபடுவதாலோ தழும்பு, தேம்பல், நிறம் குறைவு ராகுவிற்கு சொந்த வீடு இல்லையாதலால், எந்த ராசியிலிருக்கிறதோ அதன் பலனையும சேர்த்துக் கொள்ள வேண்டும்.

குணம் : சுபர் வீடேறின், சுப பலனும், அந்த வீட்டினதிபதியின் குணமும் பாபர் வீடேறின், அவ்வீட்டதிபதியின் குணமும், அந்த கிரகம் கொடுப்பதைவிட அதிக

மாகவே ராகு கொடுக்கும். எனினும் நிம்மதியிராமல் அடிக்கடி மனக்குழப்பமிருக்கும். சனியின் பலனும் ஒத்திருக்குமென பெரியோர் கூறுகின்றனர்.

ரோகம்: வாயுபிடை, குன்மவியாதி, மூர்ச்சையாகி கீழே விழுந்து விடுவது, ஹிஸ்டீரியா, ஜலத்தில் கண்டம், ரோகஸ்திரி சம்போகத்தால் வரும் துன்பம் மீண்ட நோய், கான்ஸர். ராகு இருக்கும் வீட்டனதிபதியைக் கொண்டும் காண்க. கண்ணிற்குக் கண்ணாடியாவது போட நேரும். கற்பம் சிதையலாம்.

ஜீவனம்: 2, 6, 10ம் வீடுகளில் இருந்தால், பிதுர், வழிபாட்டன் சொத்தினலும், விஷமருந்துகள் செய்வதாலும், மந்திர தந்திரத்தாலும், ஜெயிலிலும், தண்ணீருக்குள் செல்லும் கப்பலிலும் மலை குகை தடாகம் தோட்டம் இவற்றிலும் எருமை கொள்ளு, விஷம் பாம்பினலும் வ்யாபாரம் செய்தும் தனவிருத்தி தென் மேற்கு திக்கு.

பலம்: லக்னத்திலிருந்து 10ம் வீட்டிலும், மிதுனம் கன்னி கும்பத்தில் பலமென்று சிலரும், மேஷ ரிஷப கடகத்தில் வலுவென்று சிலரும் கூறுகின்றனர். சூர்யன், சந்திரனுடன் கூடினலும், பரிவேஷத்திலும் ராசியின் முடிவிலும் வலுவு அதிகம். ராகு லக்னத்திலிருந்து, எந்த வீட்டிலிருக்கிறதென்றும், வீட்டினபதி வலுவுடன் எங்கேயிருக்கிறதென்றும், ராகுவுடன் கூடியிருக்கும் கிரகங்களின் சம்பந்தத்தை யொட்டியும், ராகு வைப்பார்க்கும் கிரகங்களின் சுபாசுப பலனேயும் சேர்த்து, பலத்தையும், பலனேயுமறியவும்.

காலம்: ராகு காலமென, நாம் வழங்கும் $3\frac{3}{4}$ நாழிகைகளுக்கும், ராகுவிற்கும் சம்பந்த மிருப்பதாகத் தெரியவில்லை. ஆனல் ராகு தசை, ராகுபுக்தி நடைபெறுங் காலத்தில். இஷ்டம்பூர்த்தியாவதெல்லாம், நாம் வழங்கும் ராகு காலத்திலேயே நடைபெறுவதை அனுபவத்தில் அறியலாம். திருவாதிரை ஸ்வாதி சதயம் நக்ஷத்ர தினங்களிலும், கிரகங்கள் மேற்கூறிய 3 நக்ஷத்ரங்களில் சஞ்சரிக்கும் காலங்களிலும் ஞாயிற்றுக கிழமைகளிலும், நடைபெறுவதையும் கவனிக்கலாம் ராகுவிற்கு நேர்கதி கிடையாது. எப்பொழுதும் வக்ரமே.

## கேது

மறு பெயர்கள்: ஷிகி, தூமன், ம்ருத்யு புத்ரன், அனலன். ஆங்கிலம் காடா டிஸன்டிங் நோட். (CAUDA; DES; NODE)

சரீரம்: கருத்ததேகம், குள்ளம், முகத்திலும் குறு குறுப்பிராது, மச்சமும் தழும்புமதிகம். அழகாகயிருப் பது அபூர்வம்.

குணம்: செவ்வாயைப் போன்றது. அசுபமதிகம், சுபர்சம்பந்தம் பெற்ருல் உத்தமபலனும் உண்டு ஆகவே, எந்த வீட்டிலிருக்கிறது என்றும், சேர்க்கை பார்வை இவைகளேயும் நன்கறிந்தே பலனேச் சொல்ல வேண்டும். இருந்தாலும், நமக்கு எங்கிருந்து நற்பலன் கிட்டப் போகிற தென மனம் முறிந்து, எக்கார்யத்திலும் முதலில் கெடு தலேயே எண்ணத் தோன்றும். உண்மையாக இருக்க முயன்ருலும். தான் யாருடன் பழகுகிருர்களோ அவர்கள், ஜாதகனின் க்ஷ்டகாலங்களில் தலே மறைவதாலும், இழிந்து பேசவதாலும், அவர்களின் தன்மையறிந்து, உண்மையைப் பேசாதபடி சூழ்நிலே ஏற்படவே உள் ளொன்று வைத்து புறம்பொன்று பேச நேரும். பட்ட கஷ்டங்களால் வரும் ஞானம். உலக அனுபவமதிக மேற்பட, சாமர்த்தியம் தானே வரும்.

ரோகம்: கருப்பு குஷ்டம; ரத்தக்கோளாறு, ப்ளட் பாய்ஸனிங், விஷம் அருந்துவது. சித்தப்ரமை ரணம் காயம் டெடானஸ், டேப்புழு புலால் புசிப்பதின் மூலம் வரக்கூடிய நோய் நீர் சுருக்கு, கொப்பளம், அம்மை, டைபாய்ட், பேதி வாந்தி, கற்பம் சிதைவது.

ஜீவனம்: கேது, 2, 6, 10ம் வீட்டின் ஸம்பந்தம் பெற ருல், நவாம்சத்தில் யார் வீடு ஏறியிருக்சிறதென அறிந்து, நவாம்ச ராசி அதிபதியின் பலனேயும, கேதுவுடன் ராசியில் கூடியுள்ள கிரகங்களின் ஸ்வபாவத்தையும், கேதுவைப் பார்க்கும் கிரகங்களின் ஸ்வபாவத்தையும் அறிந்து சொல்ல வேண்டும் மந்திரவாதி. சில்லறை தேவதைகள் வசியம். மை அஞ்சனம் தயாரிப்பது.

காரகம் : ஞானம் மோக்ஷம் பலநிறம் கலந்தது. செவ்வாயைப் போன்றது.

பலம் : லக்னத்திலிருந்து 3, 11ம் வீடுகளில் சுபபலம் அதிகம். 10ம் வீட்டில் மத்திபபலன. தனுசு பிற்பகுதியிலும், ரிஷபம் கன்னி மீனத்திலும், இரவிலும் வால் நக்ஷத்ரம் தென்படும் காலங்களிலும், வானவில் தெரியும் பொழுதும் வலுவு அதிகம், 'இரவில்' என்ருல், ஒருவர் ஜனனம் இரவில் ஏற்பட்டால், கேது அவர் ஜாதகத்தில் வலுவடைந்திருப்பதாக கருத வேண்டும்.

காலம் : கேது தசை, புக்தி நடைபெறும் காலங்களில், அசுவதி, மகம். மூலம் நக்ஷத்ர தினங்களிலும், மேற்கூறிய நக்ஷத்ரங்களில் கிரகங்கள் சஞ்சரிக்கும் பொழுதும்; பலனை எதிர் பார்க்கலாம் கேதுவிற்கு நேர்கதி கிடையாது. எப்பொழுதும் வக்ரகதியே.

## யுரேனஸ்

மறுபெயர்கள்: தமிழ். ஸம்ஸ்க்ருதம் ஒன்றுமில்லை. யுரேனஸ் எனவே வழங்குகிரேம். ஓர் சிலர், ராகு. கேதுவோ என எண்ணுகிருர்கள். அது தவறு. ராகு கேதுவிற்கு உருவம், வடிவம், கனம் ஒன்றும் கிடையாது. ஆனல் யுரேனஸ்ஸோ மிகப்பெரிய மண்டலம். சூர்யனிலிருந்து 17540 லக்ஷம்மைல் அப்பால் உள்ளது. 1781ம் ஆண்டுதான் கண்டு பிடிக்கப் பட்டது. நம் மூதாதையர்கள், இக்கிரஹத்தை எடுத்துக் கொள்ளவில்லை. குழந்தை பிறக்கவிட்டுத் தானே, பெயர் வைக்கவேண்டும். அக்காலத்தில் கவனிக்கவில்லை, இருப்பதாக எடுத்துக் கொள்ளவில்லை. ஆகவே பெயரிடவில்லை,

சரீரம்: திடிரென, நல்ல உயரம், அதிக சுறு சுறுப்பு, யாவரையும் கவரும் முகம். கூர்மையான பார்வை. புதனைப் போன்றிருக்கும், நீண்டமூக்கு.

குணம்: என்ன எண்ணிக் கொண்டிருக்கிருர். எவ்விதம் பதிலை எதிர்பார்க்கலாமென, தீர்மானமாக நம்ப முடியாதபடி, மனதில் அப்பொழுது தோன்றியவாறு செய்பவர். ஸ்வயமான மூளை மிக அதிகம். ஒருவரைப்

பார்த்து அவ்விதமே செய்யமாட்டார். தன் நுண்ணறிவால் நூதனமுறை அனுஷ்டிப்பார். திடீரென, எண்ணியதும், முடித்து விடுவார். புத்தியை பயன்படுத்தி செய்ய வேண்டிய புதிய புதிய வேலை செய்யவே கருத்து. விஞ்ஞானத்தில் பற்று அதிகம். மிகப் படிப்பார், கசடறக் கற்பார். கற்றதை மறக்கமாட்டார். யாவரையும் பேச்சினாலேயே மயக்கிவிடுவார். திடமான தீர்மானம் இராது. அடிக்கடி அபிப்ராயம் மாறும் இது வழக்கம் அது வழக்கம் என்பவைகளை ஏற்க மாட்டார். உண்மையை அறிய ஆர்வம் சிற்சில சமயம் கோபம் வரின் தலைகால் தெரியாமல் எதையும் செய்து விடுவார். சண்டை வரின் விடார். சுதந்திரம் நாடுவார் அதிகாரம் செய்வதில் மன்னன்.

ரோகம், நரம்பு தளர்ச்சி, சித்தப்ரமை, பல இடங்களில் மாறி மாறி வலிப்பது, பார்சுவவாயு, முகத்தில் ஏற்படும் விகாரங்கள், மயக்கம், கான்ஸர், கக்குவாய் இருமல், மிக்ஸ் இடிமா வயிறு உப்பி, டையாப்ரத்தை மேல்நோக்கி அழுத்த, மூச்சுவிட ஸ்ரமம், வைத்தியரால் கண்டுபிடிக்க முடியாதபடி ப்ரமிக்கவைக்கும் நோய்.

ஜீவனம்: ரேடியம் உபயோகித்து சிகிச்சை, எக்ஸ்ரே, டெலிபோன், டெலிபதி, ரெயில்வே, தந்தி, மின்சாரம், விஞ்ஞான ஆராய்ச்சி நிலையம், எலக்ட்ரீஷியன், ஜோஸ்யர், எக்ஸ்ரேயால் ரோகத்தைத் தீர்க்கும் வைத்தியர்.

பலம், காலம்: கும்பத்தில் பலமதிகம், வாயுராசியிலும் பலமுண்டு. சுப கிரகங்களுடன் சேரினும், கிரகங்களுக்கு, 30°, 60°, 120°, 36°, 72°, 109°, 144° தூரத்திலிருப்பினும் சுப பலம் அதிகம். 22½°, 45°, 90°, 135°, 150°, 180-ல் அசுப பலம் அதிகம்.

சுப பார்வையேற்படும் காலத்தில் (அதாவது 30°, 60°) அதிக சுப பலனையும், அசுப பார்வையேற்படும் காலத்தில் (அதாவது 22½, 45°,...). கிரகங்கள் எப்பொழுதும் ஆகாயத்தில் சஞ்சரித்துக்கொண்டேயிருக்கிறது. ஒருவர் ஜனன காலத்தில் யுரேனஸ் ஒரு ஸ்திதியில் இருக்கும். அது இருக்கும் ஸ்திதிக்கும், கோசாரத்தில்

இரகங்கள் சஞ்சரிக்கும் ஸ்திதிக்குமுள்ள தூரத்தை கவனிக்கவேண்டும். 30°, தூரமானாலும் 36° ஆனாலும் சுபபார்வையெனப்படும் அப்பொழுது திடீரென கார்யசித்தி நல்ல பலன். ஆனால் 221° தூரத்தில், 45° தூரத்தில் சஞ்சரிக்குமானால், அசுபபலன் நடைபெறுமென அறியவும். யுரேனஸ்ஸுக்கு தசை, புக்தி கிடையாது. கோசாரபலன் மூலம்தான், எப்பொழுது யுரேனஸ்ஸால் தெரிவிக்கப்படும் கார்யம் நடைபெறுமென அறியமுடியும். யுரேனஸ்ஸுக்கு நேர்கதியுமுண்டு, வக்ரகதியுமுண்டு. புதனைப்போன்று பலனையளிக்கும். மிக வலுவுள்ளது குறிக்கும் பலன்கள் நடைபெற்றே தீரும்.

## நெப்ட்யூன்

மறுபெயர்: தமிழிலோ, ஸம்ஸ்கிருதத்திலோ பெயர் கிடையாது.

சரீரம்: சர்தாரண உயரம், பெருத்த சரீரம், உருண்டை முகம், சந்திரனைப்போன்றது.

குணம்: சமயத்திற்கு தகுந்தபடியும் வேவ்வேறு மனப் பான்மையுடன் கூடிய ஒவ்வொருவருக்கு தகுந்தபடியும் நடக்கும் குணம். சண்டையிடாவிட்டாலும்; நெப்ட்யூன் கெட்டஸ்திதியில் இருப்பின், கெடுவான் கேடு நினைப்பான் என்பதுபோல், மற்றவர்களுக்கு தீங்கையெண்ண, தானே ஸ்ரமத்தையடைவான். தன்னைத்தானே ஏமாற்றிக்கொள் ளும் கிரகம். அசுபஸ்தானமாயின் நீரினிலுள்ள குமிழிபோல் சிலகாலம் தன் த்யானத்தால் சந்தோஷம் அப்பால் துக்கம் சுபஸ்தானமேறின், நினைத்ததெல்லாம் கைகூடுவதால் எப் பொழுதும் உழைத்து; நற்பலனைப்பெற்று; உற்சாகத்துட னிருப்பர். சொப்பனம் காண்பர். பார்ப்பதெல்லாம் பலிக்கும். சங்கீதரஸ ப்ரியர். சங்கீதத்தில் அதிக தேர்ச்சி யும் தானே அதில் ஆராய்ச்சியும் புரிவர். அதிகம் தண் ணீரைச் சாப்பிடுவதிலும்; நீர்ப்பிரயாணம் செய்வதிலும் பற்றுள்ளவர். காமலீலைகளில் தேர்ச்சியதிகம். சிந்தனை யதிகம். சுக்ரன் சந்திரன் இவ்விருகிரகங்களின் குணாதிசயங் கள் கலந்தாற்போலிருக்கும். பண்டைகால பழக்க வழக்க மந்திரங்களில் நம்பிக்கை அதிகமிருக்கும்.

ரோகம் : சித்தப்ரமை தனக்குத்தானே பேசிக் கொள்வது. நீர்ரோகம் பாண்டு பேதி ஏதோ வ்யாதி யிருப்பதுபோல் எண்ணி ஏங்குவது.

ஜீவனம் : ஸமுத்திரத்தில் அகப்படும் பண்டங்கள், கப்பல், செம்படவன், சங்கீதம், சங்கீத வாத்யங்கள், பெட் ரோல், த்ரவம், மந்திரம், குதிரை.

பலம், காலம்: கிரகங்கள் வானமண்டலத்தில் சஞ் சரித்து வரும்காலத்தில் நெப்ட்யூன் ஒருவர் ஜனித்த காலத்தில் ஜாதகத்தில் எங்கிருந்தோ, அந்த ஸ்திதிக்கு 30°, 60°, 120, 36°, 72°, 108° தூரங்களில் சஞ்சரிக்கும் காலத்தில் எண்ணியவைகள் எதிர்பார்க்கிற அளவிற்கு அதிகமாகவே கைகூடும். ஆனால் 22½°. 45°. 90°. முதலிய அசுப திருஷ்டி ஏற்படின் அதாவது அசுப தூரத்தில் சஞ்சரிப்பின், ஏமாற்றமதிகம் மனம் ஒடிந்து பைத்யம் பிடிக்காத குறைபோன்று வேதனையளிக்குமளவு துர்பல முண்டு. நெப்ட்யூனுக்கு தசை புத்தி கிடையாது. நெப்ட் யூனுக்கு வக்ரகதியும் நேர்கதியுமுண்டு.

ப்ளூடோவைப் பற்றி அதிகமாக ஊர்ஜிதப்படுத்தி பலாபலன்கள் உபதேசிக்கப்படவில்லை.

அதிருஷ்டக் குறிக்கும் குளிகன் மாந்தி இவைகளுக் கும் ப்ரத்யேகமாக அங்கத்தில் ஏதாவது ஓர் பாகத்தை குறிக்கிறதென்றோ எவ்வித ரோகம் கொடுக்குமென்றோ சொல்லப்படவில்லை.

ஆனால் அத்ருஷ்டக் குறிக்கு சுப த்ருஷ்டி ஏற்படின் சுப பலனுண்டு. அதாவது கோசாரத்தில் சஞ்சரிக்கும் கிரகங்கள் அத்ருஷ்ட குறியிருக்கும் இடத்திலிருந்து 30° 60° முதலிய சில தூரங்களில் சஞ்சரிக்கும் பொழுது நல்ல பலன். அசுப தூரமான 45°: 90ல் சஞ்சரிக்கும் பொழுது ஏமாற்றம் அத்ருஷ்டக் குறி எந்த ராசியில் இருக்கிறதோ அந்த ராசியதிபதிக்குக் காலம் பலமதிக மிருக்கும் பொழுது நன்று. பலம் குறைந்தால் யத்தன பலிதமிருக்காது. ஏமாற்றமிருக்கலாம்.

# கிரகங்களின் பார்வைகள்

ஹிந்து சாஸ்திரப்படி. பார்வையைப் பற்றி கவனிக்கும் பொழுது. ஒரு கிரகம் இருக்கும் வீட்டை ஒன்று என்றும் கெடிகாரம் சுற்றி வருவதுபோல் எண்ணிவரின். அடுத்த வீட்டை 2ம் வீடு என்றும். அதற்கடுத்ததை 3 என்றும் அப்பால் உள்ளதை 4, 5, என்று எண்ணிவர. 12 வரை கணக்கிடுகிறோம். 12ம் வீடே. லக்னத்தில் மற்றொரு பக்கத்தில் லக்னத்திற்கடுத்தாற் போலிருக்கும் வீடாகும்.

எல்லா கிரகங்களும். அவரவர். ஜாதகத்தில் எந்த ராசியிலிருக்கின்றனரோ, அவ்விடத்தை ஒன்று என்றுப். ஸவ்யமாக ப்ரதக்ஷிணமாக எண்ணிவரின் அடுத்ததை 2 என்றும். அதற்கடுத்ததை மூன்று என்றும். மேலும் இவ்விதமே எண்ணிவரின். 7ம் வீட்டை முழு பலத்துடன் பார்க்கின்றனர். தவிர இந்த கிரகங்களெல்லாம். தாம். தாம். ஜாதகத்திலிருக்குமிருந்து 3. 10ம் வீடுகளை கால் பார்வையுடனும் 5. 9ம் ஸ்தானத்தை அரை பார்வையுடனும் பார்க்கின்றனர். சனிக்கு 7ம் வீடு பார்ப்பதுடன் மூன்றும் விடும். பத்தாம் வீடும் முழுது பலத்துடன் பார்க்கும். ஆகவே சனியின் பார்வை 3. 7. 10 ; குரு 7ம் விடு பார்ப்பதுடன் 5. 9ம் வீடுகளையும் முழுபலத்துடன் பார்ப்பதால். குருவின் பார்வை 5, 7. 9ம் வீடுகளுக்கும். அவ்விதமே செவ்வாய். ஜாதகத்தில் எந்த ராசியில் இருக்கிறதோ அங்கிருந்து 4. 7. 8ம் வீடுகளைப் பார்க்கிறது.

| | | | |
|---|---|---|---|
| சனி | | | ராகு |
| | ராசி | | |
| 17 டிகிரி<br>சந்திரன்<br>லக்னம் | | | குரு<br>23 டிகிரி |
| கேது<br>11 டிகிரி | | சூர்யன்<br>புதன்<br>8 டிகிரி | சுக்ரன்<br>செவ்வாய்<br>11 டிகிரி |

மேலே குறிப்பிட்டிருக்கும் ஜாதகத்தில், மகர லக்னத்திலிருக்கும் சந்திரன், 7ம் பார்வையாக, கடக ராசியைப் பார்க்கிறது. 7ம் வீட்டு பலனைச் சொல்லவேண்டிய காலத்தில், சந்திரன் மகரத்திலிருந்து பார்ப்பதால், சந்திரனின் குண விசேஷத்தையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

லக்னத்திலிருந்து 3ம் வீட்டில் சனியிருக்கும் ராசி 'மீனம்', சனிதானிருக்கும் வீட்டிலிருந்து 3, 7, 10ம் வீடுகளைப் பார்க்கிறது. ஆகவே சனியிருக்குமிடம் மீனம் 1; அடுத்தாற்போல் மேஷம் 2. ரிஷபம் 3. ஆகவே ரிஷப ராசிக்கு சனி பார்வை ஏற்படுகிறது. இவ்விதம் எண்ணிவரின், 7ம் வீடான கன்னி ராசிக்கும், கன்னியிலுள்ள, செவ்வாய் சுக்ரனுக்கும் சனியின் பார்வையுண்டாகிறது. அப்பால் மீனத்திலிருந்து எண்ணிவர 10ம் வீடான தனுசையும், தனுசிலிருக்கும் கேதுவையும் பார்க்கிறது. எந்த வீட்டையும், அவ்வீட்டின் கிரஹத்தையும், ஒரு கிரகம் பார்த்தால், அவ்விட்டின் பலனும், அவ்வீட்டிலுள்ள கிரஹம் தெரிவிக்கும் பலனும், பார்க்கும் கிரஹத்தின் மூலம் ஏற்படும் குணத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் ஒவ்வொரு ராசியும், ஒரு நிறமுள்ள கண்ணாடி பாத்ரம் என எண்ணிக்கொள்ளவும். ஒவ்வொரு கிரஹம்

ஒரு நிற வர்ண த்ரவம் எனவும் எண்ணிக்கொள்ளவும் ரிஷபம் வெள்ளை; அதில் கிரகமில்லை. சனி நீலம்; சனி பார்வை ஏற்படுகிறது. ஆகவே நீலமும் வெள்ளையும் கலந்தால் எவ்விதமாக வெள்ளையுமல்லாமல், நீலமுமல்லாமல், கலந்த நிறமாகிவிடுகிறதோ, அவ்விதமே ரிஷபராசியால் அறியவேண்டிய பலன், ராசியாதிபதி சுக்ரனையும், பார்க்கும் கிரஹம் சனியையும்கொண்டு அறியவேண்டும்.

ஸிம்மத்தில் குரு; ஸிம்மத்திலிருந்து குரு பார்வையை கணக்கிட்டால், 5ம் வீடான தனுசையும், தனுசில் உள்ள கேதுவையும் 5ம் பார்வையாக பார்க்கிறது. அதாவது கேதுவின் பலனை ஆராயும்பொழுது, சனிபார்வை, குரு பார்வையால் ஏற்படக்கூடிய மாறுதலையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். குரு, 7ம் பார்வையாக கும்பத்தைப் பார்க்கிறது. கும்பமோ லக்னத்திலிருந்து 2ம் வீடு. ஆகவே 2ம் வீட்டின் பலனை ஆராயும் காலத்து 2ம் வீட்டினதிபதி சனியின் பலனையும், பார்க்கும் குருவின் பலனையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

குரு 9ம் பார்வையாக மேஷத்தைப் பார்க்கவே, 4ம் வீட்டின் பலன்—மகர லக்னத்திலிருந்து எண்ணிவர மேஷம் 4ம் வீடு—கவனிக்கும்பொழுது, அவ்வீட்டினதிபதி செவ்வாயின் பலனுடன், குருவின் 9ம் பார்வையின் பலனை சேர்த்துக்கொள்ள வேண்டும்.

அப்பால், கன்னியில் இருக்கும் சுக்ரன் 7ம் பார்வையாக மீனத்தைப் பார்க்கும். செவ்வாயோ 4ம் பார்வையாக தனுசையும், 7ம் பார்வையாக மீனத்தையும், 8ம் பார்வையாக மேஷத்தையும் பார்க்கிறது.

துலாத்திலிருக்கும் சூர்யனும புதனும், 7ம் பார்வையாக மேஷத்தைப் பார்க்கிறது.

ஆகவே லக்னத்திற்கு யார் பார்வையுமில்லை; 2ம் வீட்டை குரு பார்க்க; 3ம் வீட்டை செவ்வாயும் சுக்ரனும் பார்க்க, 4ம் வீடான மேஷத்தை சூர்யன் புதன் சுக்ரன்

குரு பார்க்க, 5ம் வீடான ரிஷபத்தை சனி பார்க்க, 7ம் வீட்டிற்கு ஒரு பார்வையுமில்லை; 7ம் வீட்டை சந்திரன் பார்க்கிறது. 8ம் வீட்டிற்கு பார்வையில்லை: 9ம் வீட்டை சனி பார்க்கிறது; 10. 11ம் வீடுகளுக்கு பார்வையில்லை. 12ம் வீட்டை சனி, குரு, செவ்வாய் பார்க்கிறது.

அவ்விதமே, சந்திரனை ஒருவரும் பார்க்கவில்லை. சனியை, செவ்வாயும் சுக்ரனும் பார்க்கின்றன. சுக்ரன், செவ்வாயை சனி பார்க்கிறது, கேதுவை குரு செவ்வாய் சனி பார்க்கின்றனர். எந்த எந்த கிரகங்களுக்கு பார்வை ஏற்படுகிறதோ, அந்த அந்த கிரகங்களின் குணநிச்சயத் துடனும், அளிக்கவேண்டிய பலனுடனும் பார்க்கும் கிரகங் களின் பலனையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். ஒவ்வொன் றும் ஓர் நிற பெயிண்ட் ஆனல் இப்பார்வையால் ஒரு கலர் பெயிண்ட் உடன், மற்றொரு கலர் பெயிண்ட் சேர்த் தால் எப்படி நிறம் மாறுமோ, அப்படியே பலனும் மாறும். சேர்க்கையினுலும் பார்வையினுலும் ஒவ்வொரு கிரகமும் பலாபலனை எவ்விதம் மாற்றி, அல்லது கலந்து அளிக் கின்றனர் என விவரமாக பின்னல் சொல்கிறேன். மேல் நாட்டார் "பார்வை"யென்று சொல்வதை இனி கூறு கிறேன். கவனி: இதுவே உண்மையை நன்கு விளக்கிறது. அனுபவத்தில் தவறேயில்லாமல் ஒத்து வருகிறது. ஆழ்ந்து சிந்தனை செய்தாலும், இம்முறையை அனுஷ்டிக்க வேண்டிய அத்யாவசியம் விளங்கும்.

குரு 5ம் பார்வையாக கேதுவைப் பார்க்கிறது. குரு சிம்மத்தில் 23° என்றும். கேது தனுசில் 15° என்றும் இரண்டிற்குமுள்ள தூரம் 108° இந்த பார்வை நல்லதென்ப தால் கேது பலனுடன் சுபகுரு பலனையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

குருசிம்மம் 23°. நெப்ட்யூன் கடகம் 8° தூரமோ, 45° இருக்கும் இது நல்லதல்ல. எப்பொழுது எவ்வித தீய பலன் எனபதை பின்னல் சொல்கிறேன். செவ்வாய் கன்னியில் 11° ஆகவே தூரம் 90°. செவ்வாயின் தீய குணங்களே, கேது விற்கு ஏற்படுமேயன்றி, நல்ல பலன் கிடைக்காது. இதுவே, செவ்வாய் கன்னி 1°யிலும். கேது தனுசு 21°யிலு

மிருப்பின்; தூரம் 120°க்கு நெருங்கி 118°ல் இருப்பதால் சுப பலனதிகம். ஆகவே செவ்வாய் கன்னியிலேயே யிருக்கிறது. கேதுவும் தனுசில்தான். தூர வித்யாசத்தால் பலன் மாறுவதைக் கவனிக்கவும். தவிர செவ்வாய் கன்னியில் 29 டிகிரியில் இருப்பதாய் எண்ணிக்கொள். கேது தனுசு 10ல் இருப்பதாய் எண்ணிக்கொள். அப்பொழுது, சுபதிருஷ்டியெனும் 61°க்கு அருகாமையில், 62° தூரத்திலிருப்பதால் நன்று. இதே செவ்வாய் கன்னியில் 29° கேது தனுசில் 11° என்று நினைத்துக்கொண்டால் இரண்டின் தூரம் 72°. ஆகவே மிக நல்லபலன். இவ்விதமாக இரண்டு கிரகங்கள் கன்னியிலும் தனுசிலுமே யிருக்கின்றன. ஆனால் அதன் பலாபலன் மாறுவதைக் கவனிக்கவும்.

ஆகவே மேல்நாட்டார் துல்யமாக கணக்கிடுவதை நாம் பார்க்கவேண்டியது அவசியம். இல்லையேல் பலன் தவறுவதில் ஆச்சர்யமில்லை.

ஒரு கிரகமோ, அல்லது ஜாதகத்தில் ஏதாவது ஒரு ஸ்திதியிருக்குமிடமிருந்து 18°; 36°; 72°; 108°; 144°; 30°; 60°; 120°; நல்ல பலன். சுபதிருஷ்டி எனப்படும். 22½°: 45°; 67½°; 90°; 135°; 150°; 180°; தூரமாயில் கெடுதல், அசுபதிருஷ்டி எனப்படும்.

மேலும் இயற்கையில் சுபரான குரு, சுக்ரன், வளர்பிறை சந்திரன், பாபிகளுடன் சேராத புதன், இவர்கள் ஒரே ராசியில் 8° தூரத்திற்குள் இருப்பின் நல்ல பலன். இதை 'கன்ஜெங்க்ஷன்' (CONJUNCTION) சேர்க்கையென்பர்.

அவ்விதமே வானமண்டல மத்ய ரேகைக்கு தெற்கே ஒரு சுபர் எவ்வளவு தூரத்திலிருக்கிறாரோ அதே தூரம் சரியாக வடக்கேயும் ஒரு கிரகமிருக்குமேயானால் அதை 'சமம்' என்று, "பாரலெல்" என்று சொல்லி, பலன் நல்லதென்று கருதுகின்றனர். இவ்விதமே ஒரு சுபருடன், ஓர் அசுபர் ஒரே ராசியில் 8° தூரத்தில் "கன்ஜெங்ஷன்" என்றாலும் அல்லது வான மண்டல மத்ய ரேகைக்கு தெற்கே ஒன்றும், வடக்கே ஒன்றும் சம தூரத்திலிருந்து "பாரலெல்" என்றாலும் பலன் கலந்திருக்கும்—சுபம் அசு

பம் இரண்டுமிருக்கும். ஆனால் சேர்க்கை, "கன்ஜெங்க்ஷன்" அல்லது 'பாரலெல்' அதாவது பாபர்களுக்குள் ஏற்படின் மிகக் கொடிது என்றுமறியவும்.

சர ராசி, உபய ராசியில் கிரஹங்கள் ஜாதகத்திலிருக்க, அவைகளுக்குள் திருஷ்டி ஏற்படின் அதன் பலம் சிக்ரம் தெரியும். சில காலம்தான் அப்பலன் நடைபெறும். ஆனால் ஸ்திர ராசியில் கிரகங்களிருக்க, பார்வை யேற்படின், அப்பலன் அதிகமாகவுமிருக்கும். அதிக காலமும் இருக்கும். அடுத்து வரும் புத்தகங்களில் விவரமாகவும், எவ்வித பலன் அளிக்கும், எப்பொழுது எதிர்பார்க்கலாம். எவ்வளவு காலம் நீடிக்கும் என சொல்லப்படும்.

மேலே கூறியுள்ள தூரம் சரியாக இருந்தால், அவ்வித பலனின் பலம் அதிகம். ஆனால் இவ்வித பலனை சற்று முன்னால், அல்லது பின்னால் இருந்தாலும் அளிக்கும் பலம் சற்று குறைவு. எவ்வளவு தூரம் முன் அல்லது பின் இருக்கலாம் எனபதைச் சொல்கிறேன். எப்படி சூர்ய உதயம் ஆகுமுன், வெளிசசம் வருகிறதோ, அவ்விதமே அந்த டிகிரி தூரம் ஏற்பட சற்று முன்பே பலனளிக்கும். எவ்விதம் சூர்ய அஸ்தமனமாகியும், வெளிச்சம் கொஞ்ச நேரம் இருக்கிறதோ, அவ்விதமே, இந்த பார்வை ஏற்பட சொல்லியுள்ள தூரத்திற்குச் சற்று மேலும் இருந்தாலும், அப்பலன் சற்று குறைந்த பலத்தில் நடைபெறும். இதற்குக் கீழ்கண்டவாறு கொள்ளவும்.

"பாரலெல்" வான மண்டல மத்ய ரேகைக்கு தெற்கில் ஒன்றும் வடக்கில் ஒன்றுமிருக்கிறது. அதன் தூரம், சரியாக இருந்தால் "பாரலெல்". 1 டிகிரி வித்தியாசத்திலிருந்து, வித்யாசம் இல்லாமலிருக்கும் வரை, "இணையும் பார்வை" யென்பர். பலனுண்டு: பலம் ஏறிக்கொண்டே வரும். அப்பால் சமமாயிருந்த பின், அதிகமாய்க் கொண்டுவரின் அதை "பிரியும் பார்வை" யென்பர். பலனுண்டு. குறைந்துகொண்டே வரும். இதற்கு இவ்விதமாக உதாரணம் கொடுக்கிறேன். ஓரிடத்தில் தீ மூட்டி, நன்றாக எரிகிறது. நாம் அதை நோக்கி நடந்து வரும் பொழுது சூடு அதிகமாகிக்கொண்டே யிருக்கும். அதன்

அருகாமையில் வந்து விட்டாலோ சூடு மிக அதிகம். அப்பால் நகர்ந்து, பிரிந்து போனல், சூடு குறைந்து கொண்டே வருவதுபோல், இந்த பார்வையென்று சொல்லப்பட்ட, சரியான டிகிரியில் இருப்பது, அல்லது அதை நெருங்கி இணையும் பார்வை, அல்லது சரியான டிகிரி தாண்டி பிரியும் பார்வையென்று கருத வேண்டும்.

180° பார்வைக்கும், கன்ஜெங்ஷன் என சேர்ந்து இருக்கும் 0° பார்வைக்கும், சூர்யன் சந்திரன் இவ்விருவர்களுக்குள்ளானல் 12° தூரமிருப்பின் பலன் இணையும் பார்வையில் ஆரம்பித்து, 12° தூரம் சென்றதும் பிரியும் பார்வையில் முடிவடையும். அதாவது சூர்யன் மேஷத்தில் 15°ல் இருப்பதாக எண்ணுவோம். சந்திரன் துலாத்தில் 15°ல் இருக்கும்பொழுது 180° தூரம். ஆனல் சந்திரன் துலாத்தில் 3° வந்ததுபே. இணையும் பார்வையால் பலன் ஆரம்பிக்கும். கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்து 180° சரியாக வந்ததும் முழு பலம். அப்பால் கொஞ்சம் கொஞ்சமாய் குறைய துலாம் 27° வந்ததும் பார்வை முடிவடையும். இவ்விதமே, சூர்யன் மேஷம் 15°ல் இருக்கும் பொழுது, சந்திரன் மேஷம் 3° வந்ததும் இணையும் பார்வை ஏற்பட ஆரம்பித்து, பலன் சிறிது சிறிதாக அதிகமாகி வரும். தூரம் 0° என்று அமாவாசையாயின் பலமதிகம். மேஷம் 27° சந்திரன் வர, சூர்யன் 15°லிருக்க, பிரியும் பார்வையால் பலம் குறைந்து, 27°யுடன் முடிவடையும். இவ்விதமே 180 டிகிரி, 0டிகிரி பார்வை, இதர கிரகங்களுக்கும் சூர்யனுக்கோ, சந்திரனுக்கோ பார்வை ஏற்படின் ‘ஆர்ப்’ ‘ORB’ என்பது 10 டிகிரியாகும்.

எல்லா கிரகங்களுக்கும் 120° 90° பார்வைக்கு 8 டிகிரி ‘ORB’ 60° பார்வைக்கு 7°; 45°; 135°; இவைகளுக்கு 4°. 30° பார்வைக்கு 2° இதர பார்வைகள் சரியாக இருக்க வேண்டும்.

இவைகளெல்லாம் ஒழுங்காக அறிந்துகொண்ட பின் கோசார பலன் பார்க்கும்பொழுது உபயோகப்படுத்தினல் ஆச்சரியப்படும்படி எந்த மணி நேரத்தில் எப்பலன் நடைபெறுமென உறுதியாக உண்மையை முன்னுடியே தைர்ய

மாகச் சொல்லலாம். தவருது—இப்பார்வையைப்பற்றி மேலும் சில உண்மைகள் அறிந்துகொள்ள வேண்டும். இவைகளை "கோசார பல நிர்ணயம்" எனும் புத்தகம் வெளி யிட்டதும் அதில் காணலாம். உழைத்து, இப்பார்வையின் பலனை ஒருவர் கவனித்துவரின் அதிலுள்ள உண்மையைக் கண்டு ஆனந்தமடைவார். இந்த ஆனந்தத்திற்கு ஈடே கிடையாது. சாஸ்திரம் உண்மைதான் என ரூபிக்க இப் பார்வையின் உண்மையான குணுதிசயங்களை விவரமாகக் கற்றுணர வேண்டும்.

அடுத்தபடியாக 12 வீடுகளைப்பற்றி சொல்கிறேன்.

ஏண்ணு? அதுதான் மேஷம் முதல் மீனம் வரை 12 ராசிகளைப்பற்றி சொன்னுயே. இப்பொழுது ஏதோ 12 வீடுகள் என்கிருயே இதென்ன?

மேஷம் முதல் மீனம் வரை 12 ராசிகள் வான மண்ட லத்திலிருப்பதைப்பற்றி சொன்னேன். இனி ஒருவர் ஜனித்த காலத்தில் கிழக்கே உதயமான பாகத்தை லக்னம் என்கிருேமல்லவா. அந்த லக்னத்தை ஒன்ரும் வீடு என்றும் ஸவ்யமாக ப்ரதக்ஷிணமாக வரும்பொழுது அடுத்ததை 2 என்றும் அதற்கடுத்ததை 3 என்றும் இவ் விதம் எண்ணிவரும் 12 வீடுகளின் குணுதிசயங்களையும் அவைகள் மூலம் என்ன அறிய முடியுமென்றும் சொல் கிறேன்.

# 12 பாவங்கள்

முதலில் ராசிக்கும் பாவத்திற்குமுள்ள வித்யாசத்தை எடுத்துரைக்கிறேன்.

ராசி மேஷம் முதல் மீனம் வரை 12 ஆகும். ஒவ்வொன்றும் 30 டிகிரியேதான்.

ஆனல் பாவமோ எப்பொழுதும் மாறிக்கொண்டே வரும். பூமத்ய ரேகையிலிருந்து வடக்கேயோ தெற்கேயோ வர வர ஒவ்வொரு அக்ஷரேகைக்கும் பாவம் மாறும். இவ்விதமாக பாவத்தை ஸ்புடம் செய்ய துல்யமாக கணக்கிட வேண்டும். அதற்கு ஓர் அட்டவணை "Tables of Houses" தேவை. ஸைடீரியல் நேரத்தை (Sidereal Time) எடுத்து கணக்கிட வேண்டும். கணக்கிடவும் ஒவ்வொரு கிரகத்தின் பலம் வலுவு அறியவும் ஓர் புத்தகம் வருகிறது. அதைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம். முதலில் இதை தெரிந்து கொள்ளலாம். இம் முறையே நன்று என்று தெரிகிறது.

கிழக்கே உதயமாகும் டிகிரியே ஜனன லக்னம். அல்லது ஏதாவது ஓர் கார்யம் துவக்கும்பொழுது கிழக்கே உதயமாகும் டிகிரியே லக்னம். லக்னமுதயமான பின்பு அப்பால் உதயமாய்க்கொண்டே வருகிறதே அதில் அடுத்து உதயமாய்க்கொண்டுவரும் சுமார் 30° லக்ன பாவம் அல்லது முதல் பாவம் அல்லது ஒன்ரும் பாவம்: அதற்கடுத்தாற்போல் உதயமாக வேண்டிய பாகத்தில், சுமார் 30° இரண்டாம் பாவம் அப்பால் உதயமாக வேண்டிய சுமார் 30° மூன்ரும் பாவம். இவ்விதமே பார்க்க வேண்டும்.

லக்னம் உதயமாவதற்கு சற்று முன்பாக ஏற்கனவே உதயமாய்விட்ட 30°யும் பன்னிரண்டாம் பாவம். அதற்கு முன்பே உதயமான பாகம் சுமார் 30° 11-ம் பாவம், அதன் முன்பே உதயமான சுமார் 60 டிகிரி 10-ம் பாவம். இவ்விதம் பார்க்க வேண்டும்.

கொஞ்சம் லகுவாகச் சொல்கிறேன். வானம் உதய மாகும்: போல் தோன்றும் பாகம் லக்னம் அல்லவா. இதுவே 12-ம் பாவம் முடிவுமாகிறது. கிழக்கே உதய மாகும் பாகம், மேற்கே அதே சமயம் அஸ்தமிக்கும் பாகம், இரண்டும் 180 டிகிரி தூரம். தலைக்கு நேராக யிருப்பதை 'உச்சி' என்கிறோம் (MERIDIAN) ஆகாயத்தில் தென் படும் வீடுகள் உதய டிகிரி முதல் கிழக்கிலிருந்து மேல் நோக்கி வந்து மேற்கே அஸ்தமிக்கும் டிகிரியுடன் பார்த் தால் 12, 11, 10, 9, 8, 7 வீடுகளாகும். நமக்கு வானத்தில் புலப்படாமல் பூமியின் கீழ் இருப்பது போல் தோன்றும் பாகம் 1, 2, 3, 4, 5, 6ம் வீடுகளாகும். வீடு என்றால் பாவம் என்று அறியவும். ராசி என்றால் மேஷம். ரிஷபம்...மீனம் என பொருள் கொள்ளவும். சந்திரன் நின்ற வீட்டைத் தான் நாம் 'ராசி' என்றாலும் 12 ராசிகளையும். ராசியென்றும சொல்கிறோம். லக்னம் 2ம் வீடு என்கிற பொழுது. பாவத் தைப் பற்றி பேசுகிறோம். மூன்று ஜனனங்களை உதாரண மாய் எடுத்துக்கொள். மிதுனம் 2°. மிதுனம் 15°. மிதுனம் இவ்விதமாக கிழக்கே வானம் உதயமாகும் பொழுது ஒருவருக்கு மூன்று குழந்தைகள் பிறந்ததாக எடுத்துக் கொண்டால் ;

(1) முதல் குழந்தைக்கும், இரண்டாம் குழந்தைக்கும் ஜனன நேரவித்யாசம் சுமார் எவ்வளவு தெரியுமா ?

தெரியும். வானமண்டலம் 1° நகர, 4 நிமிஷங்களா கின்றன. இங்கே 15ல் இரண்டு போக 13° ஆகவே $4 \times 13 =$ சுமார் 52 நிமிஷம் பொறுத்து ஜனனம்.

நானே சொல்கிறேன். மூன்றாவது ஜனனத்திற்கும் 29ல் 15 போக. 14 வருகிறது. $4 \times 14 = 56$. இரண்டாம் குழந்தை பிறந்தபின் 56 நிமிஷங்கள் கழித்து மூன்றாம் குழந்தை ஜனனம்.

(2) (a) மிதுனம் 2° முதல் சுமார் கடகம் 2° வரை முதல் ஜனனத்திற்கு லக்ன பாவம் (b) மிதுனம் 15° முதல் சுமார் கடகம் 15° வரை இரண்டாவது குழந்தைக்கு லக்ன. பாவம் (c) மிதுனம் 29° முதல் கடகம் சுமார் 29° வரை மூன்ரும் குழந்தைக்கு லக்ன பாவம். இவ்விதமே, கணக்கிட வேண்டும். கணக்கிட்டுவரின் முதல் குழந்தைக்கு ரிஷபம் 2° முதல் மிதுனம் 2° வரை 12ம் பாவம் இரண்டாவது குழந்தைக்கு ரிஷபம் 15° முதல் மிதுனம் 15° வரை 12ம் வீடு. ஆகவே, பாவம் அல்லது வீட்டின் பலனை அறியும் பொழுது இவ்வீடுகளில் அல்லது பாவங்களில் இருக்கும் கிரகங்களின் பலனை, இவ்வீடுகள் அல்லது பாவங்கள் அறிவிக்கும் பலன் கொடுக்குமென அறிய வேண்டும்.

உதாரணமாக வைகாசி மாதம் 18 தேதிக்கு, சூர்யன் ரிஷபம் 18° இருப்பதாக வைத்துக் கொண்டால், முதலில் ஜனித்த குழந்தை சூர்ய உதயமாகி சுமார், 14+4= 56 நிமிஷங்கள் கழித்து ஜனித்திருக்கும். சூர்யனிருக்கும் ஸ்திதிக்கும், லக்னத்திற்கும் 14° தூரம். ஆகவே சூர்யன் விரயபாவம் எனும் 12 பாவத்திலிருக்கிறது. அப்பால் மேலும் 52 நிமிஷங்கள் பொறுத்து பிறந்திருக்கும் இரண்டாம் குழந்தை மிதுனம் 15° லக்னம். ரிஷபம் 15° வரை 12ம் பாவம். ஆகவே சூர்யன் 12ம் வீட்டில் அல்லது 12ம் பாவத்திலிருக்கிறது. அப்பால் மூன்ருவது குழந்தைக்கு மிதுனம் 29° முதல், ரிஷபம் 29° தரை பாவம், அப்பால் ரிஷபத்தில் பாக்கி 1ம் பாவமாவதால், சூர்யன் ரிஷபம் 18° யிலிருப்பதால் சூர்யன் 11ம் வீடு அல்லது 11ம் பாவத்திலிருப்பதாக எடுக்கவேண்டும.

பலனை அறியும்பொழுது, ரிஷபராசி ஏறிய சூர்யன் முதல் ஜனனத்திற்கு 2ம் பாவம், இரண்டாம் பிறவிக்கு, 12ம் பாவம், 3ம் ஜனனத்திற்கு 11ம் பாவத்திலிருப்பின் எப்பலனென அறியவேண்டும். ரிஷப ராசியிலுள்ள சூர்யனின் குணம், எப்படியிருக்கும்; 12ம் வீடாயின் எப் பலனையளிக்கும்; 11ம் வீடானல் எப்படியென ஆராயவேண்டும்; 12ம் வீடோ நஷ்டம். 11ம வீடோ லாபம் எனப்படும். மூவருக்கும் சூர்யன் ரிஷபத்தில் தானிருக்கிறது. மூவருக்

கும் லக்னம் மிதுனத்தில்தானிருக்கிறது. ஆனால் இதே ஸூர்யன் எவ்விதம் இருவர்களுக்கு 12ம் பாதத்திலிருந்து நஷ்டத்தையும் மூன்றும் குழந்தைக்கு இருந்து லாபத்தையுமளிக்கிறதென அறியவும். இவ்விதம் பாவம் பாராமல் பலன் சொல்லக்கூடாது. பாவமறியும் கணக்கைச் சொல்வது இந்த புத்தகத்தில் சாத்யமில்லை. ஆகவே அடுத்து வருவதில் கவனிக்கவும். அதிலேயே ஹிந்துக்கள் 'பாவம்' போடும் விதமும் உரைக்கப்படும்.

எவ்விதம் உலகத்திலுள்ள சகல விவகாரங்களையும் ஆண் பெண் என்றும் சர, ஸ்திர, உபயமென்றும் ராஜஸ் தாமஸ ஸாத்வீகமென்றும் அக்கினி பூமி வாயுஜலம் என்றும் பிரித்துள்ளனரோ அவ்விதமே 12 வீடுகளை (பாவம்) கொண்டு சகல விஷயத்தையுமறியலாம்.

ஒவ்வொரு வீடும் எதைக் குறிக்கிறதென ஒவ்வொன்றாக சொல்கிறேன்.

## லக்னம்

வான மண்டலம் கிழக்கே உதயமாகும் டிகிரி முதல் அடுத்து உதயமாக வேண்டிய பாகத்தில் சுமார் 30°.

மறுபெயர்கள்: கல்பம்; உதயம்; அத்ய; தனு; ஜன்ம; ஹோரா; லக்னம்; க்கிரியா.

லக்னத்திலிருந்து ஒருவரின் குணம் ஆரோக்யம் ஆயுள் இவைகளை அறியலாம். லக்ன பாவத்தில் கிரகங்களில்லாவிடில் லக்னம் எந்த பாகத்திலிருக்கிறதோ அந்த பாகத்திற்கு 'ராசி' எனும் தலைப்பின்கீழ் கூறியவற்றைப் பார்க்கவும். ஏதாவது ஓர் கிரகம் லக்ன பாவத்தில் இருந்தால்; ராசியின் குணத்துடன்; இந்த கிரகத்தின் குணத்தையும் சேர்த்துக் கொள்ளவும். இவ்விதமே ஓர் கிரகம் பார்த்தாலும்; பார்க்கும் கிரகத்தின் குணத்தையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். சுபர் சேர்க்கை; பார்வையிருப்பினும்; லக்னாதிபதி வலுத்தாலும் ஆரோக்யம் நன்றாகயிருக்குமெனறும்; ஆயுளும் அதிகமாக யிருக்குமென்றும் அறியவும். இவ்விதமே ஒவ்வொன்றிற்கும் கவனித்து பலனை

அறியவேண்டும். லக்னம் தலையைக் குறிக்கிறது. பாபிகள் லக்னத்திலிருப்பின், அந்த பாபியின் தசை; புக்திகளில் தலையில் காயம் அடிபடுவது வடு ஏற்படுவது போன்ற பலனும் ஜனன காலத்திலேயே தலையில் மச்சமிருக்குமென்றும் புரிந்துகொள்ளவும்.

நிறம் வளர்த்தி சரீர தோற்றம். கீர்த்தி சுகமுண்டா அல்லது துக்கம் பிடிக்கப்பட்டவரா. ஆபத்துகள் இருக்குமோ இராதோ என லக்னத்திலுள்ள கிரகங்களின் சுப அசுப பலன்களையும்; லக்னாதிபதியின் பலத்தையும் லக்னாதிபதியுடன் சேர்ந்திருக்கும் கிரகங்களின் பலனையும் சேர்த்து அறிவதுடன்; நடக்கும் தசாநாதன் புக்திநாதன் லக்னத்திற்கு சுபஸ்திதியில் இருக்கிறதா; அசுபஸ்திதியில் இருக்கிறதா என கவனிக்கவேண்டும். தன் ஜனன இடத்திலேயே வாழ்க்கை நடத்துவாரா. இடப்பெயர்ச்சி யுண்டா எனவும் சமுத்ரத்தில் கப்பலில் சாமான் வருமேயானல் கப்பலின் நன்மை தீமையைப்பற்றியும் நண்பர்களின் சகோதரர்களைப்பற்றியும். அரசர்களின் பிதாவைப்பற்றியும் சத்துருவின் மனையாளைப்பற்றியும் தன்னுடன் கூட்டாளியாக தொழில் புரிவரின் மனைவியைப் பற்றியும். வேலைக்காரர்களின் மரணத்தைப் பற்றியும் புத்திரர்கள் வெளிநாடு அல்லது தூரதேசம் செல்வதைப் பற்றியும். கேள்வி கேட்பவர்கள் மனதைப்பற்றியும் நாமறியலாம். மேலும் மற்றவர் தனத்தை வைத்து தான் சூதாடுவது. இதரர் பணத்தை தான் பயன்படுத்துவது இதரரை கேலி செய்வது ஆடுமாடுகளைக் காப்பாற்றுவது. தன் இனத்தார் மூலம் மதிப்பு அல்லது அவமதிப்பு அடைவது. தூக்கம் பொதுநலப் பணி இவைகளையும் அறியலாம்.

"ஆமாம். மதிப்பு. அவமதிப்பு என்று இரண்டையும் கூறின் எதை எடுத்துக் கொள்வது ?"

"லக்ன பாவத்தில் சுபக்ரஹமிருப்பின், மதிப்புண்டாகும். பாபக்ரஹமிருப்பின் அவமதிப்பும். அகௌரவமுமென கொள்ள வேண்டும்."

"ஆயுள் பூராவுமா இப்பலன் ?"

"இல்லை. எந்த கிரகம் பலனை குறிக்கிறதோ அந்தக் கிரகத்தின் தசை புக்தியிலென கொள்ளவும்"

## 2-ம் பாவம்

மறுபெயர்கள்: வாக்கு. அர்த்தம். புக்தி. நயனம். ஸ்வ. குடும்ப.

ஒருவரின் நகம். நாக்கு. கண். மூக்கு. தொண்டை. பல்லு. முகம், கன்னம். பேசும் திறமை. ஊமை போன்றிருப்பது விகடம். தன வசதி. தனவிருத்தி. ஸ்வயமாக சம்பாதிப்பது, நகை, விலையுயர்ந்த ஆபரணம். முத்து, வாஸனை த்ரவியம், வாஸனை உபயோகிப்பது, இதரர்களை காப்பாற்றுவது, பழைய பழக்க வழக்கங்களில் நம்பிக்கை, குடும்பம், உறவு, அவர்களுடன் நட்பா, பகையா அவர்கள் மூலம தனவசதியுண்டா இல்லையா, அவர்கள் மூலம் தன விரயமா, தனம் சிலவு செய்யும்பொழுது சிக்கனமாகவா, நிதானமாகவா, பெருவாரியாகவா, உண்டும் பண்டங்கள், வாங்கும் சாமான்கள் என்ன உலோகம், மதிப்புடையதா அல்லது கேவலமானதா, தன்னையண்டி பிழைப்பவர், வரவும் செலவும்; படிப்பும் பாண்டித்யமும், சுதந்திரத்தையும், கடன் கொடுத்ததைப்பற்றியும், சரசாமான்களைப் பற்றியும். புதையல், சொர்ணம் ரத்தினம் கம்பளம் நவரத்னம் வெற்றி தோல்வியைப் பற்றியும், அனுகூல சத்துருவாகயிருப்பவரின் சகோதரர், நண்பர் அல்லது மறைந்து கெடுதல் செய்வோரின் சகோதரர், நண்பர்களின் தகப்பனரைப் பற்றியும், குழந்தைகளின் பெருமை, மதிப்பைப்பற்றியும் மனைவியின் ஆபத்தையும் கஷ்டத்தையும் குறித்து தனக்கும் மாரகதத்தைக் குறித்தும், கூட்டாளிக்குண்டாகும் கஷ்ட நஷ்டங்களைப்பற்றியும் ஒருவரின் சத்துருவிற்கு ஏற்படக்கூடிய தீய பலனைப்பற்றியும், பயிர், தான்யங்கள்; அணியும் ஆபரணங்களைப்பற்றியும், இரண்டாம் வீட்டைக் கொண்டு அறியவேண்டும்.

இரண்டாம் வீட்டினதிபதி வலுத்து, அவர் தசை புக்தி நடைபெறும்பொழுது, மேற் கூறியவைகளில் தனக்குத் திருப்திகரமானதெல்லாம் நடைபெறும்.

ஆனால் வீட்டினதிபதி பலஹீனமானால் அவர் தசை புக்திகளில் மேற்கூறியவை மூலம் கஷ்டம். உதாரண மாக, துலா லக்னம், 2ல் கேது. விருச்சிகத்தில் இருப்பதுமன்றி இரண்டாம் பாவம். இவருக்கு திக்கு வாயாகயிருக்கலாம். இது கேதுவின் பாபத்தைப் பொறுத் திருக்கிறது. அதிக க்ரூரமாயின் ஊமையாகவுமிருக்கலாம். இங்கேயே செவ்வாயிருப்பின், நல்ல பேச்சு. தாராள சிலவு என்று கொள்ளவேண்டும். சனியிருப்பின், இழுத்து இழுத்துப் பேசுவார். லோபி என்று கொள்ளவேண்டும். குரு இருப்பின், நல்ல வழியில் சம்பாதிப்பார். பேசுவது இன்பமாகவும் நன்ருகவுமிருக்கும். தர்ம வழியில் தன வரவு நிதானமாக சன்மார்க்கத்தில் சிலவு செய்வார். கடமையை செலுத்துவாரென கொள்ளவேண்டும்.

இவ்விதம் ஓர் பாவத்தில் இருக்கும் கிரஹத்தின், சுப அசுபபலனையும், கிரகத்தின் குணத்தையும் சேர்த்து, பலனை அறியவேண்டும். அப்பலன் அந்த கிரகதசை புக்தி களில் நடைபெறும். நன்ருக பேசிவந்தவர் ஊமையாவது: ஊமையாயிருப்பவர் அப்பால் பேசுவது எல்லாம் தசை மாறுதலால் ஏற்படும்.

## 3-ம் பாவம்

மறுபெயர்கள் : துஷ்சிக்ய; விக்ரம்; ஸஹோதர; வீர்ய தைர்ய ; கர்ண :

தனது கைகள், தோளாப்பட்டை, மார்பின் மேல் பாசம். காதுகள், கால்கள். தனது தாய், தன் ஜனனத்திற் கப்பால் அடுத்த:ப்ரசவத்திற்கு தரிக்கும் கெர்ப்பம். தம்பி தங்கை இளைய சகோதரர், தன் மனநிலை; ஆயுள், தன் பக்கத்திலிருப்பவர், சொப்பனம், அறிந்துகொள்ளும் சாமர்த்யம். மனக் குழப்பம், சிறு பிரயாணம், கடிதம், ரெயில்வே, யோகம். அறிமுகமான மனிதர், ஆனால் அதிக ஸ்னேகமுமல்ல தன் சுகத்திற்கு உழைக்கும் சேவகர்கள்; தேவதாபக்தி, பிதாவின் மாரகம், கடன், சாந்தம், கோபம், கார்யவிக்னம் கார்யசித்தி, விஷப் பண்டங்கள், வீர்யம், வீர்யமற்ற நபும்சகர், காதிலணியும் ஆபரணம், காது

அறுபடுதல், காதில் நோய்; ஜெயம் அல்லது தோல்வி, ஸஹாயம் அல்லது தன்னந்தனியே முயற்சி செய்வது, அனுகூலம், ப்ரதிகூலம், கணக்குப்பிள்ளை, குமாஸ்தா, குழந்தைகளின் நண்பர்கள். நண்பர்களின் குழந்தைகள். சேவகனின் வியாபாரம், அரசரின் நோய், பெற்றோரின் ரகஸ்ய எதிரிகள். பழதினுசு. அண்ணன் தம்பிகளுக்குள் பாகம் போடுவது. ரஸ்தாவின் பக்கத்திலுள்ள இடங்கள்.

உதாரணமாக, 10ம் வீடு ஜீவனத்தை குறிப்பதால், 10க் குடையவர், 3ம் பாவத்திலிருப்பின் ரெயில்வே உத்யோகம் கிடைக்கலாம் - வைத்யரானால் காதுநோய் சிகிச்சை செய்வார். பாபக்ரஹம் 3லிருக்க அந்த க்ரஹத்தின் புக்திவரின்; காது வலி, காதில் நோய் பலத்த பாபி 3லிருக்க, காது மந்தம், செவிடு என பொருள்கொள்ள வேண்டும். 3ல் சுபரிருப்பின், வரும்கடிதம் உற்சாகத்தை யளிக்கும். சிறு பிரயாணம் செய்வதால் லாபம், சந்துஷ்டி. சுபர் இருக்க, இளைய சகோதாருண்டு. பாபியிருப்பின், சகோதரர் இருக்கலாம். ஒற்றுமையிராது. சகாயமிராது. பாபியின் தசை, புக்திகளில் விரோதமுண்டாகும். 9ம் வீட்டிற்கு 7ம் வீடானதால், தகப்பனுருக்கு மாரக வீடாகும்: 11ம் வீடு நண்பர். 5ம் வீடு புத்ரர். ஆகவே 11ம் வீட்டிற்கு 5ம் வீடாவதால். நண்பரின் புத்ரர். 3ல் சுபரிருக்க, சர ராசியோ, உபய ராசியோ ஆகி, லக்னாதிபதி சம்பந்தமுமிருந்தால்தான் தன் நண்பர் குழந்தைகளுடன் சிறு பிரயாணம் செய்வாரென கொள்ளவேண்டும். 3ல் பாபியிருந்தால் மேற்கூறிய இடங்களில் மச்சமிருக்கும். ராகு, அல்லது கேது இருப்பின் கண்டிப்பாக இருக்கும். செவ்வாயுடன்கூடின், காதில் நோய் நிச்சயம். 3ல் சுபரிருக்க, அவரே 6ம் வீட்டுக்குடையவராயின், தனக்கு அட்டெண்டென்ட்; ப்யூன்போல் வேலைசெய்ய ஆளிருக்கும். இவ்விதம் யூகிக்கவேண்டும். 10க் குடையவர் 3லிருக்க பழதினுசு விற்கலாம். சுக்ரனுடன்கூடின்: சனியுடன்கூடின் கிழங்கு — ஏன்? சுக்ரன் பழத்தைக் குறிக்கிறது. சனி பூமிக்குள் இருப்பதை குறிக்கிறது. ஆகவே இவ்விதம் பொருள் கொள்ளவேண்டும்.

## 4-ம் பாவம்

மறுபெயர்கள்: பாதாள வ்ருத்தி; ஹிபுக; க்ஷிதி (நிலம்) மாத்ரி (தாய்) வித்யா (படிப்பு): யான (வாஹனம்) அம்பு (தண்ணீர்) கேஹ (வீடு), சுக; பந்து; சதுஷ்டய.

ஹ்ருதயத்திற்கு சற்று மேலும், காலர்போனுக்கு கீழுமுள்ள பாகம். வயிறு என்றும் சிலர் கூறுகின்றனர். தனக்கு கிடைக்கும் புதையல், பூமிக்குள் இருக்கும்பண்டங்கள் (4ல் 10க் குடையவன் சனி: சுக்ர, சந்திரனுடனும் கூடியிருக்க பெட்ரோல் மூலம் தனலாபம்)தான் கர்ப்ப வாசம் செய்த தாய், தானிருக்கும் வீடு, தான் சாகுபடி செய்யும் நிலம்; தானேறிச் செல்லும் வாஹனம் குடிக்கும் பாலை கறக்கும் பசு, படுக்கும் படுக்கை, அணியும் ஆடையாபரணம் கடைசியாக தான மடியும் காடு, தன் சொந்த ஊர், சுரங்கம், படிப்பு. வித்தை, ராஜாங்கம் யாத்ரை. ரிக்ஷா, படகு, எண்ணெ தேய்த்துக்கொள்வது, கிணறு, கிருஷி நீர், பால், வாசனை த்ரவ்யம், புகழ் விவாதம், சாட்சி, புஸ்தகம், அபூர்வமான மூலிகை, மருந்து, நம்பிக்கை, அனுவசியமாகக் குற்றம் சாற்றப்படுவது, கூடாரம், தோட்டம், குளம் வெட்டுவது, பொது ஜனங்களுக்காக கட்டும் விடுதி, சுமைதாங்கி, சத்திரம், கொட்டகை, ஒருவர் சேமிக்கும் பொருள்கள், வீட்டின் வாசற்படி, ஓர் முடிவு, பிதுர்ராஜ்யம், தான் வீடு வாங்குவது அல்லது விற்பது, குடக்கூலிக்கு இருப்பது, திருட்டுபோன சொத்தை எங்கே வைத்திருக்கிறரென கண்டுபிடிக்கும் சாமர்த்யம், சுரையானின் புத்து, வேதத்தின் பொருளை விளக்குவது, குதிரை, பசு, எருமை, யானை, தான்யம் விவசாயப்பொருள்கள்; தானிருக்குமிடம் குக்கிராமமா; சிறிய நகரமா, பெரிய நகரமா என்பது, ஒரு கார்யத்தின் பூர்த்தி.

தனது அடுத்த சஹோதரர் 3ம் வீடு; 2ம் வீடோ தனம், ஆகவே 3ம் வீட்டிற்கு 2ம் வீடான. 4ம் வீடு ஸஹோதரனின் தன வரவு சிலவைக் குறிக்கும். 4ல் சுபனிருக்க; அந்த கிரகதசை, புக்தி நடக்கும்பொழுதும்; 4ம் வீட்டிற்குடையவன் காலங்களிலும்; தம்பிக்கு

தனவசதி அதிகமென கொள்ள வேண்டும். 4ம் பாவம் 5ம் வீட்டிற்கு 12ம் வீடாவதால் புத்ரர்களின் மறைந்த விரோதிகளை 4ம் வீடு குறிக்கும். 4ம் வீடோ 7ம் வீட்டிற்கு 10ம் வீடு. ஆகவே கணவனின் தொழில் ஜீவனம். 11ம் வீட்டிற்கு 6ம் வீடானதால் நண்பரின் நோயையும்; கஷ்டத்தையும் அவனுக்குண்டாயிருக்கும் விரோதத்தையும் குறிக்கும். 6ம் வீட்டிற்கு 11ம் வீடாவதால் சேவகர்களின் நண்பர்களை குறிக்கும். 4ம் வீட்டிற்கு 2ம் வீடாகி 5ம் வீட்டிற்குடையவன் பாபியாகி 4லிருக்க; 4லிருக்கும் அந்த பாப கிரக புக்தியில் திருட்டு போனால்: சேவகரின் நண்பர் எடுத்திருக்கக்கூடுமென யூகிக்கலாம், 2ம் வீடு தன வரவு. 4ம் வீட்டிற்கு 2ம் வீடு; ஆகவே இவ்விதம் யூகிக்கவேண்டும்.

## 5-ம் பாவம்

மறுபெயர்கள்: தீ; தேவ; ராஜ: பித்ருநந்தன, பஞ்சக: ஹிருதயம் மார்பு முதுகு புத்திரன் புத்திரி மனைவியின் மூலம் கிடைக்கும் அத்ருஷ்டவசமான லாபம் பூர்வபுண்ணியம் மந்திரம் தாய் பாட்டன் மறு ஜன்மம் யோகாப்யாசம்; தேவதா பக்தி மடம் சத்திரம் ஆலயம் பிதுர்பக்தி மந்திரி புக்தி சக்தி தகப்பனார் செய்துள்ள தர்மங்கள்; கொடை நன்னெறி நூல், புனிதமான கடிதங்கள் பிதாவின் தனம்; கெர்ப்பம் சில காலம் பொருத்து வருவதை இப்பொழுதே ஊகித்து பணிபுரிவது. ரஹஸ்யம் கடிதம் எழுதுவது நட்பு ஏதாவது ஒரு வியாபாரத்தில் ஈடுபடுவது குபேரனைப் போன்ற ஐசுவர்யம் பெறுதல், அன்னதானம் பாப புண்யத்தை ஆராய்வது ஆழ்ந்து யோசனை புரிவது, மேள தாளம் கூடிய சந்தோஷ நாள், அதிக திருப்தி அதிகப் படிப்பு ஞானம் கிராம முன்சிப் பரம்பரையாக வரும்கெளரவ உத்யோகம். முதல் குழந்தையின் தேக ஆரோக்கியம். இரண்டாவது தம்பியின் குணாதிசயங்கள்; லாட்டரி பந்தயம் சினிமா சங்கீதம் நடனம் சீட்டாட்டம் போட்டி. தூதர்களின் வெற்றி; அரசரின் மரணம் வேலைக்காரர்களின் மறைவான சத்துருக்கள்.

மூன்றும் வீடுத் தம்பியைக் குறிக்கிறது. ஆகவே மூன்றும் வீட்டிற்கு மூன்றும் வீடான ஐந்தாம் வீடு தம்பியின் தம்பியைக் குறிக்கிறது. புத்தி கூர்மைக்கும் உபவாச தெய்வத்திற்கும் தனக்கு தெய்வ அனுகூலத்தால் கிடைத்துள்ள பாக்கியத்திற்கும் எதிர்பாராது திடீர் என போட்டியில் கிடைக்கும் தனத்திற்கும் ஐந்தாம் வீட்டைக்கொண்டு பார்க்கவும். 12க் குடையவன் 5லிருப்பின் பந்தயத்தால் சகலமும் இழப்பார். லாபாதிபதியான 11க் குடையவனிருப்பின் பந்தயத்தில் லாபம்.

## 6-ம் பாவம்

மறுபெயர்கள்: ரோக, அம்ஸ, சஸ்திர, பாய (அபாய), ஷஷ்ட, ருபு (விரோதி) க்ஷட (காயம்)

தனது தேக ஆரோக்யம் எவ்விதம் பாதிக்கப்படுமென்றும், நோயையும் ஜீரணக் கருவிகளையும், தொந்தியையும் இன்டென்ஸ்டைன்ஸ், தான் புரியும் தொழிலையும்; தனது உணவையும், உடையையும், மாமனையும், சத்ருக்களையும், கடனையும், திருட்டையும், அபகீர்த்தியையும், அபாயத்தையும் காயம், ரணம், பயம், பங்காளியையும், பீடை, ஆயுதம் பெண்களால் பயம் அவமதிப்பு, பாம்பால் ஆபத்து, சிறைவாசம், விஷபாதை, ஜலகண்டம், அங்கஹீனம், கெட்ட நடிவடிக்கை. தனது சேவகர், கீழ்பட்டோர் தாழ்ந்த குலத்தோர், ஆடுமாடு, ஆசைப்பட்டு வளர்க்கும் மிருகங்கள், பக்ஷிகள், குடியிருப்பவர், குடைக்கூலிக்கு எடுப்பவர், குத்தகைக்கு எடுத்து பாடுபடுபவர், தாயின் சகோதரர், நண்பரின் மரணம், மனைவியின் ரகஸ்யவிரோதி கணவனின் மறைந்திருக்கும் விரோதி, முதல் குழந்தையின் தனப்பெருக்கு, தனவசதி, பாட்டாளிகள் இவைகளைப் பற்றி 6-ம் வீட்டிலிருந்தும், 6-ம் வீட்டிலிருக்கும் கிரஹங்களைக் கொண்டும் 6-ம் வீட்டைப் பார்க்கும் கிரகங்களினின்றும், 6-ம் வீட்டினதிபதியையும் அவரது சேர்க்கை பார்வையையும்கொண்டு அறிய வேண்டும்.

ஆறும் வீட்டில் சுபரிருப்பின் மாடு கன்றுகளுண்டு என்றும், அசுபர் இருப்பின், அசுபர் தசாபுக்தி காலங்

களில் அவைகளுக்கு கஷ்டமென்றும், இராது என்றும் யாவற்றையும் கவனித்துப் பலன் சொல்லவேண்டும், 6-ம் வீட்டுக்குடையவன்யார்: எந்த ராசியில் இருக்கிறு னென அறிந்து அவனது தசை, புக்தி காலத்தில் மேற்படி நோய் வருமென எடுத்துக்கொள்ள வேண்டும். 'த்ருஷ்டி' சுபமானுல் நனறு. அசுபமாயின் கெடுதல். இதைப்பற்றி அடுத்து வரும் பாடத்தில் விவரிக்கிறேன்.

## 7-ம் பாவம்

மறுபெயர்கள்: ஜாமித்ர, காம, கமண, களத்ர ஸம்பத், த்யூன, அஸ்த, ஸப்தம: இடுப்பு, மூத்திரப்பை, வயிற்றின் அடிபாகம், அபென்டிஸைடிஸ், ப்ளாடர், மனைவி அல்லது கணவன், தொழிலில் கூட்டாளி, கடன் கொடுப்பவர், புணர்ச்சியின்பம், தன்னுடன் வழக்காடு பவர், சண்டை, இழந்ததைத் திரும்ப பெறுவது, ப்ரயா ணம், சூது, சௌக்யம், வியாபாரம், விவாகம், போகம், சௌந்தர்யம், அலங்காரம், நல்லவருடன் சேர்க்கை, சன் மானம், தான் வசிக்குமிடம், இடப்பெயர்ச்சி, கற்பு, கற்பில் லாதவருடன் பகை, சன்மார்க்கம் அல்லது துன்மார்க்கம், வாசனை, சங்கீதம், புஷ்பம், உரைப்பு உண்பது, வெற்றிலை போடுவது, ப்ரயாணத்தில் நடுவிலேயே தங்கிவிடுவது, தைரியம். ஞாபகக் குறைவு, வீர்யம், அல்லது பேடி எவ்வளவு களத்ரம், அம்ருதம், கஷாயம், நெய், தானம், அதிகார அழிவு, எதிரி நசிப்பது, மற்றொரு வகையில் பணம் முடங்கிவிடுவது. ஆட்சேபம். ஸ்வீகாரப் பிள்ளை, பரதேசம், திருட்டு. பிக்பாக்கெட், பாட்டி, ஒப்பந்தம், பங்கு ஈட்டில் ஸ்பெகுலேஷன். போட்டி, சண்டை. மூன்றுவது கர்ப்பம் ஏதாவது ஒரு கர்ப்பம் சிதறினுலும், அதையும் எடுத்துக்கொள்ளவேண்டும். தன் மனைவிக்கு இரண்டா வது கர்ப்பம். தன்னுடைய நோயைக் குணப்படுத்தும் வைத்யர். வ்யாபாரத்திலுள்ள வாடிக்கைக்காரர்கள். இடப் பெயர்ச்சியால் நன்ரு, தீங்கா, தம்பியின் புத்ரர், தாயின் வீடு, தகப்பனுரின் லாபம், தகப்பனுரின் நண்பர். சேவ கரின் சொத்து, அரசரின் மதிப்பு, நண்பருடைய மதம், நண்பரின் தூரதேச ப்ராயாணம்.

தகப்பனாரின் நண்பர் கூட்டாளி என்றதால், ஒருவர், தனது தகப்பனின் நண்பரை அணுகி, கூட்டாளியாக ஏற்பட்டு தொழில் புரியலாமென அறியலாம். தம்பியின் புத்ரரும், ஸ்வீகார புத்ரரும் கூறப்பட்டதால், தம்பிக்குக் குழந்தையுண்டாயின், அவர்களில் ஒருவரை ஜாதகன், புத்ரரில்லாவிட்டால் ஸ்வீகாரம் எடுத்துக் கொள்ளலாம். வளர்த்து வரலாம். சேவகரின் சொத்தை ஏழாம் வீடு குறிக்கிறது. 3, 12-க்குடைய கிரஹம் 7-லிருப்பின் ஜாதகனுக்கு விரயம். ஆனால், சேவகருக்கு லாபம். சேவகருக்குப் போனஸ், இனாம் கொடுப்பதால், என கொள்ள வேண்டும்.

## 8-ம் பாவம்

மறுபெயர்கள் : ரந்த்ர, ஆயுள், அஷ்ட, ரண, ம்ருத்யு, விநாஸ, நைதன, அஷ்டமம்.

ஒருவரின் மர்மஸ்தானம், மூலம், ஆஸனவாய்.

ஒருவரின் ஆயுள், சந்தோஷம், தோல்வி, இன்ஸ்யூரன்ஸ், ப்ராவிடண்ட் பண்ட், முகத்தில் விகாரம், மூத்திரக்கோளாறு அதிக கஷ்டம் சகோதரரின் விரோதி; விரோதியின் கோட்டை சோம்பேறித்தனம், மனைவியின் மரணம், மனைவியின் கஷ்டங்கள், அரசாங்கத்தில் தண்டனை, பயம், தனநஷ்டம், கடனைத் திருப்பித் தருவது மற்றவருடைய தனத்தை தனக்குத் தெரியாமலே அடைவது, வெகு காலமாக இருக்கும் சொத்து, துஷ்டர் சேர்க்கை, பாபம், கொலை, கால் வெட்டுதல், பிகக் கெடுதல் மன்னிக்க முடியாத குற்றம், மனதிற்குக் கஷ்டத்தின்மேல் கஷ்டம் அடுத்து வருவது, துர் அத்ருஷ்டம் தொடர்ந்து வருவது, கெடுதல் செய்ய அஞ்சாத நெஞ்சம், சண்டை, ஆபத்து, தடை, தாமதம், மனைவியின்மூலம் வரும்படி, மஞ்சக்காணி, டௌரி, ஸ்பெகுலேஷனில் லாபம், அல்லது நஷ்டம் : புணர்ச்சிக்கருவி, பழி, இறந்தவரின் தனம் பெறுவது, வில்மூலம் தானம், இனாம், மோக்ஷம், உயரத்திலிருந்து கீழே விடுவது, அடிபடுவது, இறப்பது, பூர்வ

ஜென்மம், கடன்காரர் தொல்லை. அபஜெயம், கூட்டாளி. மனைவி மூலம் கிடைக்கும் தனம், அல்லது இழக்கும் தனம் (அதாவது சுபர் 8-லிருப்பின் வரவு: பாபியிருப்பின் செலவு. சுபரிருப்பின் கடன் திருப்பிக் கொடுப்போம். நல்ல உறவு, பாபரிருப்பின் கடன் கொடுக்கமுடியாததால் தொல்லை அவா கொடுக்கும் மீதி என அறியவும்) வேலைக்காரர் களின் ஸஹோதரர்கள். அவர்களின் ப்ரயாணப் (கேட்டதில்லையா. வீட்டில் கஷ்டமென்றாலும், தனது வ்யாபாரத்தில் கெடுபிடியென்றாலும் அப்பொழுதுதான் சேவகர் ரஜாவில் வெளியூர் செல்ல நிர்ப்பந்தம் ஏற்படும்) மூன்றாவது ஸஹோதரரின் சொத்து. அடுத்த தம்பி அல்லது தங்கையின் வேலையாள். மதாசார்யாரின் அல்லது குருவின் ரஹஸ்ய மறைந்திருக்கும் விரோதி. நண்பரின் கீர்த்தி. மர்மமாக கெடுதல் புரியும் விரோதியின் குரு அல்லது மதம். இடையூறு, எதிர்ப்பு, ஏமாற்றம், வேதனை, குழப்பம் இவைகளை 8-ம் வீட்டைக்கொண்டு சொல்லவும். மர்ம விரோதி என்றால், நமக்குத் தெரியா மல் திருட்டுத்தனமாக தீங்கு இழைப்பவர்.

## 9-ம் பாவம்

மறுபெயர்கள்,—தர்மம, குரு, சுபம், தபஸ். நவமம், பாக்யம்.

இடுப்பின்கீழ், தொண்டைகள். தனது தகப்பனார், ஞானம், மேல்படிப்பு, தூரதேச ப்ரயாணம் இடப் பெயர்ச்சி, குரு, உபாத்யாயர், பாக்யம், ஞானம், தபசு, புண்யம், தயை. தாக்ஷிண்யம், பக்தி. தேவதா உபாஸனை, மூன்றாவது புத்திரர், தீர்த்தாடனம், சுத்த மனம், ஒருவரின் கொள்கை, நல்லோர் சேர்க்கை, மருந்து, குதிரை. யானை, எருமை, தர்பார் இடம். ப்ரம்மத்தில் நம்பிக்கை, பணச் செலவு நல்ல சங்கத்திற்குச் செய்யும் உபகாரம், வேதாந்தம் தர்க்கம், மந்த்ரம், பேரன், வக்கீல், வ்யாஜ்யம், ஆலயக், ராஜி பேசி முடிவிற்கு வருவது, இளைய மைத்துனன், சித்திரம். எஜமானன், ஆனந்தம் தம்பியின் மனைவி தங்கை யின் புருஷன், புத்தகங்கள், அச்சடிப்பது, விஞ்ஞானம்,

சகுனம், தகப்பனாரின் ஆரோக்கியம், தகப்பனாரின் சேவகர் வேலையாளின் வீடு; நண்பரின் நண்பர், அரசரின் விரோதிகள்: இளைய மைத்துனன் தம்பியின் மனைவி என்றபொழுது ஆண் கிரகம் 9-லிருப்பின் மைத்துனனென்றும் பெண்ணாயின் மைத்துனி என்றும் தம்பியின் மனைவி என்றதை தங்கையின் புருஷனென்றும் கொள்ள வேண்டும்.

## 10-ம் பாவம்

மறுபெயர்கள்: வ்யாபார: மேஷூரன: மத்ய: மானம். ஞான: ராஜாஸ்பத: க்ரம: க்ரிய:

முழங்கால் தொடைக்கு கீழும் ஆட்டுச் சதைக்கு மேலுள்ள பாகம். அந்தஸ்து; அதிகாரம், ஆபரணம், ஆடை, யாத்திரை, ஜீவனம் விவசாயம்; கீர்த்தி; நற்கர்மம், செய்யும் கார்யம், மனசு; மானம்; ஆகாசம்; புண்ணியம் பட்டணங்கள்; புதிய நகரங்கள் கட்டுவது, ஸ்தாபிப்பது, ராஜ்யம்; தைர்யம்; வீர்யம் தெய்வ பக்தி; தாக்ஷண்யம்; கருணை; ப்ரதாபம் சௌர்யம், புகழ் பெருமை; பூமி, வீடு வீடுகட்டும் மனை, ஆக்ஞை; பிதிர்சொத்து; அதிகாரி; அரசன், பெரிய மனிதர்கள்; ஜட்ஜ்; மாஜிஸ்ட்ரேட், திருடிய சொத்து; மனைவியின் தாயார் மனைவியின் வீடு; இளைய சகோதரனின் ஆயுள், சேவகனின் புத்திரர், குடியிருப்பவரின் புத்ரர் முதல் புத்திரரின் ரோகம் கடன் நண்பரின் மறைந்திருக்கும் விரோதிகள் மறைந்திருக்கும் விரோதிகளின் நண்பர்கள் ஒருவரின் வெற்றி குணாதிசயங்கள் அரசாங்கத்தில் மதிப்பு, குதிரை சவாரி தேகப்பயிற்சி புதையலை வைப்பது (Provident Fundi) தான் செய்யும் த்யாகம் ராக்ஷை; ஸ்வீகாரபுத்ரன்: ரஸ்தா இளவரசன் இவைகளை 10-ம் வீட்டைக்கொண்டு அறியவும். மனைவியையும் தாயையையும் வீட்டையும் குறிக்களப்படி பொருள் கொள்வது? 10-க்குடைய சந்திரன் (தாய்க்குச் காரகன்) ஸஹாயமெனும் மூன்றிலிருந்தாலும், சந்திரன் 10-லிருந்தாலும் மனைவியின் தாயால் சுகம்: சுக்ரனாயின் நகை

முதலிய லாபம் செவ்வாய் ஆயின் வீடு, மனை முதலிய லாபமென யூகிக்க வேண்டும்.

## 11 ம் பாவம்

மறுபெயர்கள் : ஏகாதசம் : உபாந்த்ய : பவ : அய: லாப : ஹ்ருத்ரோக

கணுக்காலுக்குமேல் ஆட்டுச் சதையுள்பட :

ஒருவரின் எதிர்பார்க்கும் தன்மை ஆசை; விருப்பம்: யத்தனபலிதம், புத்திமதி கூறுபவர் நண்பர் உதவிபுரிபவர் அரசனின் சொத்துக்கள் தம்பியின் மதப்பற்று 5-ம் தம்பி, 4ம புத்ரர் தகப்பனாரின் சிறு பிரயாணம் குழந்தைகள் விரோதிகள் : பத்ரர்களுடன் போட்டியிடுபவர்: மருமகன் மருமகள் அவர்களுடைய வ்யாஜ்யம் பக்கத்தில் குடியிருப் போர் அல்லது தம்பியின் தூரதேசப்ரயாணம் தனலாபம் வெற்றி,மூத்த சகோதரன் மூத்த சகோதரி இளைய மனைவி, அல்லது துணைவி பயிர் பொன் தண்டிகை வித்தை யானை குதிரை நாடகம் நடனம் சங்கீதம் நீர்ப்ரயாணம வர்த்த கத்தால் ஜீவனம் எப்படியாவது லாபமடைவது எல்லா வித வருமானம் தன்னை அண்டி வாழ்பவர் சிறிய தகப் பனார் நகை முத்து ஆபரணம் பெற ஆசை அதிகாரியின் தனம் தனது முதலிற்குரிய வட்டியில் நஷ்டம் புத்தி நுட்பம் மந்திரி அதிருஷ்டம் உதயமாவது ஆரம்பிப்பது ஒருவரின் மன அபீஷ்டம் பூர்த்தியாவது சுலபமாக லாபப் பெறுவது காதுகள் அழகாக பெயின்ட் அடிப்பது சித்திரம் அலங்காரம் 11-ம் வீடு தமயனையும் பக்கத்தில் குடியிருப்போரையும் நண்பரையும் குறிக்க 3-ம் விடு அவரது புத்ரர் ஜனனத்தை குறிக்கும் நாம் தமயனுக்கு குழந்தை பிறக்குமென்று எண்ண, நண்பருக்கோ பக்கத்து வீட்டிலோ பிறந்து விடும். கூறிய நேரம் கூட தவறாது. ஆகவே அவர்கள் ஜாதகத்தை பார்க்கவேண்டும். மற்ற வர் பலனை சொல்லும்பொழுது இருவருடையதையும் கவனிப்பது அவசியம்.

## 12ம் பாவம்

மறுபெயர்கள் : ரிப : வ்யய : த்வாதக : அந்த்வபா : விகம ;

பாதம்-இடது கண் : தூரதேச சஞ்சாரம் தூரதேச அல்லது பரதேச வாசம். துர் அத்ருஷ்டம், தண்டம் தண்டனை, தயாளம் தனவிரயம், சயன சுகம், மதிப்பு சிறை வாசம், ஆஸ்பத்ரியில் படுக்கை. தடை, பணநெருக்கடி, கடன், பாபம், மறைந்திருந்து கெடுதல் செய்யும் விரோதி கள், தெரியவிடாதபடி திருட்டுத்தனமாக தீங்கிழைப்பவர்-ஓர் இடத்தில் கட்டுப்பட்டு இருப்பது. கட்டுபாடு வெளியூருக்கு அனுப்பி விருவது, ஜதகனுக்கு தெரியாமல் ஜாதகனுக்கு தீங்கிழைக்க பெரிய ஆலோசனை. பெரிய மிருகங்கள், குதிரை, பிதாவின் தாயார், மாதாவின்பிதா, தூக்கத்திலிருந்து எழுந்திருப்பது, மனவேதனை, கஷ்டத்தினின்றும் தப்பிப்பது, கடனைக் கொடுத்து தீர்ப்பது, பிதுர்தனம், மோக்ஷம், பொது ஜனங்களுடன் விரோதம், கணுக்காலை துண்டிப்பது, கல்யாணத்தால் நஷ்டம், தனக்கு யாதும் தேவையில்லை என வெறுத்து எதிலும் ப்ரியமே வைக்காது இருப்பது, வேலை அல்லது தொழிலின் முடிவு. பிதா அல்லது ப்ரதாவின் சந்தோஷத்திற்குப் பங்கம்-அதாவது அவர்களுக்குத் துக்கம்-விவகாகம், வ்யாஜ்யம், கோபம், தேகத்தில் ரணம், மரணம், த்ன்னூர் அல்லது இருக்குமிடத்தை விட்டு இடபெயர்ச்சி, குடி மாறுதல், சிலவு மனைவிக்கு நோய், மனைவிக்கு விரோதி, மனைவிக்குக் கண்டம், விரயத்தால் போகம், மலைநாடு சஞ்சாரம், பலதேச ப்ரயாணம். கப்பல் வியாபாரம் ராஜதண்டனை, அலைச்சல் திரிச் தற்கொலை, தூக்குத்தண்டனை, ஸகோதனின் தொழில், குழந்தைகளுக்கு ஆபத்து, கஷ்டம், இடையூறு முதலியன. சேவகனுக்கு விவாஹம், தாயின் தூரதேசப் ப்ரயாணம். பிதா வீடு, நிலம் வாங்குவது அல்லது விற்பது : சுபர்களிருப்பின் நல்ல பலன் : பாபிகள் இருப்பின் தீய பலன்.

12ல் சிறைவாசம் என்றால், 12ல் பாபியிருக்க, 2, 5. 9 விடுகளும் பாபிகூடி கெட்டிருந்தால், தண்டனையால் சிறை வாசம் : 2, 10க் குடையவர் சுபராகி, ஜீவனத்தைக் குறித்

தால் சிறைசாலையில் தொழில் புரிவர். 'ஆஸ்பத்ரியில்' என்றிருப்பதால், ஜீவனத்தைக் குறிப்பவர், 12லிருந்தால், ஆஸ்பத்ரியருகிலேயே வீடு அங்கேயே குடித்தனம் 'நர்ஸ் க்வார் டேர்ஸ்' ரஸிடெண்ட் ஆபீஸர்', 12ல் பாபியிருக்க, அவர் 6ம வீட்டதிபதியாகி பாபியானல், நோயால் ஆஸ் பத்ரி சிகிச்சைக்காக ஆஸ்பத்திரியில் படுக்கை. இவ்விதம் யூகிக்க வேண்டும் ஜனனலக்கனம் இருக்கும் ஸ்திதியிலே யேயிருந்தாலும். அதாவது ஜனனமாகும் பொழுதோ, அல்லது ஜனனமான சிறிது நேரத்திற்குள் லக்னபாவத்தி லேயே இருக்கும்படி உதயமானலும், 90°க்கு அருகாமையி லிருப்பினும், 180° அல்லது 270°க்கு அருகாமையிலிருப் பினும், அப்பேர்ப்பட்ட கிரகங்களுக்கு வலுவு அதிகம். இதை கேந்திரம், angle என்கிரும். 1, 4, 7, 10ம வீடுகளா கும. கண்டகம், சதுஷ்டயம் என மறு பெயருண்டு. அடுத் தாற்போல் 30°, 120°, 210°, 300க்கு அருகாமையிலிருப் பின் அதை பணபரம் என்றும் Succendent என்றும் சொல் கிரும இதற்கு மத்திமமான பலம். இங்கிருக்கும கிரகங்கள மத்திம பலத்தைப் பெற்றது. நன்மையானலும் அதிக நன்மையல்ல. கெடுதலாயினும் அதிக கெடுதல் அல்ல இவை 2, 5, 8, 11ம் வீடுகளாகும்.

அப்பால் 3, 6, 9, 12ம் வீடுகள்; கிரகங்கள் 60° சமீபத் திலும 150°, 240°, 330° சமீபத்தில் இருப்பின் அவைகள் ஆபோக்லிபம் என்றும் Cadent என்றும் வழங்கப்படும். பலம் குறைவு.

பரீக்ஷை தேறுவதில் Rank பார்க்கும்பொழுது, கிரகங் கள் 1, 4, 7, 10விருக்க அவர் தசை, புக்தி நடப்பின், முதல் தரம் first class, 2, 5, 8, 11லிருப்பின் அடுத்த தரம், Scond class, 3, 6, 9, 12லிருந்து சுபராயின், மூன்ரும் தரம் Thired class. இதிலேயே பாபிகளாயிருந்து, பரீக்ஷை தவறி ஞல் இவ்விதமே அ-வரிசையிலிருந்து அவர்களின் 'தரம்' இருக்கும்.

சிலர் தாழ்ந்த உத்யோகத்திலிருப்பினும் அதிக செல் வாக்குடனிருப்பார். அவர்களுக்கு மதிப்பையளிக்கும் கிரகம் கேந்திரத்திலும், தனத்தையளிப்பது பணபரத்தி

லும் இருக்கும். சிலர் மேற்பதவியிலிருந்தும் மதிப்பின்றி யிருப்பார். ஆகவே அதிகாரம் அளிக்கும் கிரகம் கேந்திரத்திலும், influence கொடுக்கும் கிரகம். பணபரத்திலிருக்கும். ஒருவர் மிகப் பெரியதனவந்தராயினும், இருக்குமிடமே தெரியாது. அவருக்குத் தன மளிக்கும் கிரகம் கேந்திரத்திலும், மதிப்பை யளிக்கவேண்டியது. ஆபோக்லீபத்திலிருக்கும்.

கேந்திரத்தில் ஒரு கிரகம் கூட இல்லாவிடில் பேரும் புகழும் பெற முடியாது. சாய்காலுடனிருக்க கேந்திரத்தில் சுபரிருக்க வேண்டும். 12ல் பாபியிருந்தால் சாய்கால் அதாவது influence இருக்காது. ஆனல் கால் ஊனத்தால் 'சாய்கால்' என்று சாய்ந்து சாய்ந்து நடக்கலாம். அடுத்தபடியாக, இயற்கையில் பாப கிரகமானுலும் அவர்கள் ஜனனகாலத்தில், லக்னத்திற்கு 3, 6, 10, 11ம் வீடுகளில் இருப்பின் அவர்கள் நன்மை புரிவர் என்று சொல்லி இந்த வீடுகளை 'உபசய' ஸ்தானம் என்கின்றனர். மற்ற 1, 2, 4. 5, 7, 8, 9, 12 வீடுகளை 'அபசய' ஸ்தானம் இயற்கையில் பாபிகள் இங்கேயிருப்பின் 'ஹிம்சையை' விளைவிக்குமென அறியவும். "கர்க" முதலியோர் 3 6 10 11ம் வீடுகளை அவ்வீட்டின் அதிபதிகள் பார்த்தாலும், அதில் வீற்றிருந்தாலும், குரு, புத, சுக்ரர் சேர்ந்தாலும் இதர கிரணங்களின் சேர்க்கை, பார்வையில்லாதிருந்தால் சுப பலன் நடைபெறுமென்றும் அவ்வீட்டின் அதிபதிக்கு சத்ருவான கிரகங்கள் பார்த்தால் சுப பலன் நடைபெருதென கருதுகின்றனர். ஆனல் வராமிஹிரா, சத்யாச் சார்யரர்; யவனேஸ்வர் முதலியோர் இதை ஒத்துக் கொள்ளவில்லை. அவர்கள் அபிப்ராயமோ; எல்லா கிரகங்களும் 3 6 10 11ல் இருப்பின் பாபம் நீங்கி; நன்மை புரியும் என்பதே. ஆறும் வீட்டை துஸ் ஸ்தானமென்றும் பதோத்பலர் ப்ரச்ன ஞானத்தில் சொல்கிருர்.

ஒரு பாபியை 'தீ' என்று எண்ணினல், அந்த நெருப்பு எங்கு இருப்பினும் இருக்கும் இடத்தை சுட்டு விடும். ஆனல் அந்த 'தீ' யென்னும் பாபக்ரஹம் எந்த ராசிக்கும் பாவத்திற்கும் அதிபதியோ, அந்த ராசி மூலமும் பாவம்

மூலமும் அறியும் பலாபலன்கள் சுபமாக நடைபைறுமென அறிய வேண்டும். பாபி இருக்கும் வீன்டின் மூலம் அறிவது கெட்டுவிடும்.

5ம் வீட்டையும் 9ம் வீட்டையும் திரிகோண வீடுகளென் பார்: 9ம் வீட்டை லக்னத்ரிகோண மென்றும் சொல்வர். சுபர்கள் கோண, கேந்திரமேற, அசுபர்கேந்திரம் கோணம் அஷ்டமம் ஏருமலிருக்க சகல கார்யசித்தி,மேன்மை யெனப் படும்.

4ம் ட்டை ய 3 ரி ட்டையும் "சதுரஸ்ரம்" என்கின் றனர். இவ் வீட்டில் பாபிகள் இருக்கலாகாது. இருந்தால் கஷ்டம். எந்த பாவத்தை யெடுத்தாலும் அதற்கு 4, 8 லிருப்பவர் அந்த பாவத்திற்கு தீங்கிழைப்பர்.

மேலும் 6, 8. 12ம் வீடுகளை "த்ருகே" என்பர். எந்த பாவத்திற்கும் 6, 8, 12லிருக்கும் கிரகம் அந்த பாவத்திற்கு கொடுதலே செய்யும். ஜாதகத்தில் ஜனிக்கும் காலத்தில் கிரகங்கள் இருந்த ஸ்திதிக்கு 6, 8, 12லுள்ள கிரகங்கள் அவர்களுடைய தசை புக்தி சேர்ந்து வரும் பொழுது எதிர்ப்பையும் ஏமாற்றத்தையும் கஷ்டநஷ்டத்தையும்மளிப் பர். ஆகவே ஒருபாவத்திர்கு 4, 6, 8, 12ல் பாபிகளிருப்பின் மிக கஷ்டம் 6, 8, 12ல் யாரிருந்தாலும் தீங்கே.

இவ்விதம் சொல்லபட்டுவரும் விதிகளைப் படிக்கும் பொழுது. ஒரு விதியைப் படித்ததும், அதைப் பார்த்து, ஓர் தீர்மானம் எடுக்கலாகாது முழுவதும் கற்றுணர வேண்டும். துல்யமாகவும் பார்க்க வேண்டும். டிகிரி தூரத்தை அதாவது aspects திருஷ்டியை கவனிக்க வேண்டும். மேல்நாட்டார் முறைப்படி ஒவ்வொன்றின் இடையிலுள்ள தூரம் கணக்கிடாவிட்டால் பலாபலன்கள் தவறுவதில் ஆச்சர்யமில்லை. ஆனால் துல்யமாக. இதை கணித்து கவனித்தால் ஜோதிடம் சாஸ்திரமே! யென யாவரும் ஒப்புக்கொள்ளவேண்டும் அனுஷ்டித்து நற்பலனடைந்து யுடன் வாழ்வாராக!

# கிரகங்களின் ஸ்திதியும் பலமும்

ஆதியில் 7 கிரஹங்களையே எடுத்து ஒரு வாரத்தி லுள்ள 7 கிழமைகளுக்கும் 7 வாரமென்றும், 7 கிரஹங் களும் அதிபதிகளென்றும் சூர்யன் ஆதிவாரம் ஞாயிற்றுக் கிழமைக்கும் சந்திரன் ஸோமவாரம் திங்கட்கிழமைக்கும், செவ்வாய் சங்களவாரப் செவ்வாய்க்கிழமைக்கும் புதன் புதவாரம் புதன் கிழமைக்கும் குரு குருவாரம வியாழக் கிழமைக்கும் சுக்கிரன் சுக்ரவாவாரம் வெள்ளிக் கிழமைக்கும் சனி ஸ்திரவாரம் சனிக்கிழமைக்கும் அதிபதிகள்.

ஆனால் ராசிகளைப் பிரித்து, ஆதிபத்யம் கொடுத் துள்ள விதத்தைக் கவனியுங்கள்.

சூர்யன் கிரகங்களில் ப்ரதானம். மிருகத்தின் ராஜா சிங்கமல்லவா. ஆகவே சிம்மத்திற்கு அதிபதி சூர்யன் பக்கத்தில் ஜலக்ரஹமான சந்திரன் ஜலராசியான கடகத் திற்கு அதிபதி. அப்பால் சூர்யனுக்கு புதன் அடுத்தாற் போல் வானத்தில் சுற்றுவதால் சிம்மத்திற்கு அடுத்த வீடு கன்னியும் கடகத்திற்கு அடுத்த முன் வீடு மிதுனமும் புத னின் ஆக்ஷி விடாகும். புதனுக்கடுத்தாற்போல், சூரயனைச் சுற்றுவது சுக்ரன், ஆகவே கன்னிக்கு அடுத்த வீடும், மிதுனத்திற்கு முந்திய வீடுமான துலாம், ரிஷபத்திற்கு அதிபதி சுக்ரன். அப்பால் ஆகாயத்தில் சுக்ரனுக் கடுத்து சஞ்சரிப்பது செவ்வாய். ஆகவே செவ்வாய்

விருச்சிகத்திற்கும் மேஷத்திற்கும் அதிபதி. அடுத்திருப்பது குரு. குரு தனுசுவிற்கும் மீனத்திற்குமதிபதி. அடுத்தாற்போல், பக்கத்திலேயே இருக்கும் வீடுகள் பாக்கி இரண்டும், மகரமும் கும்பமும் சனியின் வீடுகளாகும். மேற்கூறிய வீடுகளுக்கு இந்த கிரகங்கள் அதிபதியாவர். ஆக்ஷியென்றும் சொல்லலாம்.

" உச்சம் என்கின்றனரே. உச்சமென்ருல் என்ன ?"

" உச்சம்" என்ருல் உத்தம ஸ்திதி என்றும், அதிக பலம், வலுவு, சக்தி யென்றும் பொருள்கொள்ள வேண்டும். சூர்யன் மேஷத்தில் உச்சம் அதிலும் மேஷம் 10°ல் பரம உச்சம் என்பதிலிருந்து, சூர்யன் மேஷத்தில் உச்சமென்ருலும், அதிலும் 10 டிகிரி வரும் வரை உச்ச பலம் அதிகரித்துக்கொண்டே வருகிறதென்றும், அப்பால் 10 டிகிரி தாண்டியதும், சிறிது சிறிதாக குறையுமென்றும், அதன் பூர்ண வலுவு 10 டிகிரியில் 180 என்று எடுத்துக் கொண்டால், ஒவ்வொரு டிகிரி தாண்ட 1 வலுவு குறையும். மேஷம் 1 டிகிரியில் 171 வலுவு. மேஷம் 10 டிகிரியில் 180 வலுவு மேஷம் 20 டிகிரியில் 170 வலுவு. 28 டிகிரியில் 180—.18 = 162 வலுவு இவ்விதம் ஒவ்வொரு கிரகத்திற்கும் அது உச்ச டிகிரி யறிந்து, உச்ச பலம் அறியலாம்.

ரிஷபத்தில் சந்திரன் ; மகரத்தில் செவ்வாய் கன்னியில் புதன் ; கடகத்தில் குரு. மீனத்தில் சுக்ரன்; துலாத்தில் சனி உச்சம்; ரிஷபத்தில் 3 டிகிரி; மகரத்தில் 28 டிகிரி. கன்னியில் 15 டிகிரி, கடகத்தில் 5 டிகிரி மீனம் 27 டிகிரி துலாம் 20 டிகிரி இந்த ஸ்திதியில் சந்திரன் செவ்வாய் புதன் குரு சுக்ரன் சனி பரம உச்சமாகும்.

"மேலே உதாரணம் கொடுத்தேளே : 180 வலுவு என்று சொல்ல 1 டிகிரிக்கு 1 வலுவு குறையுமேயானல், நேர் எதிர் ராசியில் 180 டிகிரி தாண்டும்போது ' 0 ' தானே பலமாகும்."

" ஆம். அவ்விதம் பலமற்றுப் போவதை நீசம் என்கிரேம். மேஷம் சூர்யனுக்கு உச்சம். ஆகவே 180 டிகிரியிலிருக்கும் நேர் எதிர் வீடு துலாம் சூர்யனுக்கு நீச ராசி

யாகும். மேஷம் 10 டிகிரியில் சூர்யன் பரம உச்சம் ஆகவே துலாம் 10 டிகிரியில் சூர்யன் பரம நீசம். இவ்விதமே சந்திரன் விருச்சிக ராசியில் நீசம். விருச்சிகம் 3 டிகிரியில் பரம நீசம். செவ்வாய் மகரத்திற்கு நேர் எதிர் ராசியான கடகத்தில் நீசம். அதில் 5 டிகிரியில் பரம நீசம். இவ் விதமே இதர கிரகங்களுக்கும் கண்டுபிடித்துக் கொள் ளவும்.

பரம நிசத்தைவிட்டு பரம உச்சத்தை நோக்கி செல் லும் கிரகம் டிகிரிக்கு டிகிரி வலுவு அதிகம் பெறுகிறது. இதை 'ஆரோஹணம்' என்பர். பின்பு பரம உச்சத்தை விட்டு பரம நீசத்தை நோக்கி வரும் வரை, ஒவ்வொரு டிகிரி யும் வலுவு குறைந்துகொண்டே வருகிறது. இதை 'அவ ரோஹணம்' என்பர். இவைகளைத் தெரிந்துகொண்டு பலா பலன்கள் சொல்லும்பொழுது எப்படி ப்ரயோஜனம் என்ன என்பதை "பலா பலன்கள்" என்னும் புத்தகத்தில் பார்க்கலாம்.

பிறகு ராசிகளை, பகலில் வலுவுள்ள ராசிகளை இரு கால் ராசிகளென்றும், சந்தி வேளையில் வலுவுள்ளவற்றை பலகால் ராசியென்றும் இரவில் வலியனவற்றை நாற்கால் ராசியென்றும் உபதேசித்துள்ளனர். இருகால் ராசிகள்— புதனின் இரண்டு விடுகளுமான மிதுனம் கன்னி. சனியின் வீட்டிலொன்றான கும்பம். சனியின் உச்ச வீடு துலாம். தனுசின் முன் பாதி பலகால் ராசிகள்—ஜல ராசிகளான கடக விருச்சிக மீனம். நாற்கால் ராகிகளோ ஆடு எனும் மேஷம். மாடு எனும் ரிஷபம். சிங்கமெனும் சிம்மம். தனு சின் பின் பாதியும் மகரமாகும்.

அப்பால் கிரஹங்களின் 'அவஸ்தை' என்பதையும் நன்கு கற்றுணர்ந்து உபயோகப்படுத்தியே பலனைச் சொல்ல வேண்டும்.

அவைகளாவன :—

"தீப்தா" உச்சம், மூல த்ரிகோண ராசியில் கிரகம் இருப்பது. ஸ்திமிதா சொந்த வீட்டில் கிரஹம் இருப்பது

ஆகஷி, முதிதா அதிமித்ர வீட்டிலிருப்பது. "ஸாந்தா" மித்ரன் வீட்டிலிருப்பது. "ஹீன" சமம் எனப்படும் நட்பு மில்லாது பகையுமற்ற வீட்டில் கிரகம் இருப்பது. "விகல" என்றால் சத்துரு ஸ்தானத்தில் கிரகம் இருப்பது. "விகல" என்றால் ஓர் பாபக்ரஹத்துடன் கூடியிருப்பது, சிலர் நீசத்திலிருப்பது என்கின்றனர்.

'கல' எனில் கிரகங்கள் சேர்ந்திருக்க எந்த கிரகம் சேர்ந்திருக்கும். மற்றொரு கிரகத்துக்கு தெற்கே யிருக்கிறதோ அந்த கிரகம் 'கல' அவஸ்தையில் பலமற்றிருக்கிறதென கொள்ள வேண்டும். "கோப" எனில் சூர்யனில் அஸ்தங்கதம் என பொருள் கொள்ள வேண்டும். தீப்த அவஸ்தையிலுள்ள கிரகங்கள் தமது தசா புக்திகளில் ஜாதகனுக்கு முன்னேற்றத்தையும் மேன்மையையும் தனப் பெருக்கையும் கீர்த்தியையும் படிப்பையும் அரசனுகும் தன்மையையுங் அதாவது அதிகாரம் மதிப்பு பெற்று இருத்தலையும் பல ஸௌக்யத்தையும் கொடுக்கிறது. ஸ்நிதா அல்லது ஸ்வஸ்த அவஸ்தை அதாவது தன் வீட்டிலேயே யிருக்கும் கிரஹம் ஸ்வய பலத்துடன் பலனைக் கொடுக்கும். ஆரோக்யம் தன வசதி ஆகவே சுகம் தர்ம சிந்தனை குலத்திற்கேற்றபடி அனுஷ்டானம் ஆசாரம் இவைகளை அளிக்கும். 'முதிதா' எனும் அவஸ்தையில் அதிக ஸ்னேஹம் எனப்படும் வீட்டிலிருப்பது, அரசாங்க மூலம் நன்மையையும் சம்சத்தையும் யளிக்கும்.

"சாந்த" அவஸ்தையிலுள்ள கிரகம் குறைவற்ற செல்வத்தையும் நோயற்ற வாழ்வையும் சந்தோஷத்தையும் சுகத்தையும் தன வரவையும் அரசாங்கம் மூலம் லாபத்தையுமளிக்கும் 'ஹீன சக்ந்த' அவஸ்தையாயின் தர்ம சிந்தனையும் கார்ய சித்தியும் மதப் பற்றும் தேவதா உபாசனையும் பணமும் படிப்பும் இருக்கும். 'நுக்க' அல்லது 'பீடிதா' அவஸ்தையானால் இளைய ஸஹோதரனுக்கு நல்லதல்ல. மரணம் ஏற்படலாம். விரோதிகளாலும் நீதிஸ்தலத்தாலோ அரசாங்கம் மூலமோ திருடர்களாலே நஷ்டமேற்படும்.

'விகல' என்பதோ கஷ்டத்தையே கொடுக்கும் தனது நற்பலன் குறையும்.

'நல' அவஸ்தையில் யிருப்பின் போட்டியில் தோல்வி மனக் குழப்பம், வேதனை, சித்தப்ரமை, சோகம் இவற்றைக் கொடுக்கும்.

'கோப' அல்லது 'பீத' அவஸ்தையிலுள்ள கிரகம் விரோதிகளால் கஷ்டத்தை யளிக்கும். இவைகள் ஸ்தூல அவஸ்தை.

ஸூக்ஷ்ம அவஸ்தைகள் வேறு. இதைக் கற்றுணர்வது அவசியம். அப்பொழுதே பலா பலன்கள் மேலும் ஒழுங்காக புலப்படும். இனி சொல்லப்போவது 12 வித அவஸ்தைகள்.

(1) சயனம் படுத்திருப்பது. (2) உபவேசனம் உட்கார்ந்திருப்பது. (3) நேத்ரபானி—ஒரு கையை கண்ணில் வைத்திருப்பது. (4) ப்ரகாசம் ஜ்வலிப்பது. (5) கமனம் போகிறது. (6) அகமம் - போகாமலிருப்பது, (7) ஆஸ்தானி அல்லது 'ஸபா' ஓர் கூட்டத்திலிருப்பது. (8) ஆகம வருவது. (9) புஜி அல்லது போஜன சாப்பிடுவது. (10) ந்ருத்ய லிப்ஸா நடனம் செய்ய ஆசை. (11) கௌதுக ஆவல். (12) நித்ரா தூக்கம் என 12 ஆகும். கிரகங்கள் மேற்கூறிய 12 அவஸ்தைகளிலிருக்குமென்றால் அப்பலன் சொல்லும்பொழுது கிரகத்தின் வலுவையும் சுப அசுபத்தையுமறிய இவ்விதம் புகட்டி யுள்ளனர். கிரகம் படுக்கவாவது தூங்கவாவது கிரகத்தை மனிதனுக்கு ஒப்பிட்டு, மேற்கூறிய பல அவஸ்தைகளில் இருக்கும்பொழுது அவனின் மனப்பான்மை எப்படி யிருக்குமோ அவன் செய்வது எவ்விதம் இருக்கும் என்பதை ஒப்பிட்டு, யூகிக்கவே இவ்விதம் உபதேசித்திருக்கிறார்கள்.

"எந்த அவஸ்தையில் இருக்கிறதென எப்படி சொல்வது? அவஸ்தை என்றால் கஷ்டமென்றுதானே அர்த்தம்".

அவஸ்தை என்றால் சமயம் நல்லதா கெடுதலா என பொருள் கொள்ள வேண்டும். நாற்றம் என்றால் வாசனை.

ஆனால் நாம் துர் நாற்றத்தைத் தான் நாற்றமென கூறி, சுகந்தமான நாற்றத்தை வாசனை யென்கிறோம். நாற்ற மென்றால் துர்கந்தமென மாத்ரம் அர்த்தமல்ல. பழக்கத் தில் அவ்விதம் எடுத்துக் கொள்கிறோம். அவ்விதமே அவஸ்தை யென்றால் வேதனையென நாம் எடுத்துக் கொள் கிறோம். ஆனால் இன்பம் துன்பம் இரண்டையுமே குறிக் கிறது. அவஸ்தை எனும் பதம். அவஸ்தையைக் கண்டு பிடிக்கக் கீழ் கூறும் மார்க்கத்தை அனுஷ்டிக்க வேண்டும். நவக்ரஹங்களில் ஒவ்வொரு கிரகத்திற்கும் அவஸ்தை கண்டுபிடிக்க கணக்கிட வேண்டும். யுரேனஸ் நெப்ட்யூ னுக்கு கிடையாது. ஒரே ஜாதகத்தில் ஒவ்வொரு கிரகத் திற்கும் அவஸ்தை வேறு.

1. சூர்யன், முதல் வரிசையாக கேது வரை 9 கிரஹங் கள். எந்த கிரஹத்திற்கு அவஸ்தை பார்க்க வேண்டுமோ அது சூர்யனிலிருந்து எத்தனையாவது கிரஹம் என கண்டு கொள்ள வேண்டும். சுக்ரன் என எடுத்துக்கொண்டால் சூர்யன் 1, சந்திரன் 2. செவ்வாய் 3, புதன் 4, குரு 5, சுக்ரன் 6 என்று கொண்டு ஆறு என்று எழுதிக்கொள்.

2. பிறகு எந்த கிரகத்திற்கு அவஸ்தை பார்க்கி றோமோ அந்த கிரஹம் ஜனன காலத்தில் எந்த நக்ஷத்தி லிருந்ததென குறித்துக்கொள். இதே சுக்கிரன் பூசத்தி லிருந்திருப்பின் அசுவதி 1, பரணி 2, கிருத்திகை 3 ரோகிணி 4 மிருகசிரிஷம் 5 திருவாதிரை 6 புனர்பூசு 7 பூசம் 8 எட்டு என்று குறி.

3. பிறகு முதலில் வந்த ஆறு, அதையும் இரண்டா வதாக வந்த எட்டு இதையும் பெருக்கு. ஆறுடன் எட்டை பெருக்க 48.

4. அந்த கிரஹம் எந்த டிகிரியில் எந்த ராசியி லிருக்கிறதென கவனி. சுக்ரன் கடகத்தில் 5 டிகிரி என எடுத்துக்கொள்வோம். இந்த டிகிரியால் திரும்பவும் பெருக்கவும். ஆகவே 5 உடன் 48ஐ பெருக்க 240.

5. ஜாதகனின் ஜனன நக்ஷத்ரம் என்ன. அது அசுவதியிலிருந்து எத்தனையாவது நக்ஷத்ரம். அதைக்

கூட்டவும். உதாரணமாக ரோஹிணி என்றால் அசுவதி 7 பரணி 2 கிருத்திகை 3 ரோஹிணி 4. ஆகவே 241 உடன் 4 ஐ கூட்டி 244 என்று குறி.

6. மேஷத்திலிருந்து ஜனன லக்னம எத்தனையாவது வீடென குறித்து அதையும் கூட்டு. உதாரணமாக துலாம் லக்னமானால் மேஷம் 7 ரிஷபம் 1 துலாம் 7 ஆகும். 144 உடன் 7 ஐ கூட்ட 251.

7. பிறகு ஜனித்த தினத்தன்று, ஜனன நேரம், சூர்ய உதயமான பின்பு, எவ்வளவு நாழிகை என குறி. இதையும் கூட்டி. ஆடி மாதம் 10 பத்து தேதி, சூர்ய உதயமான பின்பு 14 நாழிகையில் ஜனனமென்றும் எடுத்துக் கொண்டால் இப்பொழுது 14 ஐ கூட்டவேண்டும் விநாடியை எடுத்துக் கொள்ளவேண்டாம். 251 உடன் 14ஐக் கூட்ட 165 வரும்.

வந்த நம்பரை 12ல் வகுக்க. என்ன பாக்கி வருகிறது பார். பாக்கி வரும் எண் அந்த கிரகத்தின் அவஸ்தை : 'ஸயன' என்பது 1, பிறகு அந்த வரிசையில் பார்க்கவும். 165ஐ 11ல் வகுத்தால் 51 தடவை வகுக்க 1 பாக்கி. ஆகவே ஸ்யன அவஸ்தை என வேண்டும். சரியாக வகுபட்டு, பாக்கி ' 0 ' வந்தால் பாக்கி ,0 ' என்று எடுக்காமல் 11 என்று எடுக்கவும். ' 36 ' வருகிறது என்று எடுத்துக் கொண்டால் 11 ஆல் வகுத்தால் பாக்கி '0' ஆனால் அப்படி எடுக்காமல் $61 \times 1 = 14$, பாக்கி, 11 என்று எடுத்து, ஸயனம் 1, உபவேசம் 1, நேத்திரபாணி 3 என்று பார்த்துவர நித்ரா 91 என்று வரும். அப்பொழுது அந்த கிரகம் நித்ராவிலிருப்பதாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு கிரஹமும் 11 அவஸ்தைகளிலிருப்பதாலும் ஏற்படும் பலனை 'பலாபலன்கள்' என்னும் புத்தகம் சீக்கிரம் வெளிவருவதில் பார்க்கலாம்.

பின்பு ஒரு கிரகம் ஒரு ராசியில் பால்யம் எனப்படும் முதல் 11 டிகிரியிலிருக்கிறதா, வயோதிகமென 11க்குமேல்

31 டிகிரிக்குள்ளிருக்கிறதா, என பார்த்து அதற்கேற்ப சாதாரண பலனையும் முடுக்கான வலுவுள்ள பலனையும் பின்பு வலுவு குறைந்த பலனையும முறையே அறியவும.

ஆனால் முன் பாடத்தில் கூறியபடி பாவங்களை பிரித்து பின் சுமார் 31 டிகிரி தூரத்தில் ஒவ்வொரு பாவமும் பிரிக்கப்படும் இடத்தில் உள்ள கிரகம் மிக வலுவுடன் அந்த பாவ பலனைக் கொடுக்குமென அறியவும். பாவங்கள் 'CUSP' என்கிறோம். cusp க்கு அப்பால் தள்ளிப் போகப் போக அந்த பாவத்தின் பலம் குறைகிறது. அடுத்த பாவத்தின் cusp வருவதற்கு சுமார் 5 டிகிரி முன்பே அடுத்த பாவத்தின் பலனை அடைய ஆரம்பிக்கிறது.

வர்கோத்தமம் எந்த கிரகமானாலும் அல்லது லக்கன மானாலும், ராசியிலும், நவாம்ச சக்கரத்திலும், ஒரே ராசியில் இருக்கிறதோ அப்பொழுது அந்த கிரகமோ அல்லது லக்னமோ 'வர்கோத்தமம்'' எனப்படும். உதாரணமாக மேஷலக்னத்தில் ஒருவர் ஜனித்தால் மேஷத்திலுள்ள 2¼ நக்ஷத்ரங்களில் எதாவது ஓர் பாதத்தில் லக்னம் இருந்தாக வேண்டும்.

ஆமாம்; மேஷத்தில் அசுவதி 4 பாதங்களும் பரணி 4 பாதங்களும் கிருத்திகை முதல் பாதமும் இருக்கின்றன. ஆகவே லக்னம் இந்த 9 பாதங்களில் ஒன்றில் தானிருக்க வேண்டும். ஒரு பள்ளிக்கூடத்தில் 9 அறைகள் இருக்கிறதென்றும் பையன் பள்ளியறையிலிருக்கிறான் என்றால் இந்த 9ல் ஒன்றில் இருந்துதான் ஆகவேண்டும்.

அப்படி அசுவதி முதல் பாதத்தில் லக்னமானால், ராசியிலும லக்னம் மேஷத்தில் இருக்கும். நவாம்சத்திலும் லக்னம் 'மேஷம' இதை வர்க்கோத்தம் என்கிறோம். ஆனால் அசுவதி உம் பாதத்தில் ஜனனமானால், ராசி சக்ரத்தில் மேஷத்தில் லக்னம். நவாம்ச சக்ரத்தில் ரிஷபத்தில் லக்னம். அசுவதி 3ம் பாதத்தில் லக்னமானால் ராசியில் மேஷத்தில் லக்னம். நவாம்சத்தில் மிதுனத்தில் லக்னம். இவ்விதமே ஒவ்வொரு பாதத்திற்கும் நவாம்ச

ராசியில் அடுத்த அடுத்த வீடாக மாறும். 9 பாதங்களுக்கு ஒருமுறை ராசி மாறும்.

எப்பொழுதெல்லாம் ராசிசக்ரத்திலும் நவாம்ச சக்ரத்திலும் ஒரு கிரகமோ லக்னமோ ஒரே ராசியில் இருக்கிறதோ அப்பொழுது 'அது' வர்கோத்தமம் என்கிறோம். ஆகவே ஒரு கிரகமோ "அசுவதி முதல் பாதம் ரோஹிணி 2ம் பாதம்; புனர் பூசம் 3ம் பாதம். புனர்பூசம் 4ம பாதம் பூரம் 1ம் பாதம் சித்திரை 2ம் பாதம் சித்ரை 3ம் பாதம் அனுஷம் 4ம் பாதம் உத்ராடம் 1ம் பாதம் உத்ராடம் 2ம் சதயம 1ம் பாதம் ரேவதி 4ம் பாதத்தில் இருந்தால் அவை வர்க்கோத்தமத்திலிருக்கும்.

வர்கோத்தமத்தில் இருப்பவைகளுக்கு 'வலுவு' பலமதிகம். உச்சமோ சொந்த வீட்டிலோ சமவீட்டிலோயிருந்து வர்கோத்மமானல் சுபம் லாபமதிகம். சத்ரு வீட்டிலிருப்பின் துன்பமே. நீசவீட்டில் வர்கோத்தமமானல் பலம் மிகக் குறைவே.

சூர்யன் அசுவதி முதல் பாதத்திலிருப்பின் ராசியிலும் மேஷம். நவாம்சத்திலும் மேஷம். இரண்டிலும் உச்சம். பலம் அதிகமே. சூர்யன் சித்திரை 3ல் இருக்க ராசியிலும நீசம் துலாத்தில்: அப்படியே நவாம்சத்திலும் துலாத்திலிருக்கும். நவாம்சத்திலும் நீசம். ஆகவே மிக பலக் குறைவு. சந்திரன் ரோஹிணி இரண்டிலிருந்தால் ராசி நவாம்சம் இரண்டிலும் உச்சம் சந்திரன் அனுஷம் 4ம் பாதத்திலிருந்தால் ராசியிலும் நவாம்சத்திலும் நீசம் இவ்விதம் பார்த்துக்கொள்ளவும்.

வக்ரம் :- உண்மையாக பலர் வக்ரம் என்ருல் என்னவென்று அறிந்து கொள்ள விரும்புவார்கள். ஓர் சிலரே அதன் உண்மையை தெரிந்திருக்கின்றனர் என்பதே அதன் காரணம். மற்றவர்கள் தப்பாக நினைக்கின்றனர். நான் விளக்கிக் கூறுகிறேன் கவனி.

உண்மையாக சூர்யன் அசையாமலிருக்கிறது. இதர கிரகங்களும் பூமியும் சூர்யனைச் சுற்றி வருகின்றன. கிரகங்கள் சுற்றி வருவதை ஸ்ரீரங்கம் கோயில் ப்ராகாரங்களில்

சுற்றி வருவதாகக் கருதச் சொன்னேன். அதில் யாவர் சுற்றி வரினும் அவர்கள் எப்பொழுதும் நேராகத்தான் ப்ரதக்ஷிணமாக நடக்கின்றனர். ஒருவரும் நடக்கும் பொழுது நிற்பதுமில்லை; திரும்புவதுமில்லை; திரும்பி வந்து அப்பால் நேராக பழையபடி செல்வதுமில்லை. எப்பொழுதும் ப்ரதக்ஷிணமாகவே நகர்கின்றனர். போகும் பாதை முட்டை வடிவம். சரியான வட்டமல்ல. உண்மையாக அவைகள் வந்த வழியில் நிற்பது, திரும்பிச் செல்வது, அப்பாலும் நேர்கதியில் செல்வது என்பது கிடையாது. எப்பொழுதும் நேராகவே செல்கின்றன. ஆனால் அதனின் வேகந்தான் சற்று மாறுபாடாகும். எந்த இரண்டு கிரகங்களும் ஒரே வேகத்தில் செல்வதில்லை. ஆகவே எந்த இரண்டு கிரகங்களும் ஒரே காலத்தில் வான மண்டலத்தை ஓர் முறை சேர்ந்தார்போல் சுற்றி வருவதாகத் தென்படுவதில்லை.

அவைகளின் வேகத்தில் வித்யாசமுண்டு. வேகத்தில் வித்தியாசமிருப்பதாலேயே ஒரு கிரகத்திற்கும் மற்றொரு கிரகத்திற்குமுள்ள தூரம் மாறிக்கொண்டேயிருக்கிறது. ஒரு கிரஹம் மற்றொன்றை ஓடிப் பிடிப்பது போலும், சற்று சேர்ந்திருப்பது போலும் உடனே பிரிந்து முன் செல்வது போலும் தோன்றும். சந்திரன் வேகமாகப் போகிறது. சனி மெதுவாகச் செல்கிறது. ஆகவே சுமார் 27 அல்லது 28 நாட்களுக்கு ஒரு முறை சேர்வது போலும், அப்பால் பிரிந்து போக சுமார் 14 தினங்களில் நேர் எதிரில் 180 டிகிரி தூரத்திலிருக்கும். மேலும் சுமார் 14 தினங்களில் அதைத் துரத்திக்கொண்டு வருவதுபோல் தோன்றி அத்துடன் சேர்ந்திருப்பது போல் தோன்றுகிறது. இது தான் உண்மை.

ஆனால் நாமிருக்கும் பூமி சுற்றவே நமக்குத் தோன்றும் தோற்றங்களில் சில உண்மைகள் பார்வைக்கு வித்யாசங்களாகத் தென்படுகின்றன.

உதாரணமாக நாம் சமுத்திரகரையில் சமுத்திரத்தை நோக்கி உட்கார்ந்து இருப்பதாக கருதுவோம். பிறகு இரண்டு கப்பல்கள் ஒரே திக்கை நோக்கி செல்கின்றன.

அலைகளின் வேகமோ மாறிக்கொண்டிருக்கும். நமக்கு அருகில் செல்லும் கப்பல் வேகம் அதிகமாக இருந்தால் அப்பொழுது இரண்டு கப்பல்களையும் சேர்ந்தாற்போல் பார்த்தால் அப்பால் உள்ள கப்பல் நேராகவே சென்று கொண்டிருந்தாலும் அது பின் நோக்கி செல்வதை போல் தோன்றும். ஒரு மின்சார வண்டியும், மற்றொரு புகை வண்டியும் மேற்கு திக்கை நோக்கி சென்றுகொண்டிருக்கும் பொழுது முதலில், புகை வண்டி ஒரே வேகத்தில் போவதாக வைத்துக் கொள்வோம். மின்சார வண்டி மெதுவாக கிளம்பிய வண்டி கொஞ்சம் கொஞ்சமாக வேகத்தை அதிகரித்துக்கொண்டே செல்கிறது. புகை வண்டியின் வேகம் மின்சார வண்டியை விட அதிகமாக இருக்கும் வரை புகை வண்டி ஒழுங்காகவே எந்த திக்கை நோக்கி செல்கிறதோ அதே திக்குதான் செல்வது போல் தோன்றும். ஆனால் இரண்டினுடைய வேகம் சமமாக இருக்கும் காலத்தில் நகராமல் நிற்பது போல தோன்றும். மின்சார வண்டியின் வேகம் அதிகமாகி விட்டாலோ புகை வண்டி மேற்கு நோக்கி சென்றுகொண்டிருந்தாலும் பின் நோக்கி, கிழக்கு நோக்கி செல்வது போல் தோன்றும். அவ்விதமாக இரண்டும் ஒரே திக்கை நோக்கி செல்லும் பொழுது நேர்கதி என்றும், நிற்பது போல் தோன்றுவதை வக்ர ஆரம்பம் என்றும், பின்னோக்கி செல்வதுபோல் தோன்றுவதை "வக்ரம்" என்றும் சொல்கிறோம். அப்பால் வேக வித்யாசத்தால் புகை வண்டி சிறிது நேரம் ஒரே வேகத்தில் செல்லும் பொழுது வக்ரநிவர்த்தி போலும், புகை வண்டியின் வேகம் மின்சார வண்டியைவிட அதிகமா யிருக்கும்பொழுது நேர்கதியாகவும் தோற்றும்.

சுபர்கள் வக்ரகதியில் இருக்கும் காலத்தில் தமது சுபபலனை அளிப்பதில் பலம் குறைகிறதென மேல் நாட்டார் கருதுகின்றனர். ஆனால் நமது கிரந்தங்களில் எந்த கிரஹம வக்ரமானாலும் அது உச்ச பலனை அளிக்குமென உபதேசித்துள்ளனர். அசுபர்கள் வக்ரகதி அடையின் அசுப பலன் அதிகமென நமது முன்னோர்களும் மேல் நாட்டாரும் கருதுகின்றனர். வக்ரகதி ஆரம்பிக்கும் காலத்திலும் வக்ரநிவர்த்தி ஏற்படும் காலத்திலும் கிரஹம்

நின்றிருப்பதுபோல் தோன்றுவதால் அதற்கு பலம் மிக அதிகமென மேல் நாட்டார் கருதுகின்றனர். அது உண்மையே என அனுபவத்தில் நாம் அறியலாம். ஒரு கிரஹம் வக்ர கிரஹத்துடன் சேர்ந்திருந்தால் அதனுடைய பலம பாதியாகி விடும். உச்சராசியில் உள்ள கிரகம் வக்ர மானல் அதனுடைய வலுவு நீச வீட்டிலுள்ளது போல் பலஹீனமாகி விடும். ஒரு கிரஹம் நீசராசியிலிருந்து வக்ர கதியிலிருந்தால் அதனுடைய வலுவு உச்ச வீட்டில் உள்ளது போல் அதிகமாகி விடும். ஒரு கிரஹம மற்றெரு உச்ச கிரகத்துடன் சேர்ந்தால் இதற்கு வலுவு பாதி பங்கு அதிகமாகி விடும். நீசகிரஹத்துடன் சேரின் யாதொரு வலுவும் அடைவதில்லை.

சூர்யன் சந்திரன் இருவருக்கும் வக்ரகதி கிடையாது. புதன் 24 தினங்கள் வக்ரகதி: சுமார் ஒரு நாள் வக்ர ஆரம் பத்திலும, வக்ர முடிவிலும் அசைவற்றது.(Stationery)

சுக்ரன். 41 தினங்கள் வக்ரகதி, சுமார் இரண்டு தினங்கள் வக்ர ஆரமபத்திலும், வக்ர முடிவிலும் ஒரே இடத்திலிருப்பது போல் தோன்றும். (Stationery)

செவ்வாய் 80 தினங்கள் வக்ரம். இரண்டு அல்லது 3 தினங்கள் அசையாதிருப்பதுபோல் தோன்றும்.

குரு 110 தினங்கள் வக்ரம். வக்ராரமபம் வக்ர முடிவு இரண்டு காலங்களிலும் சுமார் 5 தினங்கள் அசையா ததுபோல் தோன்றும்.

சனி 140 தினங்கள் வக்ரம். சுமார் 5 தினங்கள் இரண்டு காலங்களிலும் அசரம் போல் தோன்றும் நேர் கதியில் செல்லும கிரகம் சுபபார்வையால் அளிக்கும் பலனைவிட வக்ர கதியிலுள்ள் கிரகம் அளிக்கும் பலன் மிகக் குறைவென மேல் நாட்டார் எண்ணுகின்றனர். ஆனல் அசுப பார்வையெனும் 45 டிகிரி 90டிகிரியில் அசுபர் இருப்பின் கஷ்டம் ரொம்ப அதிகம்.

# கிரகணங்கள்

அமாவாசையின் பொழுது சூர்ஙனும் சந்திரனும் ஒரே ராசியில ஒரே டிகிரியில் இருக்கும். அப்பொழுது அவைகள் வானத்தின் மத்திய ரேகைக்கு வடக்கே அல்லது தெற்கே இருக்கலாம். அல்லது இரண்டும் தெற்கே இருக்கலாம். ஆனல் எப்பொழுது சூர்யனும் சந்திரனும் வான மத்ய ரேகைக்கு வடக்கிலோ அல்லது தெற்கிலோ இரண்டும் ஒரே தூரத்தில் இருக்கிறதோ (declination) அப்பொழுது பூமியிலிருந்து பார்ப்பவர்களுக்கு சந்திரன், சூர்யனுக்கும், பார்ப்பவருக்கும், மத்தியில் இருக்கும். சூர்யனை சந்திரன் மறைக்கிறது. ஆகவே அதை சூர்ய கிரஹணம் என்கிரும். அவ்விதமே பௌர்ணமி தினத்தன்று சூர்யன் இருக்கும் ராசிக்கு நேர் ஏழாவது ராசியில் இரண்டிற்கும் 180 டிகிரி தூரம் இருக்கும். உதாரணமாக ஒருவனுக்கும் இடது கை புறத்தில் ஓர் விளக்கு இருக்கிறது. அவனது வலது கை புறம் ஒரு முகம் பார்க்கும் கண்ணடி இருப்பதாக எண்ணிக்கொள்வோம். அந்த மனிதன் விளக்கிற்கும் கண்ணடிக்கும் மத்தியில் நிற்கிருன். கண்ணடியை பார்க்கும்பொழுது விளக்கின் ஒளி கண்ணடியில் விழுந்து இவனுடைய வலது பாகத்தில் வெளிச்சத்தை அடிக்கிறது. இம் மனிதன் சிறிது சிறிதாக நகர்ந்தால் ஒரு சமயத்தில் விளக்கிற்கும் கண்ணடிக்கும் சேர்த்து ஒரு கோடு போடுவோமேயானல் அக் கோட்டை இம் மனிதன் மிதித்து தாண்ட நேரும். அவ்விதம் அவன் மிதிக்கும் பொழுது இந்த தீபவொளியானது மனிதனின் இடது பாகத்தில் விழும். கண்ணடியில் விழாது தடுக்கும். ஆகவே அதுவரை கண்ணடியில் இருந்து வந்த வெளிச்சம் இப்பொழுது வராது. அம்மனிதன் சற்று நகர்ந்துவிட்டால் இவனுடைய

இடது பாகத்தில் கண்ணுடி மூலமாக தீபத்தின் வெளிச்சம் பிரதிபலிக்கும். இவ்விதமே தான் தீபமான சூர்யனுக்கும் கண்ணுடி என்ற சந்திரனுக்கும் மத்தியில் மனிதன் எனும் பூமி சரியாக வரும்பொழுது பௌர்ணமி தினத்தன்று சந்திர கிரஹறணம் நேரிடும்.

வராஹமிஹிரா உபதேசித்துள்ள பஞ்ச சித்தாந்தத்தில் கிரஹறணம் எப்பொழுது பிடிக்க ஆரம்பிக்கும், எவ்வளவு காலம் நீடிக்கும், எப்பொழுது விடுமென விஸ்தாரமாக உபதேசித்துள்ளார். பிருஹத்சம்ஹிதையில் அவ்வளவு விரிவாக கணக்கை கொடுக்கவில்லை. ஆனால் கிரஹறணத்தன்று நாம் அறியக் கூடிய நன்மை, தீமைகளை உபதேசித்துள்ளார்.

கிரஹறணம், எப்பொழுது பிடிக்கும் என கணக்கில் வருகிறதோ அதற்குச் சற்று முன்பே ஏற்பட்டால், அந்த கிரஹறணம் எந்த ராசியில் ஏற்படுகிறதோ, அந்த ராசி குறிக்கும் நாட்டில் சண்டை, குழப்பம், கஷ்டம் உண்டாகும்.

எதிர் பார்க்கும் நேரத்திற்கு சற்று அப்பால் கிரஹறணம் பிடித்தால் கிரஹறணம் பிடிக்கும் பொழுது சூர்யனும் சந்திரனும் எந்த ராசியில் இருக்கின்றனரோ அந்த ராசிகள் குறிக்கும் நாட்டில் பயிர்கள் அழியும். புஷ்பங்கள் காய்க்காமலே வாடிவிடும் பழங்கள் கெட்டுவிடும். இவ்விதமாக சில மஹரிஷிகள் அபிப்ராயப் பட்டனர். ஆனால் ஒழுங்காக கணக்கிடின் தவறுதல்கள் ஏற்படாதென வராஹமிஹிரா தீர்மானமாக சொல்லி, மேற்கூறிய பலாபலன்கள் அனுவசியம் என உபதேசித்து உள்ளார். (த்ருக் தவருது - வாக்யம் தவறலாம்.)

ஒரே மாதத்தில் சந்திர கிரஹறணமும், சூரிய கிரஹறணமும் இருக்குமேயானல், சூர்யனும், சந்திரனும் எந்த ராசியில் இருக்கும் பொழுது கிரஹறணம் ஏற்படுகின்றதோ அந்த ராசிகள் குறிக்கும் நாடுகளில் உள்நாட்டு கலகமும், சண்டையும், ரத்த வெள்ளமும், மன்னனுக்கு அசுபலனும் இருக்கும்.

கிரஹறணம் பிடித்துக் கொண்டிருக்கும் காலத்தில் எந்த நாட்டில் உள்ளவர்களுக்குச் சூர்யன் உதயமாவது

போலாவது, அல்லது அஸ்தமிப்பது போலாவது இருந்தாலும் அல்லது சந்திரன் உதயமாகும் பொழுதாவது அஸ்தமிக்கும் பொழுதாவது இருந்தாலும் எந்நாட்டிலுள்ளோருக்கு உதயமாகவோ அஸ்தமனமாகவோ நேரிடுகிறதோ அந்நாட்டிற்கு அசுபலன்.

பாதி உதயம் ஆன பின்பு கிரஹணம் பிடிக்குமேயானால் கிழ்பட்ட மக்களுக்கு சிரமம்.

நமக்குக் கண்ணில் புலப்படும் ஆகாயத்தை ஏழு சம பங்கை போட்டுக் கொள்வதாக வைத்துக் கொள்வோம். கிழக்கிலிருந்து மேற்கு வரை 1, 2, 3 என்று எண்ணி மேற்கே அஸ்தமிக்கும் பொழுது தோன்றும் பாகத்தை 7 முடிவதாக கருதுவோம். அப்பொழுது கிரஹணம் ஆரம்பிக்கும் காலத்தில் முதல் பாகத்தில் சூர்யன் அல்லது சந்திரன் இருப்பின் நற்குணம் உள்ளோருக்கும், சன்மார்க்கத்தில் நடப்பவருக்கும், நகைள் செய்பவருக்கும் கஷ்டம்.

இரண்டாம் பாகத்தில் கிரஹணம் பிடிக்க ஆரம்பிக்குமேயானல் விவசாயிகள், வியாபாரிகள், ராஜஸ குணம் உள்ளவர்கள், சேனையின் அதிகாரி முதலியோருக்குத் துன்பம்.

மூன்றும் பாகத்தில் கிரஹணம் பிடிக்க ஆரம்பிப்பின் கலைஞர்களுக்கும், பாடகர், நடிகர், மந்திரி முதலியோருக்கும் அசுபபலன்.

சரியாக உச்சியில் அதாவது 4ம் பாகத்தில் கிரஹணம் பிடிக்க ஆரம்பிக்குமேயானல் அரசருக்கே ஆபத்து ஏற்படலாம். தான்யங்கள் எல்லாம் நியாயமான விலைக்கு கிடைக்கும்.

5வது பாகத்தில் கிரஹணம் பிடிக்க ஆரம்பித்தால் வியாபாரிகளுக்கும், மந்திரிகளுக்கும், நான்கு கால் பிராணிகளுக்கும், தன் இல்லத்தை விட்டு வெளியே வராது உள்ளேயே இருக்கும் ஜனங்களுக்கும் துக்கம்.

ஆருவது பாகத்தில் கிரஹணம் பிடிக்குமேயானல் பெண்களுக்கு நல்லதல்ல.

கடைசி பாகத்தில் கிரஹணம் பிடிக்க ஆரம்பித்தால் திருடர்களுக்கும், நாட்டின் எல்லையில் குடியிருப்பவர்களும் தீங்கு எனக்கருதவும்.

கிரஹணம் முடியும் காலத்தில் மேற்கூறிய பாகத்தில் எந்த பாகத்தில் கிரஹணம் விடுகிறதோ, அந்த பாகத்திற்கு ஏற்கனவே சொல்லப்பட்ட தீய பலன் நடைபெறாது. ஆனால் சுபபலனை அளிக்கும்.

சூர்ய உதயம் முதல் சுமார் 103 நிமிஷத்திற்கு ஒரு முறை ஒரு பாகமாகும்.

மேஷத்தில் சூர்யன் அல்லது சந்திரன் சஞ்சரிக்கும் பொழுது கிரஹணம் ஏற்பட்டால் காம்போஜ சூரசேன, கலிங்க, பாஞ்சால, ஒரிஸ்ஸா, நாட்டிலுள்ளவர்களுக்கும் அக்னியின் உதவியால் வேலை செய்பவருக்கும், படைசேனையில் வேலைசெய்பவருக்கும், வேடர்களுக்கும் நல்லதல்ல அவ்விதமே இங்கிலாந்து ஜெர்மனி, டென்மார்க், போலந்து பாலஸ்தீன், சிரியா, பர்கண்டி, நேபிள்ஸ், பிளாரன்ஸ் மார்ஷேஸ், கிராக்கோ சாரகோசா, நகர நாடு வாசிகளுக்கும் அசுபமான பலன்.

ரிஷப ராசியில் கிரகணம் பிடிக்குமேயானால் ஆடு மாடு மேய்ப்பவர்கள், அவைகளை வைத்து ரக்ஷிப்போர், மிகவும் உன்னத ஸ்திதியில் அடைந்துள்ளோர் இவர்களுக்கும், பெர்ஷியா ஜார்ஜியா, காகாஸஸ் ஏஷ்யாமைனர், சைப்ரஸ், அயர்லாந்து, ரஷியா, டப்ளின் முதலிய நகர நாட்டில் உள்ளோருக்கும் தீயபலன்,

மிதுன ராசியில் கிரஹணம் பிடிக்குமேயானால் உன்னத ஸ்திதியில் உள்ள பெண்களுக்கும், அரசர்களுக்கும், மந்திரிகளுக்கும், கலைஞர்களுக்கும், யமுனை நதிக்கரையில் உள்ளோருக்கும் பால்க் விராட ஷுமா இவர்களுக்கும், ஆர்மீனியா, கிழ் ஈஜிப்த், பெல்ஜியம். மேற்கு இங்கிலாந்து, பிளாரன் டார்ஸ். United States of America, வேல்ஸ், வடகிழக்கு ஆப்ரிக்கா, கனடா, லண்டன், சான்பிரான்சிஸ்கோ, மெல்போன், வர்சேல்ஸ் முதலிய நகர நாடுகளில் கஷ்டமுண்டாகும்.

கடக ராசியில் கிரஹணம் பிடிக்குமேயானால் அபீரர், சபரர், பல்லவர், குஸ்தி போடுபவர், மத்ஸ்யர் ஸாகபாஞ்சாலர், அங்கஹீனம் உள்ளவர்கள் ஆப்பிரிக்காவின் வடக்கு மேற்கு பாகம் ஸ்காட்லாந்து ஹாலந்து ஆம்ஸ்டர்டாம் Constcntinoble ஜெனேவா, வெனிஸ் நியூயார்க் மான்சஸ்டர் ஸ்டாக்ஹாம் முதலிய நாடு நகர வாசிகளுக்கும் உணவு பண்டங்களுக்கும் கஷ்டங்கள் உண்டாகும்.

சிம்ம ராசியில் ஏற்பட்டால், காட்டில் வசிப்பவருக்கும் வேட்டையாடுபவருக்கும், அரசருக்கும் நல்ல ஸ்திதியில் உள்ளவர்களுக்கும். பிரான்ஸ் இடாலி சிசிலி ஸெகோஸ்லோவிகியா மெஸபடோமியா கலிபோர்னியா ருமேனியா ரோம் பிரிஸ்டல் பம்பாய் சிகாகோ டமாஸ்கஸ் பிரேக் பிலடல்பியா போர்ட்ஸ் மௌத் முதலிய நாடு நகர வாசிகளுக்கு அசுபம்.

கன்னியில் கிரஹணம் ஏற்படுமேயானால் கவிஞர் எழுத்தாளர் பாடகர் நஞ்சையில் விளையும் தான்யங்கள் திருபுர தேசம் டர்கி இராக் கிரீஸ் பிரேஸில் கூர்டஸ்டான் ஸ்விட்ஜர்லாந்து வர்ஜீனியா ஜெரூஸெலம் பாரிஸ் பாஸ்டன் வியான் பர்லின் பக்தாத் முதலிய நாடு நகர வாசிகளுக்கும் அசுப பலன்.

துலாத்தில் ஏற்படுமேயானால் அவந்தி ஜனங்களுக்கும் மாரூ கச்சப தசரண மேற்கு எல்லையிலிருப்பவருக்கும் வியாபாரிகளுக்கும் ஆஸ்திரியா ஈஜிப்த் மேல் பாகம் திபெத் மங்கோலியா ஜப்பான் மன்சூரியா இன்டோசைனா பர்மா ஆர்ஜண்டனா லிஸ்பன் வியன்னா கபான்ஹாம் நாடு நகரங்களில் இருப்பவருக்கு அசுபம்.

விருச்சிகமேயானால் சோழர், மத்ரா உடும்பரர் ஜாதியாட ஜனங்களுக்கும் போர் வீரர்களுக்கும் மரங்களுக்கும் மொராகோ சிரியாவின் வடக்கு எல்லை நார்வே ஐட்லாந்து பவேரியா ஸ்வீடனின் மேற்கு பாகம் லாப்லாந்து, லிவர்புல் வாஷிங்டன் முதலிய நாடு நகர வாசிகளுக்குத் துன்பம்.

தனுசில் கிரகணமானல் பாஞ்சாலர் விதேஹ நாட்டில் உள்ளவர் ஸ்பெயின் ஆஸ்ட்ரேலியா மடகஸ்கர் அரேபியா

கல்கத்தா பீகிங் புடாபெஸ்ட் நாடு நகரங்களில் உள்ளவர்களுக்கும் வைத்தியர், வியாபாரி, ஆயுதம் பிரயோகம் செய்பவர்கள் முரட்டு சுபாவம் உள்ளவர்கள் குஸ்தி போடுபவர்கள் முதலியோருக்கு கஷ்டம்.

மகரத்தில் கிரஹணம பிடித்தால் மந்திரிகள் அவர் குடும்பம் கீழ் ஜாதியினர் மந்திரவாதிகள் மூலிகை உபயோகப்படுத்துவோர் வயது முதிந்தோர் அங்கஹீணமுள்ளவர் ஆயுதம் பிரயோகம் செய்பவர் மீன் இந்தியா ஆப்கானிஸ்தான பஞ்சாப் தென் ஆப்ரிக்கா பெல்கேரியா டோக்கியோ பிரிஸலஸ் ஆக்ஸ்போட் மாஸ்கோ வார்ஸாமுதலிய பிரதேசஙகளில் வசிப்போருக்கும் தீயபலன்.

குப்பராசியில் கிரஹணம் நடைபெறின் மலைபிராந்தியத்தில் உள்ளோருக்கும் மேற்கு பிரதேசத்திலுள்ளோருக்கும் திருடர்களுக்கும் உத்தம குணமுள்ளவர்களுக்கும் சிம்மாபுரத்தில் இருப்பவர்களுக்கும் அரேபியா சிகப்பு ரஷியா பிரஷியா போலந்து ஸ்வீடன் அபிஸீனியா பின்லாந்து சிட்னி முதலிய இடங்களில் உள்ளவர்களுக்கும் துன்பம்.

மீன ராசியில் கிரஹணமாயின், சமுத்திரத்தினின்றும், சமுத்திர கரையினின்றும் கிடைக்கும் பண்டங்களுக்கும், திரவத்தால் தனவசதி ஏற்படுபவருக்கும், உப்பு, முத்து முதலியன வியாபாரிகளுக்கும், படிப்பாளருக்கும், காட்டில் வசிப்பவருக்கும், போர்ச்சுகல், நார்மண்டி, ஸஹாரா, சிசிலி, மால்டா, சிலான், படேவியா, அலெக்ஸாண்டிரியா முதலிய இடங்களில் இருப்பவருக்கும், அசுப பலன்.

கிரஹணம் எந்த நக்ஷத்திரத்தில் பிடிக்கிறதோ அந்தந்த நக்ஷத்திரத்திற்கு கீழே கொடுக்கப்படும் ஜனங்களுக்கும் பண்டங்களுக்கும் துன்பமென அறியவும்.

அசுவனி: குதிரை, வியாபாரிகள், குதிரை சவாரி செய்வோர், சேனைத் தலைவர், வைத்தியக் கையாட்கள் வியாபாரிகள் அழகான ஜனங்கள் குதிரை லாயம் முதலியன.

பரணி: மாமிசம் உண்பவர், தான்யத்தின் தோல் வியாபாரி, துன்மார்க்கர், கீழ் குலத்தோர், கெட்ட சித்தம் உள்ளவர் கொலை புரிபவர்.

கிருத்திகை: வெள்ளை புஷ்பம் அக்னி ஹோத்திரம் செய்பவர் இலக்கணம் அறிந்தோர் புரோஹிதர் குருக்கள் ஜோதிடர் குயவர் நாவிதர் சுரங்கத்தில் வேலை செய்பவர்கள்.

ரோகிணி: விரதம் அனுஷ்டிப்பவர் தனவந்தர் யோகிகள் அரசர் பெரிய வியாபாரிகள் வண்டி ஓட்டுபவர பசு காளை மாடு ஜலத்திலுள்ள பிராணிகள் விவசாயிகள் மலையில் உள்ளோர், அதிகாரிகள்.

மிருக சீரிஷம்: வாசனை திரவியங்கள் அலங்கார பண்டங்கள் நீரில் கிடைக்கும் பண்டங்கள் பழவகை புஷ்பம் ரத்தினங்கள் பக்ஷி மிருகம் சங்கீதம் காதலர்கள் தூதர்கள் போஸ்டல் தந்தி மூலம் தன விருத்தி உள்ளவர்.

திருவாதிரை: திருடர்கள் துன்மார்கர் கொலையாளி பொய் பேசுபவர் பிறர் மனைவியிடம் பற்று உள்ளவர், தான்யத்தின் தோல் வியாபாரிகள்.

புனர்பூசம்: தனவந்தர், நுண்ணறிவு உள்ளவர், உண்மை பேசுபவர், அழகு வாய்ந்தவர், தர்ம சிந்தனை உள்ளோர், பெயரும், புகழும் பெற்றவர், விலை மதிப்புள்ள தான்யங்கள், வியாபாரிகள், சேவகர், கொளத்துக்காரர், சில்பி.

பூசம்: பார்லி, கோதுமை, அரிசி, கரும்பு, காடு, மந்திரி, அரசர், செம்படவர், தியாகிகள்.

ஆயில்யம்: கிழங்கு, பழம், வைத்தியர், கொள்ளை அடிப்பவர், தான்யத்தின் தோல், புழு, விஷ ஜந்துகள், போலி நாணயம் தயார் செய்வோர்.

மகம்: மிக தனவந்தர், மலையில் வசிப்போர், மரியாதை உள்ளவர், வீரர், மாமிசம் புசிப்பவர், பெண்களை வெறுப்வர், மலைவாசிகள், தான்யங்கள்.

பூரம்: நடிகர், இளைய தாசிகள், எதற்கும் இணங்கும் ஜனங்கள், பாடகர், கலைஞர், வியாபாரிகள், பருத்தி, உப்பு, தேன், எண்ணெய், சிறு குழந்தைகள்.

உத்திரம் : சாந்தம், உண்மை, அடக்கம் தயா தாக்ஷண்யம் ஞானம் இவைகள் எல்லாம் கூடிய ஜனங்கள் அதிக தனவந்தர் தம் கடமையை செய்வோர் அரசர்.

ஹஸ்தம் : சாஸ்திர ஞானம் உள்ளவர் வியாபாரி சுறு சுறுப்பானவர் கலைஞர் சாரதிகள் யானை, யானை பாகன் கொள்ளைகாரர்.

சித்திரை : நகை, நகை செய்வோர் வர்ணம் பூசுபவர் எழுத்தாளர் பாடகர் வாசனை திரவியம் மூலம் தனவிருத்தி உள்ளோர், கணக்கர், தறி நெய்பவர், கண் வைத்தியர்.

சுவாதி : பக்ஷி மிருகம் குதிரை வியாபாரிகள் தான்யம் கொத்து கடலை தீர்மானமான மனம் இல்லாதவர்கள் உலக இன்பங்களை துறந்தவர்கள்.

விசாகம் : சிகப்பு புஷ்பம், புஷ்பிக்கும் மரம், சிகப்பு பழங்கள் எள் பச்சை பயிறு பருத்தி உளுந்து கொத்து கடலை இந்திரன் அக்னி முதலியவற்றை வணங்குபவர்.

அனுஷம் : அதிகாரிகள், கிராம நகர தலைவர்கள் நல்லோரை நண்பராக உடையவர், கூட்டத்தில் தலைமை வகிப்போர் பிரயாணிகள் யோக்கியர் சரத்ருதுவில் விளையும் பண்டங்கள்.

கேட்டை : போர் வீரர் பெரிய குடும்பத்தில் பிறந்தோர் தனவந்தர் புகழ் பெற்றவர் படைத் தலைவர் சண்டையிடும் மனப்பான்மையுள்ள அரசர், திருடர்.

மூலம் : மருத்துவர் வைத்தியர் நகராக்ஷியில் அதிகாரி, புஷ்பம் கிழங்கு விதை இவைகளை வியாபாரம் செய்பவர் அதிக தனவந்தர் கிழங்கும் பழத்தையுமே புஜித்து ஜீவிப்பவர்.

பூராட்டம் : இளகிய மனமுடையோர் கடற்படை வீரர் மாலுமி கப்பல் வியாபாரி மீன், நீரிலுள்ள ஜந்துக்கள் உண்மையாளர் தனவந்தர் பாலம், அணை கட்டுபவர் தண்ணீர் இலாகாவில் தொழில் புரிபவர், அதிக சார் கொடுக்கும் பழங்களை விற்பவர், புஷ்ப வியாபாரி.

உத்திராடம், குஸ்தி செய்பவர் வீரர்கள் சேனையில் உத்யோகம் செய்பவர் இகலோக சுகத்தில் பற்று உள்ளவர் தெய்வ பக்தி உள்ளவர் குதிரை யானை.

திருவோணம்: உண்மை பேசுபவர் விஷ்ணுவை வணங்குபவர் எப்பொழுதும் சுறுசுறுப்பு எதையும் செய்ய சக்தி மாயாவிகள் கடமையை செலுத்துபவர்.

அவிட்டம்: கர்வம் படாடோபமற்றவர், வீர்யமற்றவர், திட புத்தியில்லாத நண்பர்களை உடையவர், மனைவியால் வெறுக்கப்பட்டவர், ஈகை இரக்கமுள்ளவர் அதிக தனவந்தர் சமாதானத்தையே நாடுபவர்.

சதயம்: ஜல பண்டங்கள் மீன் வலை வீசி பிராணிகளை பிடித்து வியாபாரம் செய்பவர், பன்றி, வியாபாரி, சலவை செய்பவர் பறவை வேட்டையாடுபவர், சாராயம் போன்றவைகளை காய்ச்சுபவர்.

பூரட்டாதி: கொலை கொள்ளை செய்பவர்கள் லோபி கீழ்தரமான புத்தியுடையவர் நற்குணமே இல்லாதவர் குல தர்மத்தை அனுஷ்டிக்காதவர் சண்டையிடும் சித்தம் உள்ளோர்.

உத்திரட்டாதி: தியாகி, தன் கடமையை செய்வோர், த்யானம், ஜபதப செய்பவர், தனவந்தர் சந்யாசி மன்னர் விலையுயர்ந்த தான்யம் வியாபாரம் செய்பவர்.

ரேவதி: அதிக ரசமுள்ள பழம், புஷ்பம், உப்பு, நவ ரத்தினம், மாணிக்கம், முத்து, அல்லி, சங்கு, வாசனை திரவியங்கள், வாசனை புஷ்பம், வியாபாரி, தலைமை ஸ்தானம் வகிப்பவர்.

மேற்கூறிய நக்ஷத்திரங்களில் கிரஹணம் பிடித்தால் மேலே ஒவ்வொரு நக்ஷத்திரத்திற்கும் சொல்லப்பட்ட வஸ்துக்கள், பிராணிகள் முதலியோருக்கு பொதுவாக ஸ்ரமம் என அறியவேண்டும். எப்பொழுது சிரமம் வரும், எவ்வளவு காலம் நீடிக்கும் என்பதை அப்பால் காணலாம்.

கிரஹண காலத்தில் இதர கிரகங்களின் சம்பந்தமேற்படுவதால் நேரிடும் பலன்கள்:—

கிரஹணம் ஏற்படும்பொழுது சூர்யனுக்கோ சந்திரனுக்கோ செவ்வாயின் சம்பந்தம் வரின், சூர்யன் சந்திரன் இருக்கும் ராசிகளுக்குச் சொல்லப்பட்டுள்ள நாடு நகரங்களில் குழப்பமும். சண்டையும், அக்னியினுல் ஆபத்தும், திருட்டு பயமும் இருக்கும்.

புதனுக்கு சம்பந்தம்வரின் நெய், தேன், எண்ணெய் இவைகள் விலை ஏறும். அரசர்களுக்கு கஷ்டம் நேரும். சூர்ய சந்திரன் இருக்கும் ராசிக்குச் சொல்லப்பட்ட நாடு நகரவாசிகளுக்கு தான் இப்பொழுது கூறும் பலன்கள் நடைபெறும்.

சுக்ரனுக்கு சம்பந்தம் வரின் தான்யங்கள் நாசமாவது, நிலத்தின் மூலம் கஷ்டம், மேலும் எந்த ராசியில் சூர்ய சந்திரன் இருந்தனரோ அந்த ராசிக்குரிய நாடு நகரவாசிகளுக்கு உணவு மூலமும் இதர விஷயங்கள் மூலமும் துன்பம் நேரிடும்.

சனிக்கு சம்பந்தம் வரின் மழை பெய்யாது கஷ்டம், திருடர்கள் மூலம் நஷ்டம். பஞ்சத்தால் வரும் மேலும் கஷ்டம்.

கிரஹண ஆரம்பகாலத்திலோ முடியும்பொழுதோ இதர கிரகங்களின் சம்பந்தத்தால், நேரிடும் பலனை எல்லாம் குருவின் பார்வை ஏற்படுமேயாயின், சுபமாகவே முடியும். கஷ்டம் இராது.

கிரஹண காலத்தில் சூர்யனுடனோ, சந்திரனுடனோ செவ்வாய் மிக அருகாமையில் சேர்ந்திருப்பின் காவிரி தீரம், நர்மதை தீரம், அவந்தி இந்நாட்டில் உள்ளோருக்கும், கர்வம் படைத்த மன்னர்களுக்கும் அசுப பலன்.

சூர்யனுக்கு மிக அருகாமையில் புதனிருக்க (Combust) கங்கைக்கும் யமுனைக்கும் மத்தியிலுள்ள நாட்டினருக்கும், சரயூநதி தீரத்தில் வசிப்பவருக்கும், நேபால் வாசிகளுக்கும்

கியக்கு கடற்கரையில் வசிப்பவருக்கும், குழந்தைகள் பெண்கள், வித்வான்கள், அரசர், வீரர் முதலானோருக்கு கஷ்டபலன்.

சூர்ய சந்திரருக்கு குருவின் பார்வை ஏற்பட்டால் மேலே சொன்னபடி கெட்டபலன் நடைபெறாது. ஆனால் குரு சூர்யனுடனோ, சந்திரனுடனோ மிக அருகாமையில் சேரின் படிப்பாளிகள், அரசர், மந்திரி, யானை குதிரை, சிந்து நதிகரையில் உள்ளவர், அதற்கு வடக்கே உள்ளவர்களுக்கும் தீங்கு,

சுக்கிரன் கிரஹண காலத்தில் சூர்யனுக்கு மிக அருகாமையிலிருப்பின் பெண்மணிகளுக்கும், மந்திரிகளுக்கும், காட்டு மனிதர்களுக்கும், கேகேயா ஆர்யவர்த நாட்டில் உள்ளோருக்கும் கஷ்டம்.

சனி கிரஹண காலத்தில் சூர்யனுக்கு மிக அருகாமையிலிருப்பின் பாலைவனத்திலுள்ளோருக்கும் சௌராஷ்டிரர்களுக்கும், பூமியினின்று எடுக்கும் பண்டங்களுக்கும், கீழ் ஜாதியினருக்கும், மாடு, பசு முதலியவற்றிற்கும், பாரியாத்ரா, மலைவாசிகளுக்கும் சீக்கிரமே கஷ்டம்.

சூர்ய கிரகணமோ, சந்திரகிரகணமோ (கார்த்திகை மாதம வளர்பிறை ப்ரதமை மார்கழி மாதம் அமாவாசைக்குள்) கார்த்திகை மாதத்தில் வரின்; அக்னியால் வேலை செய்து தனவிருத்தி செய்வோருக்கும், மகதம், கோஸலம், கலமாஷ, சூரஸேன வாஸிகளுக்கும், காசியில் உல்லோருக்கும் கலிங்க நாட்டிலுள்ளவர்களுக்கும் அசுப பலன் க்ஷத்ரியர்களுக்கு நல்லதல்ல மற்றவர்களுக்கு உற்சாகமும், நன்மையும் சகலசுகமும் ஏற்படும்.

மார்கசீர மாதமானல்: கோஸல, காஷ்மீர், புண்டரநாட்டினர்களுக்கு கஷ்டம். வனமிருகங்களும், மேற்கே வசிப்பவர்களுக்கும் தீங்கு. ஸோமயாசிகளுக்கும் ஸ்ரமம். இதர நாடுகளில் நல்ல மழையும், சந்தோஷமும், விருத்தியும் இருக்கும்.

புஷ்ய மாதமானல்: (மார்கழிமாதம் அமாவாசை ஆன பின்பு, வளர்பிறை ப்ரதமை முதல், தைமாதம் அமாவாசை

முடிய) சைந்தவர், குக்குரர், விதேகர், க்ஷத்ரியர், ஸன்மார்க்கத்தில் வாழ்பவர். முதலியவர்களுக்கு இடையூறு கஷ்டம். எங்கும் மழை குறைவு; பஞ்சமும் பீதியும் உண்டாகும்.

மகமாதமானல்: (தைமாதம் வளர்பிறை ப்ரதமை முதல். மாசிமாதம் அமாவாசை முடிய) மரியாதையுடனும், பெரியோர்களுக்கு அடங்கி நடந்து வருபவருக்கும், வஸிஷ்ட கோத்ரத்தில் ஜனிப்பவர்களுக்கும், தமது கடமையை உணர்ந்து நடப்பவருக்கும். வங்க, அங்க, காசி நாட்டிலுள்ளோருக்கும், யானை, குதிரைக்கும் நன்றன்று. மழை உண்டு. விவசாயிகளுக்கு மிக நன்று.

பல்குன மாதமானல்: வங்க, அஸ்மக, அவந்திக நாட்டில் உள்ளோரும். மேகல மலையிலுள்ளோரும், நடனத்தில் தேர்ச்சி யடைந்தவரும், விவசாயிகளும், நல்ல பெண்மணிகளும், அம்பு ஆயுதம் தயார் செய்பவர்களும் சன்யாசிகளும் ஸ்ரமத்திற்குள்ளாவார்கள்.

சைத்ர மாதமானல்: (பங்குனி வளர்பிறை ப்ரதமை முதல் சித்ரைமாதம் அமாவாசை முடிய) கலைஞர்களும், எழுத்தாளரும், சங்கீத வித்வான்களும், நடனம் புரிவோரும், வேதம் ஓதுவோரும், நகை, பாத்திரம் செய்பவரும், பௌண்ட்ர உட்ர, கைகேய, அஸ்மக நாட்டில் உள்ளோர்களுக்கும கஷ்டம். தேவேந்திரனின் குணம் தற்காலம் மாறவே, சில பாகங்களில் மழையும், சில பாகங்களில் மழையே யில்லாமலும், அதிவ்ருஷ்டி, அனுவ்ருஷ்டி என இரண்டாலும் தொந்திரவு உண்டாகும்.

வைசாகமாதமாயின் பஞ்சு, பருத்தி, எள்ளு, பச்சை பயறு விளைவு குறையும். விலை ஏறும். இக்ஷ்வாகு, யௌதேயர், சாகர், கலிங்க நாட்டு ஜனங்கள் கஷ்டப்படுவார். இதர பயிர்கள் செழித்தோங்கும், மற்றவர்களுக்கு சுபிக்ஷமான பலன்.

ஜேஷ்டாமாதமாயின் (வைகாசி மாதம் வளர்பிறைப்ரதமை முதல் ஆனி மாதம் அமாவாசை முடிய) ராஜா, ராணி நல்லொழுக்கமுள்ளவர், கூட்டம் கூட்டமாய் கூடும் ஜனங்கள், அழகான புருஷர்கள், ஸால்வர்கள், வேடர்கள் முதலியோருக்கு கஷ்டம். மழையிராது.

ஆஷாட்மாதமாயின், குளத்தங்கரை, ஏரிக்கரைகள் நாசமடையும். ஆற்றில் நீர் வற்றி விடும். கிணறுகள் வறண்டு விடும். காந்தார, காஷ்மீர், புலிந்தர், சைனுக்காரர், கஷ்டப்படுவர். மழை ஒழுங்காக எங்கும் சமமாகப் பெய்யாது.

ஸ்ரவணமாதமாயின் காஷ்மீர், புளிந்தா, சைனுக்காரர், யவணர், குருக்ஷேத்திரத்தில் ஜனித்தவர். கந்தாரா இந்தியாவின் மத்தியப்பிரதேசம், காம்போஜர் முதலிய நாட்டிலுள்ளோர், குதிரை, கழுதை, சரத்ருதுவில் விளையும் பயிர்கள் இவைகளுக்கெல்லாம் பற்பல கஷ்டங்கள். மேலே குறிப்பிட்டவைகள் தவிர மற்றவர்களுக்கு மிக நன்மையுண்டாகும்.

பாத்ரபதமாதமாயின் கலிங்கர், மதகர், ஸௌராஷ்டிரர், மிலேச்சர், சுவீரர், தாரதர், அஸ்மாகர் கஷ்டப்படுவார்கள். ப்ரசவகாலங்களில் மிக கஷ்டம்: வேதனை: ஆனால் இதர இடங்களில் இன்பமதிகம்: சுபீக்ஷமுண்டாகும்.

க்ரஹணம் ஏற்பட்டு ஏழு நாட்களில் புழல்காற்று அடித்தால், பஞ்சமேற்படும். அதிகப் பனி பெய்தால் தொத்து வியாதி பரவும். பூகம்பம் ஒரு வாரத்திற்குள் வந்தால், முக்யமான ஓர் அரசனுக்கு மரணமேற்படலாம். ஒரு வாரத்திற்குள் மீடியார் விழுந்தால் மந்திரிக்கு ஆபத்து. இடி இடித்தால், ப்ரசவத்தில் கஷ்டம். மின்னல்கள் இருப்பின் அரசரிடமிருந்தும் பாம்பின் மூலம் ஸ்ரமம். நல்ல மழை பெய்தால், சுபீக்ஷமதிகம். சமாதானம் நிலவும். உற்சாகமதிகமாகும்.

சந்திரகிரகணம் முடிந்து 15 தினங்களில் சூர்யகிரகணம் வருமேயானால், ஜனங்கள் மூர்க்க குணம் பெற்று, நியாயமாக நடக்கமாட்டார்கள். தம்பதிகளுக்குள் சச்சரவு உண்டாகும்.

ஆகவே எவருடைய ராசிநக்ஷத்ரங்களில் கிரகணம் பிடிக்கிறதோ, அவர்கள் எச்சரிக்கையுடனிருந்து, கஷ்டம் வராமல் தடுத்துக்கொள்ள முயல வேண்டும். கோபம்

வரின், அடக்கிக் கொண்டு சமாளிக்க வேண்டும். பசு உடை, ஆடைதானம் செய்தால் கஷ்டம் விலகும். சாந்தி செய்வது நன்று.

சூர்யகிரகணம் ஏற்பட்டு 15 தினங்களில் சந்திர கிரகணம் ஏற்படுமேயானால், ப்ராமணர்கள் பல யாகம், ஹோமம் செய்து கர்மத்தையும் தர்மத்தையும் விடாமல் இருப்பர். தெய்வானுகூலம் சகல ஜனங்களுக்கும் உண்டாகும். யாவரும் மன நிம்மதியுடன் வாழ்வார்.

கிரகணம் பிடித்திருக்கும்பொழுது ஓர் குழந்தை ஜனனமாகி, லக்னத்திற்கு ஒரு பாப கிரகத்தின் சம்பந்தமும் இருக்குமேயானால் அக்குழந்தை $1\frac{1}{2}$ அல்லது 3 மாதங்களே உயிருடனிருக்கும் என பிரிதுயாஸஸ் உபதேசிக்கிறார்.

மேஷம், சிம்மம், தனுசு ராசிகளில் கிரகணம் ஏற்படின் நாட்டில் குழப்பமும், சச்சரவும், சண்டை வருமோ என திகிலும், முக்கியமான அதிகாரிகளுக்கு ஆபத்தும், நாட்டில் கொலையும், மழை குறைவும் உஷ்ணம் அதிகமும், வரியில் உயர்வுமாகும்.

ரிஷப, கன்னி, மகரத்தில் வருமேயானால் மழை குறைவு, சாமான்கள் பாழடையும், விளைவு குறையும், பண்டங்கள் கிடைக்காததால் கஷ்டம் அதிகம், விவசாயமும், வியாபாரமும் திருப்தி அளிக்காது. பணநெருக்கடி ஏற்படும். அரசாங்க அதிகாரிகளுக்கு அத்ருஷ்ட குறைவு.

மிதுன, துலா, கும்பராசிகளில் கிரகணம் ஏற்படுமேயானால் பக்கத்திலுள்ள தேசங்களுடன் நட்பு குறையும். ஏற்கனவே செய்திருந்த ஒப்பந்தத்தை மீறலாம். உள்நாட்டிலுள்ள கழகங்களுக்குள்ளும் கக்ஷிகளுக்குள்ளும் மனத்தாங்கல். ஒற்றுமை இராது.

கடக, விருச்சிக, மீன ராசியில் கிரகணம் ஏற்படுமேயானால் அதிக மழை, வெள்ளத்தால் உடைப்பும், சேதமும் பயிர் அழியும். ஆற்றிலும், கடலிலும் ஆபத்து. காலரா. டைபாயிட் போன்ற நோய் அதிகரிக்கும். பிரபல மனிதர்

களில் யாராவது மரண மடைவர், உழைப்பாளிகளுக்கு சிரமம் இருக்கும். போதும் என்ற மனம் இல்லாமல் குறையுடன் வேதனை படுவர்.

சரராசியில் கிரகணம் ஏற்படின் அரசியலில் சிலர் மாறுவர். ஜனங்களுக்கும், பயிர்களுக்கும், வியாபாரிக்கும் நல்லதல்ல.

ஸ்திர ராசியில் ஏற்பட்டால் பூகம்பத்தால் சேதம், வீடுகள் விழும், பஞ்சம் உண்டாகும், தொத்துநோய் அதிகரிக்கும், பணநெருக்கடி யாவருக்கும் இருக்கும். திடீரென ஆபத்துக்கள் நேரிடும்.

உபயராசியில் ஏற்பட்டால், சேவகர்கள் தங்கள் குறைகளுக்கு நிவர்த்தி காண வேலை நிறுத்தம் செய்வர். சட்டத்தை மீறி நடப்பது, நோயால் வருந்துவது, யாத்திரையில் கஷ்டம், ஆபத்து,

தத்தம் ஜாதகத்திற்கு பார்க்கவேண்டுமானால் முதலில் தனது ஜாதகத்தை ஒழுங்காக துல்லியமாக கணித்து வைத்துக்கொள்ள வேண்டும். லக்ன பாவம் தசமபாவம்; கிரகங்கள் இவைகளெல்லாம் எந்த டிகிரியில் இருக்கின்றன என்பதை குறிக்கவேண்டும். அப்பால் கிரகணம் பிடிக்கும் தினத்தன்று, கிரகம் பிடிக்கும் நேரத்தில் சூர்யனும் சந்திரனும் எந்த டிகிரியில் இருக்கிறதென பார்க்க வேண்டும். அப்பால் தனது லக்னத்திற்கும் கிரஹணம் பிடிக்கும் டிகிரிக்கும் உள்ள தூரம எத்தனை டிகிரி என பார்க்கவும். அவ்விதமே 10-ம் பாவத்திற்கும் (Meridian) கிரஹணம் பிடிக்கும் டிகிரிக்கும் உள்ள தூரத்தை பார்க்க வேண்டும். ஜனன காலத்தில் கிரஹங்கள் இருந்த டிகிரிக்கும் கிரஹணம் பிடிக்கும் டிகிரிக்குமுள்ள தூரத்தை குறித்துக்கொள்ள வேண்டும். அப்பால் இவைகள் 30°, 36°, 60°, 72°, 108°, 120°, 144° தூரத்தில் ஏற்பட்டால் எந்த கிரஹத்துடனோ அல்லது பாவத்துடனோ மேற்கூறிய சுபதிருஷ்டி ஏற்படுகிறதோ அவைகள் மூலம் சுப பலன் எதிர்பார்க்கலாம். ஆனால் இவைகளுக்கு உள்ள தூரம் 22½°, 45°, 67½° 90°, 135°, 150°,

இருக்குமேயானால் அசுப திருஷ்டி ஆவதால் அசுப பலனே ஏற்படும். கிரஹங்களோ, பாவங்களோ இருக்கும் டிகிரியிலேயே ஏற்படுமேயானால் அந்த கிரஹம், பாவம் மூலம் அறியக்கூடிய விஷயங்கள் அசுப பலனை அளிக்கும். லக்ன பாவத்தில் ஏற்பட்டால் நோய் வரலாம். ஆபத்துக்கள் உண்டாகலாம். 10-ம் பாவத்தில் ஏற்பட்டால் தனது உத்யோகம் தொழில் இவற்றில் கஷ்டமோ, நஷ்டமோ, சூர்ய சந்திரர்கள் இருக்கும் டிகிரியில் கிரஹணம் வருமேயானால் தொழிலில் மாறுதலும், நிம்மதி குறையும், தேக அசௌக்யமும், முன்னேறவிடாது இடையூறும், யத்தனம் பலிக்காது வேதனையும் இருக்கும்.

மேலும் கிரஹணத்தைக்கொண்டு அறியக்கூடிய விஷயங்களை அடுத்துவரும் புஸ்தகங்களில் காண்க.

உதயம், அஸ்தமனமென, கிரகங்களின் சாரங்களில் நாம் சொல்வதின் பொருளை விளக்குகிறேன். ஒரு ரஸ்தா. அதன் ஓர் பக்கத்தில் நாம் உட்கார்ந்திருப்பதாகக் கருதுவோம். அப்பொழுது ரஸ்தாவின் மத்தியில் யானை நடந்து வருகிறது. யானையின் வேகத்தைவிட மெதுவாக ஒரு பையன் யானைக்கு முன்னாலும், நமக்கும் யானைக்கும் நடுவில் நடக்காமல், யானைக்கு அப்பாலும் ரஸ்தாவின் அடுத்த புறத்திலும் நடக்கிறான். முதலில் பையனும், யானையும் தனித் தனியாகத் தெரியும். பிறகு, யானை பையனை நெருங்கியதும், பையன் மறைந்து விடுவான். அவ்விதமே மெதுவாகச் செல்லும் கிரகத்தை ஒரே வேகத்தில் செல்வதுபோல் தோன்றும் சூர்யன் மறைத்துவிடும். அதுவே அஸ்தமனம். யானை எந்த திக்கை நோக்கி செல்கிறதோ, அதே திக்கை நோக்கியும், அல்லது வக்ரமாய் எதிராகவும் வரலாம். மறையும் காலமே அஸ்தமனம். அப்பால், திரும்ப, யானை தனியாகவும், பையன் தனியாகவும் தெரியும் காலம் உதயம் எனப்படும். இதன் பலாபலனை, அடுத்த புத்தகத்தில் பார்க்கவும்.

## வாரங்கள்

| | |
|---|---|
| ஞா | ஞாயிற்றுக்கிழமை |
| திங் | திங்கட்கிழமை |
| செவ் | செவ்வாய்க்கிழமை |
| புத | புதன்கிழமை |
| வியா | வியாழக்கிழமை |
| வெ | வெள்ளிக்கிழமை |
| சனி | சனிக்கிழமை |

## திதிகள்

| | |
|---|---|
| பிர | பிரதமை |
| துதி | துதியை |
| திரு | திருதியை |
| சது | சதுர்த்தி |
| பஞ் | பஞ்சமி |
| சஷ் | சஷ்டி |
| சப் | சப்தமி |
| அஷ | அஷ்டமி |
| நவ | நவமி |
| தச | தசமி |
| ஏகா | ஏகாதசி |
| துவா | துவாதசி |
| திர | திரயோதசி |
| சசி | சதுர்தசி |
| பௌ | பௌர்ணமி |
| அமா | அமாவாசை |

## நக்ஷத்திரங்கள்

| | |
|---|---|
| அசு | அசுவதி |
| பர | பரணி |
| கிரு | கிருத்திகை |
| ரோ | ரோகிணி |
| மிரு | மிருகசீரிஷம் |
| திரு | திருவாதிரை |
| புன | புனர்பூசம் |
| பூச | பூசம் |
| ஆயி | ஆயில்யம் |
| மக | மகம் |
| பூர | பூரம் |
| உத் | உத்திரம் |
| அஸ் | அஸ்தம் |
| சித் | சித்திரை |
| சுவா | சுவாதி |
| விசா | விசாகம் |
| அனு | அனுஷம் |
| கேட் | கேட்டை |
| மூல | மூலம் |
| பூரா | பூராடம் |
| உத்தி | உத்திராடம் |
| திரு | திருவோணம் |
| அவி | அவிட்டம் |
| சத | சதயம் |
| பூரட் | பூரட்டாதி |
| உட் | உத்திரட்டாதி |
| ரேவ | ரேவதி |

## யோகங்கள்

| | |
|---|---|
| விஷ் | விஷ்கம்பம் |
| ப்ரீ | ப்ரீதி |
| ஆயு | ஆயுஷ்மான் |
| சௌ | சௌபாக்கியம் |
| சோ | சோபனம் |
| அதி | அதிகண்டம் |
| சுக | சுகர்மம் |
| திரு | திருதி |
| சூல | சூலம் |
| கண் | கண்டம் |
| விரு | விருத்தி |
| துரு | துருவம் |

**வாரங்கள்**

| | |
|---|---|
| வ்யா | வ்யாகாதம் |
| ஹர் | ஹர்ஷணம் |
| வஜ் | வஜ்ரம் |
| சித்தி | சித்தி |
| வ்யதீ | வ்யதீபாதம் |
| வரி | வரியான் |
| பரி | பரிகம் |
| சிவ | சிவம் |
| சித் | சித்தம் |
| சாத் | சாத்தியம் |
| சுப | சுபம் |
| சுப் | சுப்பிரம் |
| பிரா | பிராம்யம் |
| ஐந் | ஐந்திரம் |
| வை | வைதிருதி |

**கரணங்கள்**

| | |
|---|---|
| பவ | பவம் |
| பால | பாலவம் |
| கௌ | கௌலம் |
| தை | தைதுலம் |
| கர | கரசை |
| வணி | வணிசை |
| பத் | பத்திரை |
| சகு | சகுனி |
| சது | சதுஷ்பாதம் |
| நாக | நாகவம் |
| கிம் | கிம்ஸ்துக்கினம் |

**அமிர்தாதி யோகங்கள்**

| | |
|---|---|
| அ | அமிர்தயோகம் |
| சி | சித்தயோகம் |
| ம | மரணயோகம் |
| பி | பிரபலாரிஷ்டம் |

# BIBLIOGRAPHY


| | |
|---|---|
| பிருஹத் ஸம்ஹிதை | வராஹமிஹிரா |
| பிருஹத் ஜாதகம் | வராஹமிஹிரா |
| ஹோரஸாரா | ப்ரித்யுஸஸ் |
| ஜாதக பாரிஜாதம் | வைத்யநாத தீக்ஷிதர் |
| ஜாதக தத்துவம் | மஹாதேவன் |
| உத்திரகாலம்ருதம் | காளிதாஸர் |
| ஜாதக தேசமார்க்கம் | மலபார் பொதுமனேசோமாத்ரி |
| ஜாதக அலங்காரம் | கணேச தேவஞர். |
| ஸங்கேதநிதி | ராமதயாளு |
| நாடி கிரந்தம் | மீனு |

ஸர்வார்த்த சிந்தாமணி, பராசர ஸம்ஹிதை, பலதீபிகை, ஸ்ரீபதிபத்ததி, சினேந்திரமாலை, முதலியனவும், மற்றும் C. G. ராஜன் அவர்களால் ப்ரசுரிக்கப்பட்ட எல்லா புத்தகங்களும்.

| | |
|---|---|
| How to Judge anativity | Alan Leo |
| The Key to your nativity | Alan Leo |
| Practical Astrology | Alan Leo |
| Horary Astrology | Alan Leo |
| A to Z | Llewellyn George |
| Astrology its Ethics and Technics | C. Aq. Libra |
| Practical Astrology | De. Saint Germain |
| Practical Astrology | Carter |
| Practical Astrology | Parker |
| Everyday Astrology | V. A. K. Iyer |
| Scientific Astrology | Suryanarayana Rao |
| Manual of Astrology | Sepharial |
| What the Stars foretell | Jupiter |

---

மலரின் புதுமை
யுடனும்
மலரின்
எழிலுடனும்
விளங்குங்கள்






டாடாவின

# ஹமாம்

டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

**TATA OIL MILLS CO., LTD.,**

**Sales Offices: Indian Chamber Buildings, Esplanade, Madras-1.**

எப்ரல் 14உ முதல்

எம்.ஏ.வி பிக்சர்ஸ்

# சம்பூர்ண ராமாயணம்

டைரக்ஷன்
K. சோமு

திரைக்கதை-வசனம்
A.P. நாகராஜன்

சங்கீதம்
K.V. மஹாதேவன்

பாடல்கள்
மருதகாசி

தயாரிப்பு
M.A. வேணு

ஸ்டுடியோ
ரத்னா. சேலம்.



BHARAT STUDIO

MAV PICTURES SALEM

ஒரு வாரத்திற்கு முன்னதாகவே உங்கள் சீட்டுகளை ரிசர்வு செய்து கொள்ளலாம்.

ஸ்ரீ ஸுதர்சன் பிரஸ், சென்னை-6.